# நீதிநெறிக் கதைகள்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# நீதிநெறிக் கதைகள்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

திரு. C. கனகராஜன்,






வெளியிடுவோர் :

## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா.

விலை ] 1983 [ ரூ. 7-00

# பொருளடக்கம்

ஓம்

# நீதிநெறிக் கதைகள்

## இப்புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும், விலாசமும். | ரூபாய் |
|---|---|---|
| 1 | திரு. R. சுப்பரமணியம் செட்டியார் & திருமதி. S. நாகம்மாள், சேலம்-9. ... | 500 |
| 2 | திரு. A. S. தனுஷ்கோடி, Prop. நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ, தேனி, மதுரை மாவட்டம். ... | 300 |
| 3 | ஸ்ரீ சுவாமி நிர்மலானந்தா சிவானந்தா ஆஸ்ரமம், ரிஷிகேஷ், இமயமலை. ... | 250 |
| 4 | 'குருபக்தி ரத்ன' திரு. M. S. A. ஜெயராம், தலைவர்: தெய்வீக வாழ்க்கைச் சங்கம், Prop: ஜெயராம் டெக்ஸ்டைல்ஸ், இராசிபுரம். ... | 100 |
| 5 | 'ஞானதான வள்ளல்' திரு. S. கோவிந்தசாமி முதலியார் & திருமதி. தனலக்ஷ்மி அம்மாள், ஈரோடு-1. ... | 101 |
| 6 | திரு. மகா. கோவிந்தசாமி, 'சங்கர ஆஸ்ரமம்' கொப்பமாபுரி–621 012. ... | 100 |
| 7 | கலிங்கா டெக்ஸ்டைல்ஸ், ஈரோடு-1. ... | 100 |
| 8 | 'முருகனடிமை' திரு. அ. அன்புமணி, 'ஸ்ரீ முருகன் ஸ்டோர்ஸ்' திருச்செங்கோடு. ... | 101 |
| 9 | திரு. P. கணபதி கவுண்டர், 'முன்சீப் தோட்டம்' அரியாகவுண்டம்பட்டி. ... | 101 |
| 10 | திரு. L. V. கிருஷ்ணமூர்த்தி, 67, Dinesh Mahal, மாதுங்கா, பாம்பே-400 019. ... | 100 |
| 11 | திரு V. சிங்காரவேல் & பிரதர்ஸ், வேல் கட்பீஸ் சென்டர் & வேல் குருப்ஸ், சேலம்-1. ... | 100 |
| 12 | திரு. M. பாலசுப்பரமண்யம், Prop: அசோக் லாட்ஜ், நாமக்கல். ... | 100 |

| | | | |
|---|---|---|---|
| 13 | அருட் செல்வன் J. செந்தில்குமார்,<br>இராசிபுரம். | ... | 100 |
| 14 | செல்வி P. T. தேவகி, தலைமை ஆசிரியை,<br>திருவேங்கட விலாஸ் நடுநிலைப் பள்ளி,<br>இராசிபுரம். | ... | 100 |
| 15 | ஸ்ரீ ஆண்டாள் & கோ.,<br>கொமாரபாளையம்-638 183. | ... | 100 |
| 16 | திரு. S. K அரியப்ப செட்டியார் & சன்ஸ்,<br>பாரத் பெட்ரோலியம் & உரம் வியாபாரம்,<br>இராசிபுரம். | ... | 100 |
| 17 | திரு. S. V. இராமசாமிக் கவுண்டர்,<br>'சீராப்பள்ளியார் தோட்டம்'<br>சின்னபள்ளிபாளையம், திருச்சி Dt. | ... | 100 |
| 18 | திரு. S. ஷண்முகநாதன், B. Sc.,<br>விருதுநகர். | ... | 108 |
| 19 | திரு. P. சீனிவாசன், 'சுதர்ஸன்'<br>திலக் நகர், பாம்பே-89. | ... | 101 |
| 20 | 'குருபக்தி ரத்னு' திரு. V. A. அண்ணமலை,<br>இரும்பு & பெயிண்ட் வியாபாரம், மதுரை-1. | ... | 101 |
| 21 | 'அருட்செல்வன்' ஸ்ரீராம்<br>S/o. D. செல்வராஜ், B. Sc , B. Ed.,<br>திருசெங்கோடு. | ... | 100 |
| 22 | Sri. K. Ananthaswamy,<br>Sivananda Krupa, Bangalore-3. | ... | 100 |
| 23 | திரு. M. தங்கமணி, M. Sc.,<br>Prop: போட்டோ சென்டர், திண்டுக்கல். | ... | 100 |
| 24 | திரு. N. P. S. S. நடராஜ நாடார்,<br>Chairman YENPEYESS RUBBER P. LTD.,<br>சிவகாசி. | ... | 100 |
| 25 | திரு. S. K. மயில்சாமி கவுண்டர்,<br>S. K. M. கோழித்தீவனம், ஈரோடு-2. | ... | 100 |
| 26 | திரு V. சவுண்டப்பன்,<br>யோகமாயா டெக்ஸ்டைல்ஸ், வேம்படிதாளம் | ... | 100 |
| 27 | திரு. V. R. சாமியப்பன், ஈரோடு. | ... | 100 |
| 28 | செல்வி G. R. மீனுட்சி, B. Sc., B. Ed.,<br>தலைமை ஆசிரியை, வித்யா மந்திர்,<br>இராசிபுரம். | ... | 101 |

| | | | |
|---|---|---|---|
| 29 | திருமதி சந்திரா ராஜு,<br>89, புத்தர் வீதி, கொமாரபாளையம் - 638183 | ... | 100 |
| 30 | திரு. K. A. A. சங்கரலிங்கம்,<br>தொழிலதிபர், திருநெல்வேலி-1. | ... | 100 |
| 31 | திரு. K. கேஸ்வர்,<br>ரயில்வே கார்டு - A சேலம்-5. | ... | 100 |
| 32 | திரு. C. K. ரங்கசாமி கவுண்டர்,<br>சுண்டம்பாளையம், கோவை-7. | ... | 100 |
| 33 | திருமதி ரேவதி சிவப்பிரகாசம்,<br>ஜோதி பாலமந்திர், சேலம்-14. | ... | 100 |
| 34 | திருமதி T. K. பாப்பம்மாள்,<br>சிவானந்தா நகர், ரிஷிகேஷ், இமயமலை. | ... | 100 |
| 35 | திரு B. கபாலீஸ்வரன்,<br>செல்வ மாளிகை, சேலம்-1. | ... | 101 |
| 36 | திரு B. R. ரங்கராவ் & பிரதர்,<br>ஷராப் வியாபாரம், சேலம்-2. | ... | 101 |
| 37 | திருமதி R. இராஜலட்சுமி அம்மாள்,<br>M/o. K. சந்தானம், B. A. B. L., கோவை-1. | ... | 101 |
| 38 | 'கம்பராமன்' திரு. S. K. இராமராஜ்,<br>வேலூர். | ... | 100 |
| 39 | T. C. ஜகந்நாத ரெட்டியார்,<br>ஆழத்துடையான்பட்டி, திருச்சி மாவட்டம் | ... | 100 |
| 40 | திரு. G. K. கிருஷ்ணன், சென்னை-34. | ... | 100 |
| 41 | அமரர் திரு. P. M. மாரிமுத்து முதலியார்,<br>துறையூர். | ... | 100 |
| 42 | திரு. T. R. ராமனுதன், பெங்களூர். | ... | 101 |
| 43 | டாக்டர் S பாலகிருஷ்ணன், B. E., Ph D.,<br>ராமகிருஷ்ணு ரோடு, சேலம்-7. | ... | 100 |
| 44 | திரு. K. R. ராதாகிருஷ்ணன்,<br>80, திருவேங்கடசாமி ரோடு, கோவை-2 | ... | 100 |
| 45 | திருமதி M. S. A. சகுந்தலா, ஆசிரியை,<br>A. V. M. நடுநிலைப்பள்ளி, இராசிபுரம். | ... | 100 |
| 46 | திரு. M. ஆழ்வார் ராமானுஜம்,<br>பள்ளித் துணை ஆய்வாளர், சேலம்-1. | ... | 101 |

47 திரு. A. முரளீதரன், M. S.,
எலெக்ட்ரானிக் எஞ்சினியர், கொச்சி. ... 101

48 திரு. M. R. கணபதி, ஆசிரியர், அரசினர்
மேல் நிலைப்பள்ளி. தொ. ஜேடர்பாளையம் ... 100

49 திரு. R. சுந்தரராஜ ரெட்டியார்,
"N. B. S." பஸ் சர்வீஸ், நாமக்கல். ... 101

50 திருமதி. G ரமா குருராஜன்
ஆரணி, வட ஆற்காடு மாவட்டம். ... 101

51 திரு. M. M. சுப்பரமணியம், பெங்களூர். ... 101

52 திரு. J. K. K முனிராஜா
'அன்னை இல்லம்' கொமாரபாளையம்-638 183 — 100

53 திருமதி. வசந்தம்மா ராமச்சந்திரராவ்
பெல்லாரி-1 கர்நாடக மாநிலம் — 100

54 ஸ்ரீ ராமகிருஷ்ண குருகுல உயர்நிலைப்பள்ளி
சின்னதண்டா - 636311, சேலம் மாவட்டம். — 100

55 திரு. S. R. லக்ஷ்மி நாராயண ஆச்சாரியார் &
திருமதி. அங்கம்மாள் நினைவாக
திருமதி. சுலோச்சனா சுந்தரம் இராசிபுரம் ... 100

56 சிவநெறிச் செல்வர் திரு. க. கனகராசா J. P.
அதிபர்: மில்க் ஒயிட் சோப்
யாழ்ப்பாணம், சிலோன் ... 100

57 திரு. S. P. நடராசா
'அண்ணா தொழிலகம்' இணுவில், சிலோன் ... 100

58 திரு. M. S. சுந்தரம் பிள்ளை,
ஸ்ரீராம் பாப்புலர் மோட்டார் சர்வீஸ்,
பாளையங்கோட்டை-2 திருநெல்வேலி ... 100

59 'பிரசங்கமணி' திரு. மு. கண்ணப்பர்
பவானி - 638 301 ... 100

60 Sri A. Sundaram
'American Express' New Delhi ... 100

61 Smt. Lakshmi Natarajan, New Delhi. ... 100

62 Sri. R. Padmanaban
Hony. Secretary, Divine Life Society
Johore Baru, Malaysia ... 200

# நீதிநெறிக் கதைகள்

## 1. துரியோதனனும் யுதிஷ்டிரரும்

ஒரு சமயம் துரோணாச்சாரியாரின் சீடர்கள் தமது குருவை அணுகி, ''குருநாதா! யுதிஷ்டிரர் நற்பண்புகளின் உறைவிடமாகவும், துரியோதனன் தீயவனாகவும் கருதப்படுவது ஏன்?'' என்று கேட்டனர்.

இதற்கு அடிப்படை இருக்கிறது என்பதை தமது சீடர்களுக்கு உணர்த்த துரோணர் முயற்சி மேற்கொண்டார். அவர் துரியோதனனை அழைத்து, ''துரியோதனா! ஒரு நல்ல மனிதனைக் கண்டு பிடித்துவா'' என்றார்.

துரியோதனன் நீண்ட தூரம் சுற்றி அலைந்து விட்டு பல நாட்கள் கழித்து வந்தான். ''வணக்கத் திற்குரிய குருநாதா! உலகம் முழுவதிலும் தேடி விட்டேன். நல்ல மனிதன் என்பதாக ஒருவர்கூட இல்லை. எங்கும் தீய மனிதர்களையே கண்டேன்'' என்று குருநாதரிடம் கூறினான்.

துரோணர் பிறகு யுதிஷ்டிரரை அழைத்து, ''மன்னா! ஒரு தீய மனிதனைக் கண்டு பிடித்து என்னிடம் அழைத்துவா'' என்றார்.

யுதிஷ்டிரரும் நீண்ட தூரம் வெகு நாட்கள் பயணம் செய்து திரும்பினார். அவர் துரோணரைப் பார்த்து, ''குருநாதா! என்னால் ஒரு தீய மனிதனைக் கூட கண்டுபிடிக்க முடியவில்லை'' என்றார்.

இரு அரசகுமாரர்களின் கருத்துக்களும் இவ்வாறு முரண்பட்டதாக இருந்தன, இந்த முரண்

பட்ட கருத்துக்களை கேட்ட சீடர்கள் வியப்புற்ற னர். யார் சொல்வது சரி என்று அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

பிறகு துரோணர் அவர்களைப் பார்த்து, ''தனது மனத்தின் காட்சி உலகில் பிரதிபலித்திருப் பதை ஒவ்வொருவரும் காண்கிறார்கள். ஆகவே தான் யுதிஷ்டிரருக்கு உலகம் முழுவதும் நல்லவர் களே இருப்பதாகத் தோன்றியிருக்கிறது. துரியோ தனனுக்கு உலகம் முழுவதும் தீயவர்களே நிறைந் திருப்பதாகத் தோன்றியிருக்கிறது. மஞ்சள் காமாலை நோயால் அவதிப்படுகிறவனுக்கு உலகில் காண்பது அனைத்தும் மஞ்சள் நிறமாகவே தோன்று கிறது. மனம் எப்படி இருக்கிறதோ, அப்படித் தான் புறத்தே காணுகின்ற காட்சியும் இருக்கும்'' என்றார்.

## 2. மானசீக பூஜை

மானசீக பூஜை என்பது மனத்தளவில் செய்யப் படுகிற வழிபாடு ஆகும். இத்தகைய வழிபாட்டில் ஒரு பக்தன் புறப்பொருள்களாகிய மலர்போன்ற வற்றைப் பயன்படுத்துவதில்லை.

அர்ஜுனன் புறவழிபாட்டில் நீண்டநேரம் ஈடுபடுவான்; ஆடம்பரமாக இறைவழிபாடு செய் வான். அவனது பூஜை அறை மிகப்பெரியது. அங்கு எண்ணற்ற விளக்குகள் உண்டு. அவன் பூஜைக்கு தங்கம் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களை பயன் படுத்தினான். அவன் சம்பிரதாயமாக பல மணி நேரங்கள் சிவ பூஜை செய்வான். அவன் சிவலிங்கத் தின் மீது வண்டி வண்டியாக மலர்களைக் கொட்டி வழிபடுவான்.

அர்ஜுனனின் சகோதரனான பீமன் பூஜைக்கு என்று ஒருபோதும் அமர்ந்ததில்லை. அவன்

ஆலயத்துக்கே சென்றதில்லை. அவன் உணவருந்து வதற்கு முன்பாக சில நிமிடங்கள் கண்ணை மூடிக் கொண்டு மனத்தளவில் சிவபெருமானை வழிபடு வான்.

அர்ஜுனன் தன்னை மிகச் சிறந்த பக்தன் என்று எண்ணிக்கொண்டான். தனது சகோதரன் பக்தி இல்லாதவன் என்று எண்ணி அவனை குறைத்து மதிப்பிட்டான்.

இதை அறிந்த பகவான் கிருஷ்ணர் அர்ஜுன னுக்கு நல்ல பாடம் புகட்ட விரும்பினார். சிவபெரு மான் உறையும் கயிலாயத்திற்கு யாத்திரை செல்லு மாறு அவர் அர்ஜுனனிடம் கூறினார்.

அர்ஜுனன் சந்தேகம் எதுவும் கொள்ளவில்லை. கிருஷ்ணர் கூறியபடி யாத்திரை செய்ய மகிழ்ச்சி யுடன் ஒப்புக்கொண்டான். இருவரும் யாத்திரை யைத் துவங்கினர். வழியில், பலவித மலர்கள் நிரம்பிய ஒரு வண்டியை ஒருவன் இழுத்துக் கொண்டு வருவதை அவர்கள் கண்டனர்.

அர்ஜுனன் அந்த வண்டிக்காரனை பார்த்து, ''இந்த மலர்களை எங்கே எடுத்துச் செல்லுகிறாய்?'' என்று கேட்டான். வண்டிக்காரன் பதில் எதுவும் சொல்லாமல் வண்டியை இழுத்துக்கொண்டு சென்றான்.

பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனைப் பார்த்து, ''அர்ஜுனா! நாம் அவன் பின்னாலேயே சென்று நாமே அதனைத் தெரிந்து கொள்ளுவோம்'' என்றார்.

அர்ஜுனன் அதற்குச் சம்மதித்தான். இரு வரும் வண்டிக்காரனைப் பின் தொடர்ந்து சென்

றனர். ஒரு இடத்தில் மலைபோல் மலர்கள் குவிக்கப்பட்டிருந்தன. அந்த இடத்தில் வண்டிக்காரன், வண்டியிலிருந்த மலர்களைக் கொட்டினான். மேலும் பல நூறு வண்டிகள் இதுபோல மலர்களை அள்ளிக் கொண்டுவந்து இங்கே கொட்டிவிட்டுப் போவதை இருவரும் கண்டனர்.

அர்ஜுனனின் ஆவல் அதிகமாயிற்று. அவனால் தன் ஆவலை அடக்கிக் கொள்ள முடியவில்லை. மீண்டும் வண்டிக்காரர்களைப் பார்த்து, ''இந்த மலர்களையெல்லாம் எங்கிருந்து வண்டிகளில் ஏற்றிக் கொண்டு வருகிறீர்கள் என்பதை தயவு செய்து சொல்லுவீர்களா ?'' என்று கேட்டான்.

எவரும் பதில் சொல்லவில்லை. திரும்பத் திரும்ப கேட்டவுடன் ஒரு வண்டிக்காரன் பதிலளித்தான். ''வணக்கத்திற்குரிய ஐயா, எங்களைத் தொந்தரவு செய்யாதீர்கள். நாங்கள் எங்களது பணியில் தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருக்கிறோம். உங்களிடம் பேச எங்களுக்கு நேரம் கிடையாது. எழுநூற்று ஐம்பது வண்டி மலர்களைத்தான் கொண்டு வந்திருக்கிறோம். இன்னும் எழுநூற்று ஐம்பது வண்டி மலர்களைக் கொண்டு வரவேண்டும். அவை ஆலயத்தில் உள்ளன. இவ்வளவு மலர்களும் பாண்டுவின் புதல்வனாகிய பீமன், நேற்று இறைவனுக்குச் சமர்ப்பித்தவை. பீமனின் இன்றைய வழிபாட்டுக்கு இன்னும் நான்கு மணி நேரம்தான் உள்ளது. அதற்குள் நாங்கள் எல்லா மலர்களையும் அப்புறப்படுத்தியாக வேண்டும்''.

அர்ஜுனன் ஆச்சரியம் அடைந்தான். அவன் அந்த வண்டிக்காரனிடம், ''நண்பா, நீ பீமனைப் பற்றிச் சொல்லுகிறாயா ? அர்ஜுனனைப்பற்றிச் சொல்லுகிறாயா? நீ தவறாகச் சொல்லுகிறாய் என்று நான் நினைக்கிறேன்'' என்று சொன்னான்.

''அர்ஜுனனு! இல்லவே இல்லை. பீமன்தான் தீவிர பக்தியுடன் சிறப்பாக வழிபாடு செய்கிருன். அவனது சகோதரன் அர்ஜுனன் வெளிப் பகட்டுடன் பூஜை செய்கிருன்'' என்று அந்த வண்டிக்காரன் கூறினுன்.

அப்போது ஒருவன் ஒரு கூடையில் மலர்களை அள்ளிக்கொண்டு வந்தான். பகவான் கிருஷ்ணர் அவனைப் பார்த்து, ''இவை யார் சமர்ப்பித்த மலர்கள்?'' என்று கேட்டார்.

''பூமியில் ஆடம்பரமாக வாழ்கின்ற ஒரு மனிதன் நேற்று சமர்பித்த மலர்கள் இவை. அவன் பெயர் அர்ஜுனன். அவன் உண்மையான அன்பும் பக்தியும் இன்றி வெளிப்பகட்டுடன் பூஜை செய் கிருன்'' என்று அந்த மனிதன் பதிலளித்தான்.

அர்ஜுனன் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டே சொன்னுன். ''கிருஷ்ணு! என்னை ஏன் இங்கு அழைத்து வந்தாய்? நாம் உடனே இந்த இடத்தை விட்டுப் போகலாம் வா. தற்பெருமை, ஆடம்பரம் என்னும் எனது குறைகளை வீட்டிலேயே நீ சுட்டிக் காட்டியிருக்கலாமே; இந்த தேகசிரமம் மற்றும் வேதனையிலிருந்து என்னைக் காப்பாற்றி யிருக்கலாமே! எனது வழிபாடு மற்றும் பக்தியைப் பற்றி நான் மிகவும் உயர்வாக எண்ணிக்கொண்டிருந் தேன் என்பது உண்மைதான். பீமனை நான் குறைத்து மதிப்பிட்டேன். பகட்டான எனது வழி பாட்டைவிட பீமன் சிரத்தை கலந்த பக்தியுடன் சிறிது நேரம் மனத்தளவில் செய்கிற தியானம் மிகவும் மதிப்பும் சக்தியும் வாய்ந்தது என்பதை இப்பொழுது நான் உணருகிறேன்''.

பகவான் கிருஷ்ணன் புன்முறுவலுடன் அமை தியாக இருந்தார். மனத்தளவில் செய்யப்படுகிற

வழிபாடு புற வழிபாட்டைவிட மிகவும் சக்திமிக்கது என்பது உண்மையாயினும், ஆரம்ப சாதகர்கள், புற வழிபாட்டை விட்டுவிடக் கூடாது. அவர்கள் திடீரென்று புற வழிபாட்டை விட்டு விட்டு மானசீக பூஜையில் ஈடுபடக் கூடாது. பல நாயன்மார்கள் தீவிரமாகவும், சிரத்தைமிக்க பக்தியுடனும் புற வழிபாடு செய்து சிவ சாயுஜ்ய நிலையினை அடைந்திருக்கிறார்கள். பக்தி மார்க்கத்தில் மிகவும் முன்னேறிய நிலையில் இருப்பவர்கள் மட்டுமே மானசீக பூஜையில் முழுமையாக ஈடுபட முடியும்.

## 3. ஒரு மாய ஆசனம்

விந்திய மலையின் அடிவாரத்தில் முதியவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரது பெயர் விட்டல் ஜாதவ். அவர் மிகவும் ஏழை. அவருக்கு உடைமையாக இருந்தது ஒரு கூரைக் குடிசைதான். அவர் மிகவும் சோம்பேறியாக இருந்தார். அதனால் அவர் வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டார்.

சாதுக்கள், சித்திகள் மற்றும் யோக சக்திகளைப் பெற்றிருக்கிறார்கள் என்றும் அந்த சக்திகளின் மூலம் அவர்கள் விரும்பியதை அடைய முடியும் என்றும் விட்டல்ஜாதவ் கேள்விப்பட்டிருந்தார். ஒருநாள், வேலை எதுவும் செய்யாமல் வாழ்க்கை நடத்த அவர் எண்ணினார். அவரது இந்த எண்ணம் தீவிரமடைந்தது. விந்திய மலைக்குச் சென்றால் ஒரு சாதுவைக் காணலாம் என்றும், தான் விரும்புவதை அவர் மூலம் பெற்றுக்கொள்ளலாம் என்றும் அவர் எண்ணினார். இந்த எண்ணத்துடன் அவர் குகைகளை நோக்கிப் புறப்பட்டார்.

வெகுதூரம் நடந்துசென்ற பின் விட்டல் ஜாதவ் ஒரு சாதுவைப் பார்த்தார். அவர்

சாதுவை அணுகி வணங்கினர். சாது ஜாதவை வரவேற்று, வந்த நோக்கம் குறித்து விசாரித்தார்.

''அன்புள்ள குருஜி! நான் மிகவும் ஏழை. எனக்கென்று இருப்பது ஒரு குடிசைதான். வேறு எதுவும் என்னிடம் இல்லை. இந்த வயதான காலத்தில் வேலை எதுவும் செய்து பணம் சம்பாதிக்க என்னால் இயலவில்லை. எனக்குக் கொஞ்சம் பணம் கிடைக்க தயவு செய்து உதவிபுரியுங்கள். நீங்கள் உங்களது யோக சக்தியின் மூலம் நினைத்த நேரத்தில் வேண்டிய அளவு பணத்தைப் பெறமுடியும் என்பதை நான் அறிவேன்'' என்று விட்டல்ஜாதவ் கூறினர்.

யோகி மௌனமாக இருந்தார். முதியவர் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக்கொண்டிருந்தார். கடைசியில் யோகி, அவருக்கு ஒரு ஆசனம் (Seat) தந்து அமரச் செய்தார். முதியவருக்கு எப்பொழுதெல்லாம் ஏதேனும் பெறவேண்டும் என்ற விருப்பம் ஏற்படுகிறதோ அப்பொழுதெல்லாம் அவர் கை கால் முகங்களைக் கழுவிக்கொண்டு அந்த ஆசனத்தில் அமர்ந்து தான்பெற விரும்பிய பொருளைப் பற்றி எண்ணவேண்டும் என்றும் அப்போது விரும்பியதைப் பெறலாம் என்றும் இவ்வாறு அவர் எவ்வித உழைப்பும் இன்றி எதையும் பெறலாம் என்றும் சாது கூறினர்.

அந்த முதியவர், சாதுவுக்கு இதயபூர்வமாக நன்றி தெரிவித்துவிட்டு, ஆசனத்தை எடுத்துக்கொண்டு, வேகமாகத் தன் வீட்டுக்கு வந்தார். அவர் ஒரு கணப்பொழுதும் வீணுக்க விரும்பவில்லை. உடனே முகம் கழுவிவிட்டு ஆசனத்தில் அமர்ந்தார். அவர் மிகவும் பசியுடன் இருந்ததால் முதலில் உணவைப்பற்றி நினைத்தார். உடனே அறுசுவை

உணவு அவர் முன் வந்தது. அவர் திருப்தியாக அதனை உட்கொண்டார். பிறகு அவர் ஓய்வெடுக்க விரும்பினர். அதற்குப் படுக்கை வேண்டுமே என நினைத்தார். உடனே அவருக்கு ஸ்பிரிங் மெத்தையும் பட்டுத் தலையணையும் உடைய படுக்கை அவருக்குக் கிடைத்தது. சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டார். ஆனால் அவர் மனம் அமைதியுருமல் அலைபாய்ந்து கொண்டிருந்தது.

அவர் மீண்டும் படுக்கையிலிருந்து எழுந்து ஆசனத்தில் அமர்ந்தார். இப்போது தன் குடிசை ஒரு அரண்மனையாக மாற வேண்டும் என நினைத்தார். கண்மூடித் திறப்பதற்குள் குடிசை அழகிய அரண்மனையாக மாறியது. அரண்மனை கிடைத்து விட்டபடியால் அவர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். அத்தகைய பெரிய அரண்மனையில் செல்வம் இல்லாமல் இருப்பது பயனற்றது என்று நினைத்தார். உடனே மூட்டை மூட்டையாக தங்கம், வெள்ளி மற்றும் வைரம் அவர் காலடியில் வந்து குவிந்தது. இப்போது முதியவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஆனால் அவர் தனக்குச் சில பணியாட்கள் வேண்டும் என நினைத்தார். உடனே பணியாட்கள் வணங்கியவாறு அவர் முன் நின்றனர்.

முதியவர் மேலும் மகிழ்ச்சி அடைந்தார். ஆனால் அந்தோ! மேலும் ஒரு எண்ணம் அவர் மனதில் உதித்தது! ஒரு பூகம்பம் ஏற்பட்டால் என் செய்வது என அவர் நினைத்தார். உடனே பூகம்பம் ஏற்பட்டது. அரண்மனை இடிந்து மண்ணோடு மண்ணுகியது. அத்துடன் முதியவரும், பணியாட்களும் சேர்ந்து மடிந்தனர்.

ஆத்ம ஞானம் பெறுவதற்கான வழியில் ஆசை ஒரு பெருந்தடை. தடுப்புச்சுவர். மனதைக் கட்டுப்

படுத்தல் என்பது ஆசைகளை அகற்றுவதே ஆகும். ஒருவர் மனதைக் கட்டுப்படுத்த விரும்பினால், ஆசைகள் அனைத்தையும் தயங்காமல் அகற்றிவிட வேண்டும். உலகியற் பொருட்களுக்காக ஏங்கக் கூடாது; மனக்கோட்டை கட்டக்கூடாது. மனம் ஒரு குரங்கு. அது ஏதாவது ஒன்றை விரும்பிக் கொண்டே இருக்கும். கரையில் போடப்பட்ட மீன் ஏதாவது ஒரு வழியின் மூலம் மீண்டும் தண்ணீருக்குள் செல்ல முயற்சிக்கும். அதுபோல மனமும் எப்போதும் அமைதியற்று இருக்கும். தீய எண்ணங்களில் ஈடுபட்டிருக்கும். இரக்கமின்றி ஆசைகள் அனைத்தையும் கொன்று, மனத்தையும், உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்துகிற ஒருவர்தான் மனதை ஒருநிலைப்படுத்த முடியும்.

கொந்தளிக்கும் உணர்ச்சிகளிலிருந்தும் பொங்குகின்ற எண்ணங்களிலிருந்தும் மனதை விடுவித்தால்தான் அதனை ஒரு நிலைப்படுத்த முடியும். அத்தகைய மனம் காற்றில்லா இடத்திலுள்ள விளக்கு போல அமைதியாக இருக்கும். அத்தகைய மனத்தை அடைந்தவர்கள் நீண்ட நேரம் தியானம் செய்ய முடியும். தியானம் தானாகவே ஏற்படும்.

மனம், உலகியற் பொருட்களை நோக்கி தன் விருப்பம்போல ஓடவும், தீய எண்ணங்கள் மற்றும் ஆசைகளில் ஈடுபடவும் அனுமதிக்கின்றவர்கள் இறுதியில் அழிவையே சந்திக்க நேரிடும்.

ஆகவே, ஆசைகளை அகற்றுங்கள். உற்சாகம், அமைதி, பேரானந்தம், அமரத்துவம் ஆகிய அனைத்துக்கும் உறைவிடமாக உள்ள பரம்பொருளை அடைவது என்ற ஒரே குறிக்கோளில் எப்போதும் நிலைத்திருங்கள். உண்மையான சாதனையைப் பயிற்சி செய்யுங்கள். யோகப் பயிற்சிகளில் இடையறுது

ஈடுபடுங்கள். வாழ்க்கையின் குறிக்கோளை இந்தப் பிறவியிலேயே அடைய முயற்சி செய்யுங்கள். இதன் மூலம் நிலையான பேரானந்தம் பெறுவீர்கள்.

## 4. குரு பக்தி

ஒருசமயம், நல்ல ஆன்மீகப் பண்புகள் உடைய ஒரு மனிதர் வாழ்ந்து வந்தார். அவர் சத்சங்க கூட்டங்களில் கலந்துகொள்ளுவார். ஆத்ம ஞானம் பெற குருவருள் அவசியம் என்று சத்சங்கத்தில் சொல்லப்பட்டதை அவர் கேட்டிருந்தார். அவர் உபதேசம் பெறவும் சாதனைப் பயிற்சியில் ஈடுபடவும் ஒரு குருநாதரைத் தேடி அலைந்தார். அவர் பல சாதுக்களையும், துறவிகளையும் சந்தித்தார். ஆனால் ஒவ்வொருவரிடமும் ஏதேனும் ஒரு குறையை அவர் கண்டு பிடித்தார். அவர் குதர்க்கமான புத்தியும் குறுகிய மனமும், குற்றம் காணும் இயல்பும் உடையவர். ஆதலால் அவருக்கு ஒரு குரு கிடைக்கவில்லை. ஒருவர், அறிவாற்றல் மற்றும் கல்வியில் உள்ள கர்வத்தை நசுக்கிவிட்டு, தீவிர பக்தியுடன் குழந்தையைப்போன்ற ஸ்வபாவத்தைப் பெறுகிற வரை தனக்குத் தகுந்த குருநாதரைப் பெற முடியாது.

ஒருநாள் அவர் தனது வீட்டில் வருத்தத்துடன் அமர்ந்திருந்தார். அவரது வருத்தத்திற்கான காரணத்தை மனைவி கேட்டாள். கடவுளைக் காண வழிகாட்டும் ஒரு குருநாதர் தனக்குக் கிடைக்கவில்லை என்று அவர் பதிலளித்தார். மனைவி ஒரு யோசனை கூறினாள். ''நாம் இருவரும் இரவில் காட்டுக்குச் செல்வோம். மனிதர்கள் வரும் வழியில் அமர்ந்திருப்போம். அந்த வழியில் வரும் முதல் மனிதனை குருவாக ஏற்றுக்கொள்வோம்'' என்று அவள் கூறினாள். கணவரும் ஒப்புக்கொண்டார்.

மறுநாள் அவர்கள் காட்டுக்குச் சென்றனர். பாதையில் அமர்ந்திருந்தனர். அந்த வழியாக ஒரு திருடன், தான் திருடிய நகைகளுடன் ஓடிவந்தான். அந்தத் தம்பதிகள் திருடனின் காலைப் பிடித்துக் கொண்டனர். அவனை குருவாக ஏற்றுக்கொண்டனர். அவர்கள் தமக்கு குருமந்திரத்தை உபதேசிக்குமாறு வேண்டினர்.

திருடன் வியப்பும் அச்சமும் அடைந்தான். அவர்கள் தமது கதையை விபரமாகச் சொன்னார்கள். அவர்களது நம்பிக்கையைக் கண்ட திருடன் மெய்சிலிர்த்துப் போனான். தான் ஒரு திருடன் என்ற உண்மையைக் கூறினான். ஆயினும் கூட அந்தத் தம்பதிகள் அவனை விடுவதாக இல்லை. தமக்கு குருமந்திரத்தை உபதேசம் செய்யுமாறு மீண்டும் வற்புறுத்தினர். திருடன் பதறினான். இனியும் தாமதித்தால் அவன் பிடிபட்டுப் போவான். அங்கிருந்து எப்படியாவது தப்பிச் செல்லவேண்டும் என்ற நோக்கில் அவன் அவர்களைக் குனிந்து, கண்களை மூடியவாறு, காதுகளைப் பிடித்துக்கொண்டு இருக்கச் சொன்னான். தான் நிமிரச் சொல்லுகிறவரை அவர்கள் அப்படியே இருக்கவேண்டும் என்று அவன் கூறினான். அவர்களும் அவ்வாறே செய்தனர். இரவு முழுவதும் அப்படி இருந்தனர். மறுநாளும் அப்படி இருந்தனர். அவர்கள் உணவு உட்கொள்ளவில்லை. தண்ணீர் குடிக்கவில்லை. இதற்கிடையில் திருடன் பிடிபட்டு சிறையில் அடைக்கப்பட்டான்.

பகவான் விஷ்ணுவும், லக்ஷ்மி தேவியும் இவர்களது நம்பிக்கையை கண்டு மகிழ்ச்சி அடைந்தனர். லக்ஷ்மி பொறுமை இழந்தாள். அவர்களுக்கு தரிசனம் தருமாறு இறைவனை வேண்டினாள். விஷ்ணுவும் அவர்களுக்கு தரிசனம் தந்தார்.

கடவுள் வந்திருப்பதை அறிந்துகொண்ட அவர்கள் கண்களைத் திறக்கவில்லை; எழுந்து நிற்க வில்லை. பகவான் விஷ்ணு அவர்களை எழுந்து நிற்கச் சொன்னார். ஆனால் அவர்கள், தமது குருநாதரின் அனுமதி கிடைக்கிறவரை எழுந்து நிற்க மறுத்து விட்டனர்.

பிறகு விஷ்ணு, அந்த நாட்டு அரசன் கனவில் தோன்றி அந்தத் திருடனை விடுவிக்கச் சொன்னார். முதலில் மன்னன் கனவு பொய் என எண்ணினான். ஆனால் மூன்று முறை அவ்வாறு நிகழ்ந்ததும் அவன் திருடனை விடுதலை செய்தான். அன்றிரவே விஷ்ணு திருடன் கனவில் தோன்றினார். தம்பதிகளை இருக்கச் சொன்ன இடத்துக்கு விரைந்து சென்று, அவர்கள் கண்களைத் திறக்குமாறு சொல்லச் சொன்னார்.

திருடன் விடுதலையானதும் நேராக காட்டுக்குச் சென்று அந்தத் தம்பதிகளை எழுந்து நிற்கச் சொன்னான். கண்களைத் திறந்து பார்க்கச் சொன்னான். அவர்களும் அவ்வாறே செய்தனர். மேலும், கடவுள் தாம் இருக்கும் இடத்துக்கு வந்ததையும் திருடனிடம் தெரியப்படுத்தினர். திருடனும் தான் கனவு கண்டது பற்றியும், விடுதலை செய்யப்பட்டது குறித்தும் கூறினான்.

பிறகு விண்ணிலிருந்து ஒரு அசரீரி கேட்டது. ''உங்களது குருநாதரிடத்தில் நீங்கள் வைத்திருக்கும் தீவிர பக்தியைக் கண்டு நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் பஜனை, ஜபம், தியானம் இவற்றில் இடையறாது ஈடுபடுங்கள். நான் உங்களுக்கு தரிசனம் தந்து உங்களை பிறப்புக்கள், இறப்புக்கள் என்னும் சக்கரத்திலிருந்து விடுவிக்கிறேன்.''

அன்று முதல் திருடனும் தனது திருட்டுத் தொழிலை விட்டுவிட்டு விஷ்ணு பக்தனாக மாறினான்.

தம்பதிகள் தொடர்ந்து சாதனை மற்றும் பஜனையில் ஈடுபட்டு ஜீவன் முக்தி அடைந்தனர்.

குருவிடம் பக்தியும் பணிவும் கொண்டிருப்பவர்கள், எதையும் பெறமுடியும். குருபக்தி மிகச் சிறப்பாகத் தூய்மைப் படுத்துகிறது; ஒளி தருகிறது. ஒரு சாதகனின் வாழ்க்கையை அருள் நிறைந்ததாகவும், பயனுள்ளதாகவும் ஆக்குவது குருபக்திதான்.

## 5. குள்ள நரியும் கழுகும்

நைமிச வனத்தில் இச்சம்பவம் நிகழ்ந்தது. நீண்ட நாட்களாக குழந்தைச் செல்வத்தைப் பெறாத ஒரு பிராமணன், கடுந் தவம் செய்தபின் ஒரு மகனைப் பெற்றான். ஆயினும் அந்தக் குழந்தை, இழுப்பு நோயால் இறந்து போயிற்று. பெற்றோர்கள் மிகவும் வருந்தினர். அவர்கள் குழந்தையை இடுகாட்டுக்கு எடுத்துச் சென்றனர். இடுகாட்டிலும் அவர்கள் அழுது புலம்பினர்.

அவர்களின் அழுகுரலைக் கேட்டு அங்கு ஒரு கழுகு வந்து பின்வருமாறு பேசிற்று.

''இங்கே கவனியுங்கள். உலகம் முழுவதும் இன்பம், துன்பம் இரண்டையும் அனுபவிக்கிறது. உறவும், பிரிவும் மாறிமாறி வருகிறது. இறந்த உறவினர்களின் உடல்களை சுடுகாட்டுக்கு எடுத்து வருகிறவர்களும், இந்த உடல்களுக்குப் பக்கத்தில் அமர்ந்திருப்பவர்களும் தம் செயலின் விளைவாக, இந்த உலகில் வாழ்வதற்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள காலம் முடிவடைந்ததும் மரணத்தைத் தழுவுகின்றனர். ஒருவன் ஆயுட்காலம் முடிந்து இறந்த பின்னர் அவன் நண்பனாக இருந்தாலும், எதிரியாக இருந்தாலும் மீண்டும் உயிர்பெற்று வாழ முடியாது.

அனைத்து உயிர்களின் இறுதிநிலையும் இதுதான். நிலையற்ற உலகில் பிறந்தவர் அனைவரும் இறப்பது உறுதி. அழிகின்ற ஒருவர் விதித்துள்ள வழியில் செல்லுகின்ற மனிதனை, உயிர் துறந்தவனை யார் மீட்க முடியும்? குழந்தையின்மீது வைத்துள்ள பாசத்தைவிட்டு, வீட்டுக்குத் திரும்பிச் செல்லுங்கள்''.

கழுகின் வார்த்தைகளைக் கேட்டவுடன் பெற்றோர்களின் வேதனை ஓரளவுக்குக் குறைந்தது. கழுகின் கருத்துக்குச் செவிசாய்த்து அவர்கள் வீடு திரும்பினர்.

இந்த நேரத்தில் ஒரு நரி தன் வளையிலிருந்து வெளியே வந்தது. அது பெற்றோர்களைப்பார்த்து பின்வருமாறு கூறியது: ''உங்களுக்குக் குழந்தையின் மீது பாசமே இல்லையா? சூரியன் இன்னும் ஒளிபரப்பிக் கொண்டிருக்கிறான். உங்கள் உணர்ச்சிகளை அச்சமின்றி வெளிப்படுத்துங்கள். குழந்தை மீண்டும் உயிர் பிழைக்கக் கூடும். குழந்தையின்மீது வைத்திருந்த பாசம் அனைத்தையும் துறந்துவிட்டு ஏன் இப்படி இரும்பு இதயத்துடன் செல்லுகிறீர்கள்? உங்களுக்கு குழந்தையின்மீது அன்பு இருப்பது உறுதி. பறவைகளும் மிருகங்களும்கூட தமது குழந்தைகளிடம் செலுத்துகின்ற அன்பை கவனியுங்கள். இறந்த மகனுக்காக இன்னும் சிறிது நேரம் கண்ணீர் சிந்துங்கள்; இன்னும் சிறிது நேரம் அவனை அன்புடன் பார்த்துக் கொண்டிருங்கள். உயிர் அனைவர்க்கும் இனியது. அன்பின் செல்வாக்கை அனைவரும் உணருகின்றனர்''.

குள்ளநரியின் பேச்சு, பெற்றோரின் மனத்தை மாற்றியது. அவர்கள் இன்னும் சிறிதுநேரம் அங்கு இருக்கத் தீர்மானித்தனர்.

கழுகு மீண்டும் வந்து பேசியது: ''இந்தக் குள்ள நரி, கொடியது; சிறுமதி படைத்தது; முட்டாள் போல பேசக்கூடியது. இதன் பேச்சைக் கேட்டு ஏன் திரும்பிப் பார்க்கிறீர்கள்? பஞ்சபூதங்களாலான இந்த உடலுக்காக ஏன் வருந்துகிறீர்கள்? இந்த உடலில் இப்போது இறைவன் குடியிருக்கவில்லை. இந்த உடலில் இப்போது ஆத்மா இல்லை. இந்த உடல் இப்போது அசைவற்று மரக்கட்டைபோலக் கிடக்கிறது. இதற்காக ஏன் வருந்துகிறீர்கள்? உங்களுக்காக ஏன் நீங்கள் வருத்தப்படக்கூடாது. உங்களைப் பாவத்திலிருந்து விலக்கி உங்களைத் தூய்மைப்படுத்தக்கூடிய அறச் செயல்களில் நீங்கள் ஈடுபடுகிறீர்களா? தவத்தின் மூலம் எதனையும் பெற லாம். நீங்கள் வருந்துவதால் பயன் என்ன? தவம் செய்யுங்கள். நீண்ட ஆயுளுடன் வாழும் குழந்தை யைப் பெறுங்கள். இறப்பு என்பது உடலோடு பிறக்கிறது. செல்வம், மாது, தங்கம், விலையுயர்ந்த நவரத்தினக் கற்கள், குழந்தைகள் எல்லாம் தவத் தின் மூலமே பெறப்படுகிறது. தவம் யோகத்தின் விளைவு. தந்தை தன் செயல்மூலம் மகனைத் தடுக்க முடியாது. மகன் தன் செயல்மூலம் தந்தையைத் தடுக்க முடியாது. ஒவ்வொருவரும் தத்தம் நற் செயல் மற்றும் தீய செயலின் விளைவாக இந்தப் பொதுப் பாதையில் செல்லத்தான் வேண்டும். வருந்துவதால் என்ன பயன்? இறந்தவருக்காக ஏன் வருந்துகிறீர்கள்? அனைவருக்கும் எஜமானனாக காலம் இருக்கிறது. அது தன் இயல்புக்கேற்ப அனைத்தையும் பாரபட்சமின்றி நோக்குகிறது. கர்வம் உடைய இளைஞன் அல்லது பச்சிளங்குழந்தை, முதியவர் அல்லது கருவில் உள்ள குழந்தை ஆகிய யாராயினும் இறக்கத்தான் வேண்டும். உலகத்தின் இயல்பு இத்தகையது''.

குள்ளநரி இடை மறித்து, ''ஒவ்வொருவரும் உழைக்க வேண்டும். உழைப்பும் லட்சியமும் இணை

யும்போது பலன் கிடைக்கிறது. பின் ஏன் இதயத்தை இரும்பாக்கிக்கொண்டு திரும்புகிறீர்கள்? சூரியன் அஸ்தமனம் ஆகும்வரை இங்கேயே இருங்கள்'' என்றது.

கழுகு மீண்டும் பேசியது: ''இன்று எனக்கு ஆயிரம் வயது பூர்த்தியாகிறது. எந்த ஒரு பிராணியும் இறந்த பின் உயிர்பெற்று எழுந்ததை நான் காணவில்லை. இறந்த குழந்தையின் இந்த உடலை விட்டுச் செல்லுங்கள். இதற்கு மிருகத்தின் தன்மை இல்லை. இந்த உடலைவிட்டுப் பிரிந்த உயிர் வேறு ஒரு உடலில் குடிகொள்ளும்''.

கழுகின் இந்த வார்த்தைகளைக் கேட்ட பெற்றோர்கள் அங்கிருந்து புறப்பட எண்ணினர்.

அந்த நேரத்தில் குள்ளநரி அங்கே வேகமாக வந்தது. அவர்களைப் பார்த்து மீண்டும் பேசியது. ''ராமன் என்னும் பிராமணக் குழந்தை இறந்த பின்னர் மீண்டும் உயிர் பெற்றது. ஷேவேதர் என்னும் ராஜரிஷியின் மகன் அகால மரணமடைந்தான். அற வாழ்க்கை வாழ்ந்த மன்னன் அந்த மகனை மீண்டும் உயிர்பெற்று எழச் செய்தான். இறந்த குழந்தையை எண்ணிக் கதறும் உங்களுக்காகவும் ஏதேனும் ஒரு சித்தர், முனிவர் அல்லது தேவதை கருணைகாட்டி உங்கள் ஆவலைப் பூர்த்தி செய்ய முன்வரக்கூடும்.''

தாயார் மீண்டும் குழந்தையைத் தன் மடியில் போட்டுக் கொண்டாள். மீண்டும் எல்லோரும் அழுதனர்.

குள்ளநரியும், கழுகும் மாறி மாறிப் பேசிக் கொண்டிருந்தன. ஒன்றின் கேள்விக்கு மற்றொன்று பதில் சொல்லியது. இரண்டும் தத்தம் கருத்துக்களை

வேதங்களின் அடிப்படையில் தெரிவித்தன. சூரியன் மறைந்து இருள் சூழ்ந்ததும் அங்கு பயங்கர மிருகங்கள் வந்து தொல்லை தரும் என்று கழுகு பெற்றோர்களை பயமுறுத்தியது.

அன்னை பார்வதிதேவி இந்தப் பெற்றோர்களின் நிலைகண்டு இரங்கி, அந்தக் குழந்தை மீண்டும் உயிர் பெறச் செய்யுமாறு சிவபெருமானிடம் பிரார்த்தித்தாள். சிவபெருமான் அந்தக் குழந்தைக்கு மீண்டும் உயிர்தந்து, நூறு வயதுவரை வாழவும் அருள் புரிந்தார். இறந்த குழந்தை மீண்டும் உயிர்பெற்று எழுந்ததுகண்டு பெற்றோர்கள் ஆச்சரியப்பட்டனர். அவர்கள் குழந்தையுடன் மகிழ்ச்சியாக வீடு திரும்பினர். அவர்கள் சிவபெருமானை வணங்கினர்; போற்றினர்.

இறந்த குழந்தையின் மாமிசத்தைத் தின்ன விரும்பிய குள்ளநரி, பெற்றோர்கள் சூரிய அஸ்தமனம் வரை அங்கு இருக்க வேண்டும் என்று விரும்பியது. கழுகு குழந்தையின் உடலை சூரியன் மறைவதற்குள் தின்ன வேண்டும் என்று விரும்பியது. குழந்தைக்கு மீண்டும் உயிர்வந்தபோது இரண்டும் ஏமாற்றப்பட்டன. இரண்டும் வேதனை அடைந்தன.

இந்த உலகில் உள்ள மனிதர்களில் பெரும் பாலோர் சுயநலத்தையே நாடுபவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் சுயநலம் கருதியே பிறருக்கு நல்லுபதேசம் செய்கின்றனர். அவர்களின் வழி தனி வழி. அவர்களை நம்பி ஏமாறாதீர்கள். உங்கள் சுயசிந்தனையின்படி செயல்படுங்கள். எச்சரிக்கையாக இருங்கள். நன்கு சிந்தனை செய்யுங்கள்.

## 6. ஒரு மருமகன்

ராஜேந்திரன், சமய நம்பிக்கை உடைய ஒரு இளைஞன். மனத்தையும் புலன்களையும் அடக்க அவன் பல்வேறு விரதங்களை அனுஷ்டிப்பது வழக்கம்.

ஒரு நாள் அவன் தலை தீபாவளிக்கு மாமியார் வீட்டுக்குச் சென்றிருந்தான். அன்று அவனது மாமியார் லீலாவதி அவனுக்காக மீன் குழம்பு மிகவும் ருசியாக தயார் செய்திருந்தாள். ராஜேந்திரன் உணவு உட்கொள்ள அமர்ந்தான். உணவு உட்கொள்ளும்போது அவன் பேசுவதில்லை; தட்டில் எதையும் விட்டுச் செல்லுவதில்லை. இது 'அவன் கடைப்பிடித்து வந்த விரதம்.

லீலாவதி, தன் மருமகனுக்கு ருசியான சாதம், பருப்பு, மீன் குழம்பு ஆகியவற்றை பரிமாறினாள். ராஜேந்திரனுக்கு மீன் என்றால் பிடிக்காது. அவன் இப்போது என்ன செய்வான்? அவன் மௌனமாக இருந்தான். தனக்கு மீன் பிடிக்காது என்று சொல்ல அவன் விரும்பவில்லை. தட்டில் எதையும் விட்டுச் செல்லவும் அவனால் முடியவில்லை. மிகவும் கஷ்டப் பட்டு தட்டைக் காலி செய்தான். மாமியார் மேலும் மீனும் குழம்பும் பரிமாறினாள். அவன் திருப்தி யாகச் சாப்பிடவேண்டும் என்று அவள் விரும் பினாள். அவனுக்கு மீன் மிகவும் பிடிக்கும் போலிருக்கிறது என்று அவள் எண்ணினாள். இரண்டாவது முறையாக தட்டில் வைக்கப்பட்ட தையும் ராஜேந்திரன் கஷ்டப்பட்டு விழுங்கினான்.

தட்டு காலியானதும், லீலாவதி மேலும் பரிமாறினாள். அவள் தனக்குள் பின்வருமாறு எண்ணிக்கொண்டாள்! ''எனக்கு எவ்வளவு

மகிழ்ச்சியாக இருக்கிறது! என் மருமகன் குழம்பு முழுவதையும் சாப்பிட்டு விட்டார். நான் வைத்த குழம்பை அவர் மிகவும் விரும்பி உட்கொண்டிருக்கிறார். அவர் எலும்பைக்கூட தட்டில் வைக்கவில்லை. அனைத்தையும் அவர் பேராவலுடன் உட்கொண்டிருக்கிறார்.''

இப்போது தட்டில் வைக்கப்பட்டதையும் ராஜேந்திரன் உட்கொண்டான்.

மாமியார் இன்னும் கொஞ்சம் தட்டில் வைத்தாள். ராஜேந்திரனின் வயிறு வெடித்துவிடும் நிலையில் இருந்தது! இதற்குமேல் ஒரு சிறிதும் அவனால் உட்கொள்ள முடியாது. இப்போது பேச வேண்டிய நிர்பந்தம் அவனுக்கு ஏற்பட்டது. குழம்பை தட்டிலேயே விட்டுவிட வேண்டிய நிர்பந்த நிலையும் ஏற்பட்டது.

அவன் மாமியாரை பார்த்து, ''அன்புள்ள மாமியாரே! எனக்கு மீன் பிடிக்காது. நான் உணவு உட்கொள்ளும்போது பேசுவதில்லை. தட்டில் எதையும் விட்டுச் செல்வதில்லை. இதனை நான் ஒரு விரதமாகக் கடைப்பிடித்து வருகிறேன். ஆகவே தான் நீங்கள் பரிமாறிய அனைத்தையும் உட்கொண்டேன். நான் மீன் குழம்பை மிகவும் விரும்புவதாக நீங்கள் எண்ணிக்கொண்டீர்கள். இதன் மூலம் நீங்கள் தவறு செய்துவிட்டீர்கள். நானும் பெருந்தவறு புரிந்துவிட்டேன். இப்போது என் வயிறு வலிக்கிறது, நான் எலும்பையும் விழுங்கிவிட்டேன். உடனே டாக்டரை அழைத்துவர ஆள் அனுப்புங்கள். வலி தாங்கமுடியவில்லை. வயிற்று வலியை என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. நான் படுத்துக்கொள்ள விரும்புகிறேன். வாந்தி எடுக்கலாம் என்றாலும், தொண்டைக்குள் விரலைவிடக்கூட இடம் இல்லை.

லீலாவதி உடனே டாக்டரை அழைத்துவர ஏற்பாடு செய்தாள். டாக்டரும் வந்தார். நீள மான குறடின் உதவியுடன் தொண்டையில் இருந்த எலும்பை டாக்டர் எடுத்தார். ராஜேந்திரனுல் அசைய முடியவில்லை. கை கழுவக்கூட முடியவில்லை. இருவர் அவனை தாழ்வாரத்துக்கு கைத்தாங்கலாகக் கொண்டுசென்று கை கழுவச் செய்தனர். டாக்டர் அவன் வாந்தி எடுக்க மருந்து கொடுத்து வயிற்றை காலி செய்தார், எனிமா கொடுத்தார். மோர்பைன் ஊசிபோட்டார். ராஜேந்திரன் வலி நீங்கிக் குணமடைந்தான். அவன் தனது விரதங்கள் அனைத்தையும் விட்டுவிட வேண்டியிருந்தது.

சாதகர்கள் பெருந் தவறு செய்கிருர்கள். ஒரே நேரத்தில் ஏராளமான பிரதிக்ஞைகளை எடுத்துக் கொள்ளுகிருர்கள். அவர்கள் தமது தகுதிக்கும் பலத்துக்கும் தகுந்தவாறுதான் செயல்பட வேண்டும். அவர்கள் ஆன்மீகப் பாதையில் படிப்படியாக முன்னேற வேண்டும். ஒரு விரதத்தை குறுகிய காலத்துக்கு அனுஷ்டிக்க வேண்டும். அதன்மூலம் பெறுகிற பலத்தை அடிப்படையாகக்கொண்டு அந்த விரதத்தை அனுஷ்டிக்கும் காலத்தை அதிகப் படுத்திக்கொள்ள வேண்டும். மற்ருெரு விரதத்தை எச்சரிக்கையுடன் அவர்கள் மேற்கொள்ளவேண்டும்.

ஒரு வாரத்துக்கு மௌனமாக இருங்கள். ஒரு வாரத்துக்கு உங்களால் கஷ்டமின்றி மௌனமாக இருக்க முடியுமானுல் அடுத்து இரு வாரங்களுக்கு மௌனமாக இருக்கவும். பிறகு ஒரு மாதத்திற்கும், பிறகு மூன்று மாதங்களுக்கும் மௌனமாக இருக்க முயற்சி செய்யுங்கள். திடீரென்று மூன்று மாதங்களுக்கு மௌனமாக இருக்க முயற்சித்தால் ராஜேந்திரன் போல நீங்களும் உங்கள் முயற்சியைக் கைவிட நேரிடும். அலைபாயும் மனத்தையும்,

கொந்தளிக்கும் புலன்களையும் அடக்குவதே விரதங்களின் நோக்கம். ஆகவே உங்கள் புத்திசாலித்தனம், பகுத்தறிவு ஆகியவற்றைப் பயன்படுத்துங்கள்.

## 7. ஒரு துறவி

சுவாமி சச்சிதானந்த சரஸ்வதி ஒரு வயதான துறவி. அவர் மதுரா நகரின் தெருவில் நடந்து சென்று கொண்டிருந்தார். போக்கிரித்தனமும் குறும்புத் தனமும் உடைய ஒரு வியாபாரி அந்தத் துறவியை அழைத்து, ''சுவாமிஜி! உங்கள் தாடி உயர்ந்ததா? அல்லது கழுதையின் வாலில் உள்ள மயிர்க்கற்றை உயர்ந்ததா?'' என்று கேட்டார்.

துறவி மௌனமாக இருந்தார்.

ஐந்து ஆண்டுகள் கடந்தன. சுவாமி சச்சிதானந்தா டைபாயிடு காய்ச்சலால் உடல் நலம் குன்றிப் படுத்திருந்தார். அவர் தனது சீடன் ஒருவனை அனுப்பி அந்த வியாபாரியை அழைத்து வரச் செய்தார். வியாபாரியும் வந்தார்.

துறவி, வியாபாரியைப் பார்த்து, ''அன்பரே! உமது கேள்விக்கு இப்போது என்னால் உறுதியாக பதிலளிக்க முடியும். எனது தாடி நிச்சயமாக கழுதையின் வாலில் உள்ள மயிர்க்கற்றையைவிட உயர்ந்தது'' என்று கூறினார்.

''வணக்கத்திற்குரிய சுவாமிஜி! இந்த பதிலை அன்றே கூறியிருக்கக் கூடாதா?'' என்று வியாபாரி கேட்டார்.

துறவி பின்வருமாறு பதிலளித்தார்:

''இப்போது எனது உயிர் இந்த உடலை விட்டுப் பிரியப் போகிறது. இனிமேல் நான் தவறு செய்ய

வாய்ப்பு இல்லை. நான் வீழ்ச்சியுறும் வாய்ப்பு இனி இல்லை. இதுவரை நான் தூய வாழ்க்கை வாழ்ந்து வந்திருக்கிறேன். எனது வாழ்க்கை தூய்மையானது என்று என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். ஆகவே எனது தாடி கழுதையின் வாலில் உள்ள மயிர்க்கற்றையைவிட உயர்வானது என்று என்னால் தைரியமாகச் சொல்ல முடியும்.

''துறவியின் வாழ்க்கையில் அவரைக் கவர்ந்து இழுக்கும் அம்சங்கள் ஏராளமாக உண்டு. ஒரு துறவி மிகவும் புகழ் வாய்ந்தவராக ஆகமுடியும். அவர் எந்த நேரத்திலும் வீழ்ச்சி அடையலாம். அவரது சீடர்களும் பக்தர்களும் அவரைப் புறக் கணிக்கலாம். துறவியைப் பற்றி அவர்கள் குறை கூறியும் ஏளனம் செய்தும் பேசக்கூடும். ஒரு துறவி யின் உடலிலிருந்து உயிர் பிரிகிறவரை அவரது ஒழுக்கம் பற்றி நாம் எதுவும் கூறமுடியாது. மாயை மிகவும் சக்தி மிக்கது; மர்மமானது. எல்லாவித மான கவர்ச்சிகளும் இந்த உலகில் உண்டு. ஒரு சாதகர் எச்சரிக்கையாக இல்லாவிட்டால், அவரது பற்றின்மை மறையத் துவங்கினால், அவர் இடை யறாது தியானம் செய்யத் தவறினால் அவர் சாதனை யில் எவ்வளவுதான் முன்னேறிய நிலையில் இருந்தாலும் வீழ்ச்சி அடையக் கூடும். நீங்கள் விசுவாமித்திரரின் கதையைக் கேட்டதில்லையா? அவர் கடுந்தவம் புரிந்துவந்த போதிலும் ஒரு தெய்வலோகப் பெண்ணிடம் வீழ்ச்சியடைந்தார்.''

சுவாமிஜியின் அறிவாற்றல்மிக்க பேச்சைக் கேட்ட போக்கிரித்தனமான வியாபாரி ஆச்சரியம் அடைந்தார். அவர் துறவியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். அநாகரிகமாகவும் முரட்டுத் தனமாகவும் கேள்வி கேட்டதற்காகத் தன்னை மன்னிக்க வேண்டினார்.

## 8. ஒரு நடைமுறை வேதாந்தி

ராதாகிருஷ்ணன், விசார சாகரம், பஞ்சதசி, ஆத்மபோதம் முதலிய வேதாந்த நூல்களைப் படித்திருக்கிறார். அவர் தன்னை மாபெரும் வேதாந்தி என்றும் ஆத்மஞானம் பெற்றவர் என்றும் எண்ணிக் கொண்டார். அவர் ஒருபோதும் புத்தகங்களை குருவிடம் கற்கவில்லை. குருவிடம் உபதேசம் பெறவும் இல்லை. அவர் தியானப் பயிற்சியில் ஈடுபடவில்லை.

ஒருநாள் ராதாகிருஷ்ணன் ஒரு கோப்பை பால் குடிப்பதற்காக கடைக்குச் சென்றார். பாலைக் குடிக்கும்போது தத்துவ சிந்தனையில் ஈடுபட்டார்: ''எங்கும் ஒரே ஆத்மாதான் இருக்கிறது. ஒவ்வொன்றும் என்னுடையது. அனைத்தும் என்னுடையது. அனைத்தும் பிரம்மம்' என்று படித்திருக்கிறேன். ஆகவே நான் இப்போது நடைமுறை வேதாந்தியாக ஆகப்போகிறேன்.''

கடைக்காரர் சர்க்கரை வாங்குவதற்காகப் பக்கத்துக் கடைக்குச் சென்றார். கல்லாப்பெட்டி திறந்திருந்தது. கடைக்காரர் அதனைப் பூட்ட மறந்துவிட்டார்.

ராதாகிருஷ்ணன் ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்துக்கொண்டு பேசாமல் நடந்தார். அவர் தனக்குள் பின்வருமாறு எண்ணிக்கொண்டார்: ''இந்த கல்லாப்பெட்டி என்னுடையது. இந்தப் பணம் என்னுடையது. ஒவ்வொன்றும் என்னுடையது. நான் இன்றுதான் வேதாந்தத்தின் சிறப்பினை சரியாகப் புரிந்துகொண்டேன். வேதாந்தம், நடைமுறையில் கடைப்பிடிக்கக் கூடியதாக இருக்கிறது. வேதாந்த உணர்வுடன் வாழ்வது மிகவும் சிறப்பானது. நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

உலகில் உள்ள செல்வம் அனைத்தும் என்னுடையது. ஒவ்வொன்றும் என்னுடையது''.

கடைக்காரர் திரும்பி வந்தார். கல்லாப் பெட்டி திறந்து கிடப்பதைக் கண்டார். அவர் பணத்தை எண்ணிப் பார்த்தார். ஒரு நூறு ரூபாய் குறைவதைக் கண்டார். அவர் உடனே தெருவில் ஓடி ராதாகிருஷ்ணனைப் பிடித்து போலீஸ் இன்ஸ் பெக்டரிடம் ஒப்படைத்தார்.

ராதாகிருஷ்ணன் வழக்கு விசாரணைக்காக மாவட்ட மாஜிஸ்டிரேட் முன்பாகக் கொண்டுவரப் பட்டார்.

''ராதாகிருஷ்ணன்! இந்தக் கடைக்காரரின் கல்லாப் பெட்டியிலிருந்து நூறு ரூபாயை எடுத் தாயா?'' என்று மாஜிஸ்டிரேட் கேட்டார்.

''ஆம் ஐயா, நான் பெட்டியிலிருந்து நூறு ரூபாய் எடுத்தேன்'' என்று ராதாகிருஷ்ணன் பதிலளித்தார்.

''ஏன் எடுத்தாய்?'' என்று மாஜிஸ்டிரேட் கேட்டார்.

ராதாகிருஷ்ணன் பின்வருமாறு பதிலளித்தார்:

''நான் தினசரி வாழ்வில் வேதாந்தத்தைக் கடைப்பிடிக்கவும் அனுபவிக்கவும் விரும்பினேன். வேதாந்த உணர்வில் நான் வாழ விரும்பினேன், ''ஒவ்வொன்றும் என்னுடையது; அனைத்தும் என்னுடையது'' என்று விளக்கும் வேதாந்த புத்த கங்களை படித்திருக்கிறேன். ஆகவே பெட்டியி லிருக்கும் பணம் என்னுடையது என்று கருதி எடுத் தேன். நான் பணத்தைத் திருடவில்லை. நான் திருடன் அல்ல.

''இது அற்புதமான வேதாந்தம்'' என்றார் மாஜிஸ்டிரேட், ''இத்தகைய வேதாந்திகள்தான் இன்றைய உலகிற்குத் தேவை. அப்போதுதான் உலகில் காணப்படும் அல்லல்கள் எல்லாம் அகலும். ஆனால், ராதாகிருஷ்ணன் வேதாந்தத்தின் மற்றொரு பகுதியைக் கவனி. ''நான் இந்த உடல் அல்ல, நான் ஆத்மா' என்று அது கூறுகிறது. உடலின் மீதான பந்தத்தை நீ வென்றிருக்கிறாயா என்றும் உடல் உணர்வைக் கடந்த நிலையினை நீ அடைந்திருக் கிறாயா என்றும் நான் அறிந்துகொள்ள விரும்பு கிறேன்'' என்று மாஜிஸ்டிரேட் கூறினார்.

ராதாகிருஷ்ணனைக் கடுமையாக சவுக்கால் அடிக்குமாறு மாஜிஸ்டிரேட் இன்ஸ்பெக்டருக்கு உத்திரவிட்டார்,

ராதாகிருஷ்ணன் அடிதாங்கமுடியாமல் அலறி னார். ''ஐயா, வேதாந்தத்தின் இந்தப் பகுதியில் நான் இன்னும் பயிற்சிபெறவில்லை. இது மிகவும் கடினமானது. நான் இப்போது இந்த உடல்தான். என்னை அடிப்பதை நிறுத்துமாறு போலீஸ்காரருக்கு உத்திரவிடுங்கள். வலியை இனியும் என்னால் தாங்க முடியாது. நான் மயங்கி விழுந்துவிடுவேன். எனது குற்றத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். வேதாந் தத்தினை நடைமுறையில் கடைப்பிடிப்பது மிகவும் கடினம். எனக்கு இப்போது தெளிவு ஏற்பட்டு விட்டது. இனி ஒருபோதும் இப்படி முட்டாள் தனமான செயல்களில் ஈடுபடமாட்டேன்.''

பிறகு மாஜிஸ்டிரேட் பின்வருமாறு கூறினார் :

''ராதாகிருஷ்ணா! பிரம்ம நிஷ்ட குருவிடம் செல். அவருடன் பனிரண்டு ஆண்டுகளுக்கு இருந்து வாழ்க்கையை நடத்து. அவருக்கு பக்தியுடன் தொண்டு செய். அவரிடம் வேதங்களை கவனமாகக்

கற்றுக்கொள். தெய்வீகப் பண்புகள் அனைத்தையும் வளர்த்துக் கொள். விஷயங்களைக் கேட்டுத் தெரிந்துகொள். சிந்தனை செய். தியானம் செய். உனது உண்மை ஸ்வரூபமான ஆத்மாவை அறிந்துகொள். அப்போதுதான் ' நான் பிரம்மம். எல்லாம் என்னுடையது'' என்று நீ கூறமுடியும்.

ராதாகிருஷ்ணன், மாஜிஸ்டிரேட் கூறியபடி செய்தார். அவர் ரிஷிகேசம் சென்றார். ஒரு குருவை கண்டுபிடித்தார். அவருடன் பனிரண்டு ஆண்டுகள் வாழ்ந்தார். கடுந்தவம் புரிந்தார். தியானம் செய்தார். இறுதியில் ஆத்ம ஞானம் பெற்றார்.

இக்காலத்தில் வறட்டு வேதாந்தம் பேசுபவர்களும் உதட்டளவில் வேதாந்தம் பேசுபவர்களும் ஏராளமாக இருக்கின்றனர். வேதாந்தம் என்ற பெயரில் பெருமளவுக்கு வீண்பேச்சு பேசப்படுகிறது. ராதாகிருஷ்ணனைப்போன்று செயல்படக்கூடிய பலர் இருக்கின்றனர். வேதாந்தத்தை வெறுமனே பேசுவதாலோ, விசார சாகரம், பஞ்சதசி ஆகிய நூல்களைப் படிப்பதால் மட்டுமோ ஒருவர் நடைமுறை வேதாந்தியாக ஆகிவிட முடியாது. நடைமுறை வேதாந்திகளைக் காண்பது அரிது. அறநூல்களையும், குருநாதரின் சொற்களையும் நீங்கள் சரியாக முறையாகப் புரிந்துகொள்ள வேண்டும். மனத்தின் அழுக்கைப் போக்கவேண்டும். மனம் அலைபாய்வதை நிறுத்தவேண்டும். நீங்கள் அறியாமை என்னும் திரையை விலக்க வேண்டும். நீங்கள் கடுமையாகப் போராடவேண்டும். தீவிரமாக சாதனையில் ஈடுபடவேண்டும். உடலுடன் சம்பந்தப்படுத்திக்கொள்ளும் எண்ணத்தை வெற்றிகொள்ள வேண்டும். முக்குணங்கள், ஐந்து திரைகள், மூன்று நிலைகள் ஆகியவற்றை நீங்கள் கடந்து செல்ல வேண்டும். இப்படிச் செய்த பின்னர் நீங்கள்

உங்களது இயல்பான தெய்வீக நிலையினை அல்லது சச்சிதானந்த நிலையினை அடைவீர்கள். அதன் பிறகு தான் நீங்கள் ஒரு நடைமுறை வேதாந்தியாக அல்லது ஆன்ம ஞானம் பெற்ற ஞானியாக அல்லது ஜீவன் முக்தி பெற்றவராக ஆகமுடியும்.

ஆத்ம ஞானம் பெற்ற நடைமுறை வேதாந்தி களின் புகழ் வாழ்க! அவர்களின் அருள் உங்கள் அனைவருக்கும் கிடைக்கட்டும்.

## 9. புத்திசாலித்தனமான பெண்

சமய நம்பிக்கையும் தரும சிந்தனையும் உடைய மன்னர் ஒருவர் ஒரு பெரும் கண்காட்சியை ஏற்பாடு செய்திருந்தார். எல்லா வகையான பொருட்களும் இலவச வினியோகத்திற்காக வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு ஆண் அல்லது பெண்ணும் தான் விரும் பியதை எடுத்துக்கொள்ளலாம். கண்காட்சியைக் காண நகர மக்கள் அனைவரும் வந்திருந்தனர்.

சிலர் விலையுயர்ந்த ஆடைகளை எடுத்துக் கொண்டனர். சிலர் நகைகளை எடுத்துக்கொண் டனர். சிலர் விலையுயர்ந்த புத்தகங்களை எடுத்துக் கொண்டனர். சிலர் காஷ்மீரிலிருந்து கொண்டு வரப்பட்டிருந்த புதிய பழங்களை எடுத்துக்கொண் டனர். எல்லோரும் திருப்தியுற்றனர்.

அந்த நகரில் புத்திசாலித்தனமான ஒரு பெண் இருந்தாள். வயது முதிர்ந்த அந்தப் பெண் எதை யும் எடுத்துக்கொள்ளவில்லை. அவள் எந்தப் பொருளையும் விரும்பவில்லை.

திவான் இதுபற்றி மன்னரிடம் கூறினார். ''நகர மக்கள் அனைவரும் திருப்தி அடைந்திருக் கின்றனர். ஆனால் வயதான பெண் ஒருத்தி மட்டும்

திருப்தி அடையவில்லை. பொருட்காட்சியிலிருந்து தனக்கு எதுவும் தேவையில்லை என்று அவள் கூறு கிறாள் அவள் மன்னரை நேரில் காண விரும்பு கிறாள்''.

மன்னரும் அந்தப் பெண்ணை நேரில் காண ஒரு யானையில் வந்தார். அந்தப் பெண் மன்னரைப் பார்த்து ''மன்னா! யானையிலிருந்து இறங்கி கீழே வாருங்கள். உங்களிடம் மிக முக்கியமான விஷயம் குறித்துப் பேச வேண்டும்,'' என்று கூறினாள்.

யானைமீது அமர்ந்திருந்த மன்னர் கீழே இறங்கி வந்தார். அந்த வயதான பெண், மன்னரின் வலது கையைப் பிடித்துக்கொண்டு, ''அரசே! நீங்கள் எனக்குச் சொந்தம். பொருட்காட்சியிலுள்ள சிறு பொருள்கள் அல்லது பொம்மைகளில் எனக்கு விருப்பமில்லை. உங்களை என்னுடையவராக ஆக்கிக் கொள்ளப்போகிறேன். நீங்கள் என்னுடையவராக ஆகிவிட்டால் இந்த ராஜ்யத்தின் செல்வம் அனைத் தும் எனக்குச் சொந்தமானதாக ஆகிவிடும்''.

இந்த வயதான பெண்ணின் புத்திசாலித் தனமான பேச்சைக் கேட்டு மன்னர் ஆச்சரிய மடைந்தார். அவர், அவளைத் தன் அரண்மனையில் இருக்கச் செய்து, அவளது ஆயுட்காலம் முழுவதும் அவளைக் காப்பாற்றினார். அவளைத் தனது சொந்த தாயாரைப்போலக் கருதினார்.

நீங்கள் பல்வேறு ஆசைகளை வளர்த்துக் கொண்டு, பொருட்களை நாடி ஓடுகிறீர்கள். திருப்தியோ போதும் என்ற எண்ணமோ உங்களுக்கு ஏற்படுவதில்லை. ஆசைகளுக்கு அடிமையாவதன் மூலம் பிச்சைக்காரர்களைவிடத் தரம் குறைந்தவர் களாக ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் உலகியல் ஆசை களை விடுத்து, பரம்பொருளாகிய இறைவனைப்

பற்றிக்கொண்டால் உங்கள் எண்ணமெல்லாம் நிறைவேறும். அந்த வயதான பெண் மன்னரைத் தன்னுடையவராக ஆக்கிக்கொண்டதன் மூலம் அந்த ராஜ்யத்தின் செல்வம் அனைத்தையும் தனதாக்கிக் கொண்டாள். அதுபோல தியானம் மற்றும் பக்தியின் மூலம் நீங்கள் இறைவனைப் பற்றிக் கொண்டால், நீங்கள் ஆன்மீகச் செல்வம் அனைத்தையும் பெறலாம்.

''பரலோக ராஜ்யத்தை முதலில் அடைய முயற்சி செய்யுங்கள். அதனை நீங்கள் அடைந்து விட்டால் மற்ற அனைத்தும் உங்களை வந்து சேரும்'' என்று ஏசுநாதர் கூறியிருக்கிறார்.

## 10. ஏழையும் பணக்காரனும்

ஒருசமயம் ஏழை ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் அனைவரையும் நேசித்தான். அனைவரும் அவனிடம் அன்பு செலுத்தினர். அவன் பிரார்த்தனை, தியானம் இவற்றில் ஈடுபட்டான். அவன் பேசும்போது முகம் மலர்ந்திருக்கும்.

அவன் ஒருநாள் காட்டிற்குச் சென்றான். அங்கு ஒரு கிழவனை சந்தித்தான். அந்தக் கிழவன் அவனைப் பார்த்து, ''நான் உன்னைப் பணக்காரனாக ஆக்குகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை'' என்றான்.

''அது என்ன நிபந்தனை?'' என்று அந்த ஏழை கேட்டான்.

''உனது அன்பு இதயத்தை எனக்குக் கொடு''.

''பிறகு நான் எப்படி உயிர் வாழ்வேன்?''

''என்னிடம் ஒரு கல் இதயம் இருக்கிறது. அது அற்புதமாக அமைக்கப்பட்டிருக்கிறது. நான்

உனது இதயத்தை எடுத்துக்கொண்டு அந்த இடத்தில் கல் இதயத்தை வைத்துவிடுகிறேன். தசை உடைய இதயம்போல அது துடிக்கும்''.

ஏழை மனிதன் ஒப்புக்கொண்டான். கிழவன், அந்த ஏழைக்கு மந்திரம் போட்டுவிட்டான். ஏழை மனிதன் சுயநினைவு திரும்பப்பெற்று எழுந்தபோது தன்னுடைய அன்பு இதயத்தைத் தான் இழந்துவிட்டதாகவும், அதற்குப் பதிலாக ஒரு இரும்பு இதயத்தை பெற்றிருப்பதாகவும் அவன் உணர்ந்தான்.

அவன் வீடு திரும்பினான். எவ்வித கஷ்டமுமின்றி அவனுக்கு பணம் வந்து சேர்ந்தது. அவன் தொட்டதெல்லாம் பொன்னாயிற்று. இனி, தன்னால் கடவுளையோ, மனிதனையோ நேசிக்க இயலாது என அவன் உணர்ந்தான். தான் கடுமையாகப் பேசுவதையும், கோபப்படுவதையும் அவன் உணர்ந்தான். பிறகு, கடவுளிடத்திலும் மனிதனிடத்திலும் அன்பு செலுத்தாத வாழ்க்கை, ஒரு வரப்ரசாதம் அல்ல என்றும் அது ஒரு சுமை என்றும் அவன் உணர்ந்தான்.

வாழ்க்கைப் பாதையில் இரும்பு இதயத்துடன் பலர் நடந்து செல்கின்றனர். உங்களைச் சுற்றியுள்ள மனிதர்களைப் பாருங்கள். பணம், பதவி, புகழ், அதிகாரம், தங்கம் இவற்றை நாடி எத்தனைபேர் ஓடுகிறார்கள் என்று பாருங்கள். எத்தனை ஆண்கள் பெண்களை நாடிச் செல்கிறார்கள் என்றும் எத்தனை பெண்கள் ஆண்களை நாடிச் செல்கின்றனர் என்றும் பாருங்கள். எத்தனை பேர் புலன் இன்பத்தில் விருப்பம் கொண்டு வாழ்கின்றனர் என்றும் பாருங்கள்.

''செல்வத்தால் திசைமாற்றப்பட்ட முட்டாளான ஒரு பணக்காரனுக்கு அடுத்துச் செல்ல வேண்டிய பாதை தெரிவதில்லை. 'இதுவே உலகம்—வேறு உலகம் இல்லை என்று அவன் எண்ணுகிறான். ஆதலால் மீண்டும் என் பிடியில் சிக்கிக்கொள்ளுகிறான்'' என்று மரண தேவதையான யமன், நசிகேதனிடம் கூறினான்.

ஆகவே, அன்புச் சகோதரர்களே! இதயத்தை இளகியதாகவும் அன்பு செலுத்தும் தன்மை கொண்டதாகவும் ஆக்கிக்கொள்ளுங்கள். அன்பும் கருணையும் நிறைந்திருக்கும் பாதையில் நடந்து செல்லுங்கள். வாழ்க்கையின் இறுதி லட்சியத்தை அடைவீர்கள். நீங்கள் உலகிற்கு ஒரு வரப்பிரசாதமாக இருப்பீர்கள்; பிறருக்கு ஒளி காட்டும் விளக்காகத் திகழுவீர்கள். வேதனை, கவலை, துன்பம் இவற்றுடன் அல்லற்படும் மக்களிடத்தில் அமைதி, ஆனந்தம் மற்றும் சுகம் ஆகியவை இடம்பெறச் செய்வீர்கள்.

## 11. சிவாஜியின் அகந்தை அகற்றப்பட்டது

மகாராஷ்ட்ரத்தின் மாபெரும் வீரர், சிவாஜி. அவர் ஒரு பெரும் கோட்டையைக் கட்டினார். அந்தப் பணியில் ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் ஈடுபட்டிருந்தனர்.

''இந்தத் தொழிலாளர்கள் அனைவருக்கும் நான் உணவளிக்கிறேன்'' என்று சிவாஜி எண்ணினார். தற்பெருமையும், கர்வமும் அவரது மனத்தில் மெதுவாகப் புகுந்தது.

சிவாஜியின் குருநாதர் சமர்த்த ராமதாசர் இதை கவனித்தார். அவர் சிவாஜிக்குப் பாடம் கற்பிக்க விரும்பினார்.

ஒருநாள் சமர்த்த ராமதாசர் அரண்மனைக்கு வந்தார். பேரரசனைப் புகழ்ந்துரைத்தார்.

''சிவாஜி! பல தொழிலாளர்களுக்கு நீ உதவி செய்கிறாய். நீ மகத்தான காரியம் செய்து வருகிறாய்'' என்று சமர்த்த ராமதாசர் கூறினார்.

சிவாஜி பெருமகிழ்ச்சி அடைந்தார். ''குரு மகராஜ்! எல்லாம் உங்கள் கருணையால் நடக்கிறது'' என்று சிவாஜி கூறினார்.

பிறகு ராமதாசர் ஒரு கல்லை சிவாஜியிடம் கொடுத்து, உடைக்கச் சொன்னார்.

கல் உடைக்கப்பட்டது. அதிலிருந்து ஒரு தவளை துள்ளிக் குதித்து ஓடி வந்தது; தண்ணீரும் வடிந்தது.

'சிவாஜி இந்தக் கல்லுக்குள் இருந்த தவளைக்கு உணவளித்தது யார்?' என்று ராமதாசர் கேட்டார்.

சிவாஜி விஷயத்தைப் புரிந்துகொண்டார்; வெட்கித் தலைகுனிந்தார்.

''பிரபு! என்னை மன்னித்துவிடுங்கள். என் கர்வம் அகன்றது. இனி ஒருபோதும் இவ்வாறு எண்ணமாட்டேன்'' என்று சிவாஜி கூறினார்.

## 12. இரு பறவைகள்

ஒரு காலத்தில் ஒரு விவசாயியின் நிலத்தில் இரு பறவைகள் தம் குஞ்சுகளுடன் வசித்துவந்தன. ஒவ்வொரு நாளும் காலையும், மாலையும் தமது குஞ்சுகளுக்காக இரை தேடி அந்தப் பறவைகள் வெளியே செல்லும்.

ஒரு நாள் மாலை அவை இரை தேடிக்கொண்டு திரும்பின. குஞ்சுகள் மிகவும் கவலையுற்றிருந்தன. ''நாளை கதிர் அறுக்குமாறு விவசாயி தன் உறவினர் களிடம் கூறியிருக்கிறார்'' என்று குஞ்சுகள் கூறின.

''கு ழ ந் தை க ளே ! கவலைப்படாதீர்கள். விவசாயியின் உறவினர்கள் அவருக்கு ஒருபோதும் உதவி செய்யமாட்டார்கள். நமக்கு ஒரு தொல்லை யும் வராது. மகிழ்ச்சியாக இருங்கள்'' என்று பறவைகள் கூறின.

''விவசாயி தன் புதல்வர்களிடம் கதிர் அறுக்கு மாறு சொல்லியிருக்கிறார்'' என்று அடுத்த நாள் குஞ்சுகள் கூறின.

பறவைகள் சிரித்தன. ''அன்புக் குழந்தை களே, இப்போதும் நமக்கு ஒரு ஆபத்தும் இல்லை. அனாவசியமாக நீங்கள் அச்சப்படாதீர்கள். அவரது புதல்வர்கள் அவருக்கு ஒருபோதும் உதவமாட்டார் கள்'' என்று அவை கூறின.

மூன்றாம் நாள் குஞ்சுகள் பறவைகளிடம் பின் வருமாறு கூறின : ''நாளை விவசாயி தானே கதிர் அறுக்க முடிவு செய்துவிட்டார். தான் யாரையும் நம்பப்போவதில்லை என்று அவர் சொல்லி விட்டார்''.

''இப்போது நிலைமை மிகவும் ஆபத்தாகப் போய்விட்டது. நாம் உடனடியாக வேறொரு வயலுக்குப் போகவேண்டும். விவசாயி இப்போது தன்னையே நம்பியிருக்கிறார். வேறு எவரையும் நம்பவில்லை. ஆகவே அவர் நிச்சயமாக கதிரை அறுக்க வந்துவிடுவார்'' என்று பறவைகள் கூறின.

பறவைகள் தம் குஞ்சுகளுடன் உடனடியாக அந்த இடத்தைவிட்டு அகன்று மற்ெறாரு வயலுக்குச் சென்றன. அடுத்த நாள் அந்த விவசாயியும் தவருது வந்து கதிரை அறுத்தார்.

தற்சார்பு எல்லாப் பண்புகளிலும் தலையாயது. நீங்கள் உங்களையே நம்பி இருங்கள்.

## 13. துணிந்து நில்

பிரேமாதேவியும், சிறுவனுன அவளது மகனும் பூர்வீகமான தமது இல்லத்தைவிட்டு வெளியேறினர். ஏனெனில் ஒரு பிசாசு அவர்கள் உறவினர்கள் அனைவரையும் கொன்றுவிட்டது. பிரேமாதேவியின் பெற்றோர்களையும் அவளது ஆறு சகோதரர்களையும் பிசாசு கொன்றுவிட்டது. ஆதலால் இந்த வீட்டை விட்டு வெளியேறி வேறு எங்காவதுபோய் வசிப்பதே சிறந்தது என்று அவள் எண்ணினுள்.

சில ஆண்டுகள் சென்றன. சிறுவன் இளைஞன் ஆனுன். ஒரு நாள் அவன் தனது தாயாரிடம் பின் வருமாறு கேட்டான்: ''அம்மா, நாம் எங்கிருந்து வந்திருக்கிறோம்? எனது நண்பர்கள் இதுபற்றிக் கேட்கின்றனர். நாம் பூர்வீகமான நமது இல்லத்தை விட்டு ஓடிவந்துவிட்டதாக அவர்கள் சொல்லுகிறார்களே, அது உண்மையா?''

"ஆம், அவர்கள் சொல்லுவது உண்மைதான்".

' ஏனம்மா அங்கிருந்து ஓடிவந்தீர்கள்?''.

''ஒரு மாதத்தில் நமது வீட்டில் எட்டுப் பேர்கள் இறந்துவிட்டனர். அத்தகைய வீட்டில் வசிப்பது நல்லதல்ல. அது பேய் நடமாடும் வீடு''.

''மற்றவர்கள் இறந்தால் என்ன? அதனுல் என்ன தீங்கு ஏற்பட்டுவிடும்? வா, திரும்பவும் நமது வீட்டுக்கே போகலாம்.''

மகனின் வற்புறுத்தலுக்கு இணங்கி பிரேமா தேவி மகனுடன் தமது சொந்த வீட்டுக்குத் திரும்பினுள்.

தாயாரின் இதயத்திலிருந்து அச்சம் மறையவில்லே. அவள் தினமும் பேய்க்கு என்று தனியாக சாதம் எடுத்துவைப்பது வழக்கம். இப்படித் தனியாக எடுத்துவைத்த பின்னர்தான் அவர்கள் உணவு உட்கொள்ளுவார்கள். தாயார் ஏன் இப்படிச் செய்கிருர்கள் என்று அறிந்துகொள்ள இளேஞன் விரும்பினுன்.

அவனுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. ஒரு நாள் பிரேமா தேவி தனது மகனுக்குப் பிடித்த ஒரு கறியினேச் சமைத்திருந்தாள். மகன் பிசாசுக்கு வைத்திருந்த பங்கையும் உட்கொள்ள விரும்பினுன். தாயார் அனுமதிக்கவில்லே.

''அம்மா, இதை யாருக்காக வைத்திருக்கிறீர்கள்''.

''உன் மாமன்மார்களேக் கொன்றுதின்ற பிசாசுக்காக வைத்திருக்கிறேன்''.

''என்ன! உங்கள் சகோதரர்களேக் கொன்ற பிசாசுக்கா உணவளிக்கிறீர்கள்? கேவலம்! அதனே நானே உண்ணுகிறேன்.''

''வேண்டாம் மகனே, அந்தப் பிசாசு நம்மையும் கொன்றுவிடும். அதை விட்டுவிடு''.

அன்று பிசாசு வருகிறதா என்று ரகுவீர் பார்த்துக்கொண்டே இருந்தான். பிசாசு உணவு உட்கொள்ள வந்தபோது ரகுவீர் அதைப் பார்த்து, ''ஏ பிசாசே! நீ யார்?'' என்று கேட்டான். நான் உனது தாத்தாவின் அத்தானுடைய ஆவி. உனது தாத்தாவையும் உனது மாமன்மார்களையும் நான் தான் கொன்றேன். ஏனென்றால், அவர்கள் என்னுடைய சொத்து முழுவதையும் பறித்துக்கொண்டு நான் பரம ஏழையாக இருக்கின்ற அளவுக்கு விட்டுவிட்டார்கள்''.

''நீ என்ன பெரிய பலசாலியா ?''.

''ஆம் நான் மிகவும் சக்தி வாய்ந்தவன். நீ மூட்டைப்பூச்சியைக் கொல்லுவதுபோல நான் உனது தாத்தாவையும் மாமன்மார்களையும் கொன்றுவிட்டேன். நான் உனது தாயாரையும் கொன்றிருப்பேன். ஆனால் அவள் தப்பித்துக் கொண்டாள். அவள் இப்போது எனக்கு உணவு தருகிறாள். ஆதலால் உங்களுக்குத் தீமை செய்ய மாட்டேன். ஒன்றை நினைவில் வைத்துக்கொள். தெய்வங்களும் பிசாசுகளும் இருக்கும் இடத்துக்கு நினைத்த மாத்திரத்தில் என்னால் பறந்து செல்ல முடியும்.''

''நீ எனக்கு ஒரு உதவி செய்ய முடியுமா ? தெய்வங்கள் இருக்கும் இடத்துக்கு என்னை அழைத்துச் செல்லுவாயா ?'' என்று இளைஞன் கேட்டான்.

''முடியாது'' என்று பிசாசு கூறியது.

''சரி, அப்படியானால் தெய்வத்திடமிருந்து எனக்கு ஒரு தகவல் கொண்டுவருகிறாயா?''

''நிச்சயமாக. என்ன தகவல் அது ?''

''நான் இந்த உலகில் எவ்வளவு காலம் வாழ்வேன் என்று கேட்டுவா''.

''மிகவும் நல்லது'' என்று சொல்லிவிட்டு அந்த பிசாசு போய்விட்டது.

அடுத்த நாளே அது தகவல் கொண்டுவந்தது.

''ரகுவீர் நீ அறுபது வயது வரை வாழ்வாய்''

''நண்பா எனக்காக இன்னும் ஒரு உதவி செய்வாயா? தெய்வங்கள் என்னை ஐம்பதாவது வயதில் கொன்றுவிட வேண்டும் அல்லது நூறு வயது வரை வாழ அனுமதிக்கவேண்டும். இது முடியுமா என்று கேட்டுவா''.

''சரி'' என்று சொல்லிவிட்டு பிசாசு சென்றது.

''உனது வேண்டுகோளை தெய்வங்களிடம் தெரிவித்தேன்'' என்று அடுத்த நாள் காலை பிசாசு கூறியது. அது மேலும் பின்வருமாறு கூறியது. ''உனது ஆயுளில் ஒரு நாள் கூட குறைக்கவோ அதிகப்படுத்தவோ முடியாது. குறிப்பிட்ட நேரத்தில் உனது மரணம் சம்பவிக்கும்''.

ரகுவீர் இந்த பதிலைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். பிசாசுக்காக வைத்திருந்த உணவைத் தான் உட்கொண்டான். இந்தப் பதில் கிடைத்ததும் சமையலறையிலிருந்து கொள்ளிக் கட்டை ஒன்றை எடுத்து வந்து பிசாசை நையப் புடைத்துவிட்டான்.

''ஓடு! இந்த வீட்டைவிட்டு ஓடு. இனிமேல் இங்கு வராதே'' என்று கூறி ரகுவீர் பிசாசை விரட்டினான்.

அன்னையின் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே அவன் பின்வருமாறு கூறினான்.

''அம்மா! இந்தப் பிசாசு என்னை என்ன செய்ய முடியும்? நான் எனது வினைப்பயன்படியே இறப்பேன். அதற்கு ஒரு நாள் முன்னரோ அன்றிப் பின்னரோ இறக்கமாட்டேன். இந்த வீட்டிலிருந்து எல்லாப் பேய்களையும் பிசாசுகளையும் விரட்டிவிடுகிறேன். பயப்படாதே. நமது துன்பங்களுக்குக் காரணம் நமது எதிரிகளோ, பூச்சிகளோ, மிருகங்களோ அல்ல; பிசாசுகள் அல்லது தெய்வங்களின் கோபத்தாலும் நாம் துன்பப்படுவதில்லை. நமது சொந்த வினையின் காரணமாகத்தான் நாம் துன்பப்படுகிறோம். நாம் வேறு யாருக்கும் பயப்பட வேண்டியதில்லை. கீழ்த்தரமான, ஆசைகள் நிறைந்த, தவறுகள் செய்கின்ற மனிதர்களைப் பார்த்துத்தான் நீங்கள் பயப்பட வேண்டும். அம்மா! தைரியமாக இருங்கள். நாம் கடவுளைப் போற்றுவோம். தெய்வீக வாழ்க்கை நடத்துவோம். பிறகு எதைக் கண்டும் நாம் அஞ்சவேண்டியதில்லை.

## 14. பீர்பாலும் அவரது மைத்துனரும்

பீர்பால் அக்பரின் அமைச்சர். அவர் அறிவுக் கூர்மையுடனும் நகைச்சுவையுடனும் பேசுவதில் ஆற்றல் உடையவர்.

பீர்பாலின் மைத்துனர் அவர்மீது பொறாமை கொண்டார். ''பாதுஷா ஏன் இந்த மனிதரையே நேசிக்கிறார்? பீர்பாலைப்போல நானும் இந்த ராஜ்யத்தை நிர்வாகம் செய்ய முடியும்'' என்று எண்ணினார்.

வஞ்சகமான பல்வேறு செயல்முறைகளின் மூலம் அவர் பாதுஷாவை அணுகினார். பீர்பாலை பதவியிலிருந்து விலக்குமாறு யோசனை கூறினார்.

''அமைச்சரின் பொருப்புக்களை என்னால் மேலும் திறமையாகவும் விசுவாசமாகவும் நிர்வகிக்க முடியும்'' என்று கூறினார்.

பீர்பால் இதனைக் கேள்விப்பட்டார். புன் முறுவல் பூத்தார். அவர் தனது பதவியை ராஜினமா செய்தார். தனது இடத்தில் தனது மைத்துனரை அமர்த்தினார். ராஜ்யத்தைவிட்டு வெளியேறினார்.

அக்பர் புதிய அமைச்சரின் திறமையை சோதித்துப் பார்க்க விரும்பினார். அவரிடம் ரூ. 500ஐக் கொடுத்துப் பின்வறுமாறு கூறினார் : ''இந்தப் பணத்தை நீங்கள் செலவு செய்யுங்கள். நீங்கள் செலவு செய்கிற பணத்தின் மூலம் நான் இந்த உலகில் ரூ 500 பெற வேண்டும்; இந்த உலகை விட்டு நான் சென்றடையும் மற்றொரு உலகிலும் எனக்கு ரூ. 500 கிடைக்கவேண்டும். ரூ. 500 இங்கும் கிடைக்கக்கூடாது; அங்கும் கிடைக்கக் கூடாது. செலவழித்த பின்னர் ரூ. 500ஐ அப்படியே என்னிடம் கொண்டுவந்து கொடுக்கவேண்டும்.''

புதிய அமைச்சர் கவலையில் ஆழ்ந்தார். மன்னர் சொல்லியபடி செய்ய வழி தெரியவில்லை. அவருக்கு உறக்கம் வரவில்லை. உணவு உண்ண முடியவில்லை. சில நாட்களில் ஆள் எலும்பும் தோலுமாக ஆகி விட்டார். அவருடைய மனைவி, 'பீர்பாலை அணுகுங்கள். அதைத் தவிர வேறு வழியில்லை' என்று யோசனை கூறினாள். அவரும் அப்படியே செய்தார்.

''பணத்தை என்னிடம் கொடுங்கள். எல்லா வற்றையும் நான் பார்த்துக்கொள்கிறேன்'' என்ருர் பீர்பால்.

புதிய அமைச்சர் 500 ரூபாயை பீர்பாலிடம் கொடுத்தார். பீர்பால் ராஜ்யத்துக்குள் நுழைந்து, சாலையில் நடந்து சென்ருர். பெரும் பணக்காரரான வியாபாரி ஒருவர் தனது மகளின் திருமணத்தை சிறப்பாக நடத்திக்கொண்டிருப்பதைக் கண்டார். அந்த வீட்டிற்குள் நுழைந்தார். மணப்பந்தலில் உரத்த குரலில் பின்வருமாறு அறிவித்தார்: ''வியாபாரியே! பாதுஷா திருமண அன்பளிப்பாக ரூ. 500 உனக்கு அனுப்பியிருக்கிருர். இந்த அன்பளிப்பை நேரில் உன்னிடம் கொடுப்பதற்காக என்னை அனுப்பிவைத்திருக்கிருர்''.

வியாபாரி பெருமகிழ்ச்சி அடைந்தார். அவர் பீர்பாலை அன்புடன் உபசரித்தார். பதிலுக்குப் பல பரிசுப் பொருட்களும் நிறையப் பணமும் பீர்பாலிடம் கொடுத்தார்.

அவற்றைப் பெற்றுக்கொண்டு பீர்பால் அருகில் உள்ள கிராமத்திற்குச் சென்ருர். அவர் ரூ 500க்கு இனிப்பு பண்டங்களை வாங்கி பாதுஷாவின் பெயரில் அதனை ஏழைகளுக்கு வினியோகித்தார். அவர் நகருக்குத் திரும்பிவந்து இசை விருந்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்தார். நாட்டிய, இசைக் கலைஞர்களை வரவழைத்தார். இந்த நிகழ்ச்சிக்காக ரூ. 500 செலவழித்தார்.

பிறகு பீர்பால் அக்பரின் தர்பாருக்குள் நுழைந்தார். பீர்பால் திரும்பி வந்தது கண்டு மன்னர் மகிழ்ச்சி அடைந்தார்.

''பாதுஷா சாகேப்! இந்த 500 ரூபாயை பெற்றுக்கொள்ளுங்கள். எனது மைத்துனரிடம் நீங்கள் சொல்லியபடி எல்லாவற்றையும் செய்து விட்டேன்''.

''எப்படி?'' என்று பாதுஷா வினவினார்.

"நீங்கள் கொடுத்த 500 ரூபாயை வியாபாரிக்கு அன்பளிப்பாகக் கொடுத்தேன். அது இந்த உலகத்துக்கு. ஏழைகளுக்கு 500 ரூபாய் அளவுக்கு இனிப்புகளை வினியோகித்தேன். இதை விண்ணுலகில் நீங்கள் பெறுவீர்கள். ரூ. 500 இசை விருந்துக்காகப் பயன்படுத்தினேன். அதன் மூலம் உங்களுக்கு இங்கும் எதுவும் கிடைக்காது; அங்கும் எதுவும் கிடைக்காது. நீங்கள் விரும்பியபடி இதோ 500 ரூபாய் இருக்கிறது.

பீர்பாலின் மைத்துனர் வெட்கித் தலை குனிந்தார். அவர் அவமானம் அடைந்தார். அவரது பொறாமை அகன்றது.

இக்கதையில் மற்றொரு நீதியும் உள்ளது. உங்கள் நண்பர்களுக்காக நீங்கள் செலவு செய்கிற பணம், தொண்டு அல்லது உதவி என்ற வடிவில் அவர்களிடமிருந்து கிடைக்கும். தர்மம் செய்கிற பணத்துக்கு விண்ணுலகில் இறையருளையும் சிறப்பான வாழ்க்கையையும் பெறுவீர்கள். புலன்வழி இன்பங்களுக்காக நீங்கள் செலவு செய்வது வீணானது. அதனால் உங்களுக்கு இங்கும் பலனில்லை; அங்கும் பலனில்லை. ஆகவே தருமம் செய்து நிலையான பேரானந்தத்தை அடையுங்கள்.

## 15. அவமதிப்புக்குக் கிடைத்த பரிசு

த்யாசிந்து பூரி நகரத்தின் சாலைகளில் நடனமாடிக்கொண்டு சென்றார். அவருக்கு வயிறு பசித்தது. அவர் ஒவ்வொரு நாளும் ஒரு டம்ளர் பால் மட்டும் உணவாகக் கொள்ளுவது வழக்கம். பாலை பிக்ஷையாகப் பெறுவதற்காகச் செலவிடுகிற இந்த நேரத்தைத் தவிர மற்ற நேரம் முழுவதும் அவர் ஜகந்நாதரிடம் அன்பு செலுத்திவந்தார். ஜகந்நாதரின் பெயரையும் புகழையும் போற்றிப் பாடினார், நடனம் ஆடினார். மற்றவர்களையும் நடனம் ஆடச் செய்தார். அவர்கள் பெருமகிழ்ச்சியும் பரவச நிலையும் அடையச் செய்தார்.

அருகில் இருந்த ஒரு வீட்டில் ஒரு இளம் பெண் தாழ்வாரத்தைக் கழுவித் தூய்மைப்படுத்திக் கொண்டிருந்தாள். தயாசிந்து அங்கு சென்றார்.

''தாயே, ஒரு டம்ளர் பால் கொடு, பசிக்கிறது''.

இதைக் கேட்ட அந்தப் பெண் ஆத்திரம் அடைந்தாள். அதிகாலையில் எழுந்ததிலிருந்து அவள் தொடர்ந்து வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தாள். பசுக்களுக்கு வேண்டியவற்றை கவனித்தாள். அவளுடைய ஆறு குழந்தைகளையும் குளிக்கச் செய்து ஆடைகளை அணிவித்தாள். கணவனுக்கு சிற்றுண்டி தயார் செய்து வைத்தாள். இப்போது தரையை சுத்தப்படுத்திக் கொண்டிருக்கும்போது, அவளுடைய குழந்தைகளில் ஒன்று அவள் தலை மயிரைப் பிடித்து இழுத்தது; இனிப்புப் பண்டம் வேண்டும் என்று கேட்டு அழுதது. மற்றொரு குழந்தை பால் குடிக்க ஓடி வந்தது. எல்லாப் பக்கமும் தொல்லைப் படுத்தப்பட்ட அவள்

எரிச்சலின் எல்லையை அடைந்தாள். இந்த நேரத்தில்தான் தயாசிந்து வந்து அகப்பட்டுக்கொண்டார் அவரைப் பார்த்த அந்த பெண் எரிச்சலுடன் 'போ! போ!' என்று விரட்டினுள்.

''காலை முதல் என் குழந்தைகளுக்காகவும் கணவனுக்காகவும் கடுமையாக வேலைசெய்து களைத்துப்போய்விட்டேன். என் கஷ்டத்தை அதிகப்படுத்த சோம்பேரியான நீ இப்போது வந்து சேர்ந்திருக்கிருய்'' என்று சொல்லி வீட்டைக் கழுவித் துடைக்கப் பயன்படுத்திய அழுக்குத் துணியை அந்தப் பெண் தயாசிந்துவின் முகத்தை நோக்கி வீசி எறிந்தாள். அழுக்கும் துர்நாற்றமும் கொண்ட அந்தத் துணி தயாசிந்துவின் மார்பில் வந்து விழுந்தது.

தயாசிந்து ஆனந்தம் அடைந்தார். ''இறைவா! என்ன அற்புதமான ஒரு பொருளை காலையில் தந்திருக்கிருய்! இறைவா, போற்றி! போற்றி!''

'பால் பருகவேண்டும்' என்ற தாகத்தையே அவர் முற்றிலும் மறந்துவிட்டார். அவர் ஆனந்த நடனமாடிக்கொண்டு கடலை நோக்கிச் சென்ருர். தன்மீது வீசப்பட்ட அழுக்குத் துணியை அலசிஞர், அதைக் காயவைத்தார். அதை நல்ல திரியாக ஆக்கிஞர். சிறிதளவு நெய் வாங்கி அதில் தடவிஞர்.

அன்று மாலை ஜகந்நாதர் ஆலயத்தில் தீபாராதனை நடைபெற்றுக்கொண்டிருந்தது. தயாசிந்து பக்தர்களுடன் சேர்ந்து நின்று தரிசனம் செய்தார். அவரும் இறைவனுக்குச் சமர்ப்பணம் செய்ய ஒரு பொருளைக்கொண்டு வந்திருந்தார். அதுதான்

அந்தத் திரி. திடீரென்று அவர் அந்தத் திரியைப் பற்றவைத்து இறைவனுக்கு தீபாராதனை செய்தார். மக்கள் அவரை ஆச்சரியத்துடன் பார்த்தனர். தயாசிந்துவுக்கு இறைவனிடத்தில் அளவற்ற அன்பு இருப்பதை அனைவரும் அறிவர். ஆதலால் அவர் செய்ததை எவரும் ஆட்சேபிக்கவில்லை. அவர் பரவசநிலையினை அடைந்தார். அங்கு திரளாகக் கூடியிருந்த பக்தர்கள் அனைவரும் இறைவன் பெயரைப் பாடினர்.

ஒரு இளம்பெண் பைத்தியம் பிடித்தவள்போல உள்ளே ஓடி வந்தாள். அவள் தலைவிரிகோலமாக ஓடி வந்தாள். அவளது ஆடை தரையைப் பெருக்கிக்கொண்டு வந்தது.

அந்தப்பெண் கண்ணீர் மல்க, ''ஜகந்நாதா! ஜகந்நாதா! கிருஷ்ணா!'' என்று கூறினாள். அங்கு தயாசிந்து இருப்பதைக் கண்டதும், அவள் அவரது பாதங்களில் வீழ்ந்து வணங்கினாள். அவள் உடல் நடுங்கியது. பரவசநிலையின் வசப்பட்டிருந்த தயா சிந்து புன்முறுவல் பூத்தார்.

அந்தப் பெண் கணப்பொழுதில் இறைவனின் அருளைப் பெற்றாள் என்பதை அங்கிருந்தவர்கள் அறியவில்லை.

பிறகு அந்தப் பெண் வீடு திரும்பினாள். மாலையில் உணவு சமைத்து முடித்தாள். தொட்டிலில் போடுவதற்காக குழந்தையைத் தூக்கிக்கொண்டு சென்றாள். குழந்தையைத் தொட்டிலில் படுக்க வைப்பதற்குப் பதிலாக அதைக் கீழே போட்டுவிட்டாள். குழந்தையை விறைத்துப் பார்த்தாள். அதன்முன் மண்டியிட்டாள். பெரிய குழந்தைகள் ஏதும் புரியாமல் அச்சத்தால் அலறின. அவள் அதை

கவனிக்கவில்லை. அவளது கண்ணீர் பெருகி கன்னங்களில் வழிந்தோடியது. அவள் அசையாமல் அமைதியாக இருந்தாள். அவளது இதயத்தில் இறைவனின் ஒளி பரவியது. அதில் பகவான் ஜகந்நாதரை அவள் கண்டாள். தயாசிந்து, தன் மீது வீசப்பட்ட துணியைத் திருப்பி வீசி எறிவதாக அவள் எண்ணிளுள், அவள் ஞான ஒளியைப் பெற்ருள். ''பிரபு! பிராணநாதா!'' என்று உரக்கக் கூறி அவள் கண்ணீர் விட்டுக் கதறிஞள்.

அவளைச்சுற்றி அவளது கணவன், பெற்ருேர், அண்டை வீட்டுக்காரர்கள் ஆகியோர் கூடினர். அவள் யாரைப்பற்றியும் கவலைப்படவில்லை. தனது உற்ருர் உறவினர் தன்னைச் சுற்றி நிற்கிருர்கள் என்ற உணர்வே அவளுக்கு இல்லை. அவள் வீட்டை விட்டு வெளியேறிஞள். எவரும் அவளைத் தடுக்கவில்லை.

தயாசிந்துவை அவள் தரிசித்தாள். இருவரும் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. கருணை நிறைந்த தயாசிந்துவின் முகத்தில் அவள் பின்வரும் அருள் மொழியைப் பெற்ருள்: ''ஒரு பக்தன் தனக்குக் கிடைக்கும் அனைத்தையும் இறைவனின் கருணையால் கிடைப்பதாகவே கருதுகிருன். அவன் தனக்குக் கிடைக்கும் அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிடுகிருன். பக்தன் இறைவனிடமிருந்து தனித்து வாழ்வதில்லை. அவன் இறைவனின் அன்பைப் பெற்று வாழ்கிருன்; இறைவனுக்குத் தொண்டு செய்து வாழ்கிருன். பக்தனுக்கு நீங்கள் ஒரு டம்ளர் பால் கொடுத்தால் அது இறைவனுக்குச் சேருகிறது. நீங்கள் பக்தன்மீது அழுக்குத் துணியை வீசிஞல் அதுவும் இறைவனை அடைகிறது. பக்தன்

அதனை மகிழ்ச்சியுடன் இறைவனுக்கு அர்ப்பணிக்கிறான். ஒரு பக்தன் தன்னிடம் வருகின்ற அனைவரையும் தூய்மைப்படுத்துகிறான்; ஞான ஒளி பெறச் செய்கிறான்.''

அந்தப் பெண் தயாசிந்துவின் சிஷ்யை ஆனாள்.

## 16. நேர்மையின் ரகசியம்

வாழ்க்கை, ஒவ்வொரு மனிதனுக்கும் தொடர்ந்து பாடம் கற்பித்து வருகிறது. இந்த பூமியில் உங்களது வாழ்க்கையின் ஒவ்வொரு கணப்பொழுதும் உங்களுக்குப் பாடம் கற்பிக்கப்படுகிறது; ஆனால் அதனை நீங்கள் உடனே மறந்து விடுகிறீர்கள். ஆயினும் இயற்கை அன்னை வருந்தாமல், வாழ்க்கை அனுபவங்கள் மூலம் மீண்டும் மீண்டும் உங்களுக்குப் பாடம் கற்பிக்கிறாள். அவள் அயராது போதனை செய்துவருகிறாள். நீங்கள் உங்களது வாழ்க்கையின் முன் அனுபவங்களை நினைவில் வைத்திருந்தால் நீங்கள் ஒருபோதும் தவறு செய்யமாட்டீர்கள்; சரியான பாதையிலிருந்து விலகிச் செல்லமாட்டீர்கள். இந்த போதனைகளைச் சொத்து என மதித்து முன் அனுபவங்களை மறக்காமல் இருந்தால், நீங்கள் அறிவுடையவராக ஆகி, ஞானத்திலும் உங்களது பெருந்தன்மையிலும் சிறந்து விளங்குவீர்கள்.

பெர்சிய நாட்டில் தாரா என்ற ஒருவன் இருந்தான். ஆடுமாடு மேய்ப்பது அவன் தொழில். அவன் மிகவும் பணிவுள்ளவன். பரம ஏழை. ஆனால் சிறந்த அறிவு உடையவன். மனிதன் மற்றும் பொருட்களைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து புரிந்துகொள்ளும் ஆற்றல் அவனுக்கு இருந்தது.

தாராவின் அறிவையும் ஆற்றலையும் அறிந்த பெர்சிய மன்னர், அவனை அரசாங்கப் பணிக்கு அமர்த்தினார். தாரா விரைவிலேயே மன்னரின் நம்பிக்கைக்கு உகந்த பிரதம மந்திரியாக உயர்ந் தான். அரசாங்கப் பதவிகளில் இருந்த மற்றவர்கள் தாராமீது பொறாமை கொண்டனர். அவனுக்கு அவமானத்தை ஏற்படுத்தி பதவியிலிருந்து இறக்க தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தனர்.

மன்னர், தாராவின்மீது அளவிலா நம்பிக்கை வைத்திருந்தார். ஒருமுறை அவரது ராஜ்யத்தில் உள்ள முக்கியமான மாநிலத்துக்கு தாராவை ஆளுநராக அனுப்பிவைத்தார். அவன் தலைநகரை விட்டுச்சென்றதும் அவன்மீது பொறாமையும் பகை யும் கொண்ட மற்ற அதிகாரிகள் அவனைப்பற்றி மன்னரிடம் புகார் தெரிவித்தனர். அவன் ஊழல் புரிவதாகவும், அரசாங்கப் பணத்தை எடுத்துக் கொண்டு அவன் தனது செல்வத்தைப் பெருக்கிக் கொண்டதாகவும், இவ்வாறு முறைகேடாக தான் பெற்ற செல்வத்தை அவன் எப்போதும் தன்னுட னேயே எடுத்துச் செல்வதாகவும் அதை ஒரு பெட்டி யில் வைத்து பாதுகாத்து வருவதாகவும் பொறாமை யாளர்கள் மன்னரிடம் கூறினர். மேலும், தாரா வெளியூர்களுக்குச் செல்லும்போது இந்த பணப் பெட்டியும் அவனுடனேயே செல்வதாகவும் அதனை ஒரு ஒட்டகத்தின்மீது வைத்து எடுத்துச் செல்வ தாகவும், இரவில் தனது கூடாரத்தில் தான் தனித் திருக்கும்போது மட்டும் அந்தப் பெட்டியைத் திறந்து பார்ப்பதாகவும் அவர்கள் மன்னரிடம் கூறினர். அவன் அந்த பெட்டியைவிட்டு ஒரு போதும் பிரிந்ததில்லை என்றும், பொது இடத்தில்

அந்தப் பெட்டியை ஒருபோதும் திறந்ததில்லை என்றும் அவர்கள் கூறினர். இதுதான் அவர்களின் பயங்கரமான குற்றச்சாட்டு.

மன்னர் தாராவை முழுமையாக நம்பினுர். ஆனுல் மற்ற அதிகாரிகள் தாராவை சோதனை செய்து அவன் ஊழலை அம்பலப்படுத்த வேண்டும் என வற்புறுத்தினர். இறுதியில் மன்னர் தாராவின் கூடாரத்திற்கு இரவில் திடீர் விஜயம் செய்து சோதனையிட்டார். அவர் தாராவை நோக்கி, ''தாரா! எனது நம்பிக்கைக்குரிய நண்பனே! அந்தப் பெட்டியில் இருப்பதை எனக்குக் காட்டு. அதனைக் காண விரும்புகிறேன்'' என்ருர்.

அவன் தயங்கினுன். ஆனுலும் மன்னரின் ஆணைக்குக் கட்டுப்பட்டு அனைவர் முன்னிலையிலும் அந்தப் பெட்டியைத் திறந்து காட்டினுன். என்ன ஆச்சரியம்! ஆடு மேய்க்கும் ஒருவனின் ஆடைகள் அழுக்கடைந்துபோய் அதற்குள் இருந்தது! பெட்டிக்குள் இதைத்தவிர வேறு எதுவுமில்லை. நவரத்தினங்கள், தங்கம், வெள்ளி, பித்தளை ஏன் தாமிரம்கூட அதில் இல்லை.

மன்னர் திகைப்பும் வியப்பும் அடைந்தார். அமைதியாக இருந்த தாராவின்மீது தன் பார்வையைச் செலுத்தினுர். பெட்டியில் இந்த ஆடைகளை வைத்திருப்பதற்கான காரணத்தை தாரா மன்னருக்கு விளக்கினுன்: ''அரசே, நான் இத்தனை ஆண்டுகளாக எதனைக் கவனமுடன் பாதுகாத்து வந்தேன் என்பதை இப்போது அறிந்துகொண்டீர்கள். நீங்கள் என்னைக் கண்டுபிடித்து அன்புடன் அரச பதவி அளிப்பதற்கு முன்பாக நான் ஆடு மேய்த்துக்கொண்டிருந்தேன். அப்போது நான் அணிந்துகொண்டிருந்த உடைகள் இவை. பதவி,

அந்தஸ்து, அதிகாரம் இவையெல்லாம் அஜாக்கிரதையாக வாழும் மனிதனுக்கு ஆபத்தை விளைவிக்கும். இவை ஒரு மனிதனை உயர்ந்த நிலைக்கு உயர்த்தும், மறுநிமிடமே அது அவனைப் பள்ளத்தில் வீழ்த்தும். வளமான வாழ்க்கை, செல்வம், அதிகாரம், கௌரவம் இவையெல்லாம் மனிதனை திசை மாற்றி நேரான பாதையிலிருந்து விலகச் செய்யும். அதிர்ஷ்டம் தன்னைச் சேருவதற்கு முன்பாகவும் கடவுள் தன்மீது கருணைபொழிவதற்கு முன்பாகவும் தான் இருந்த நிலையினை எப்போதும் மறக்காமல் வாழுகிற மனிதனுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது. இத்தகைய மனிதன் எப்போதும் பணிவு, நேர்மை, உண்மை ஆகிய பண்புகளுடன் வாழ்கிறான். எனது முற்கால வாழ்க்கையை நான் நினைவில் வைத்திருக்க இந்த ஆடைகளை பத்திரப் படுத்தி வைத்திருக்கிறேன். ஒவ்வொரு நாள் இரவும் இதனை நான் பார்க்கிறேன். இல்லையென்றால் பதவி மற்றும் புகழ்ச்சியின் வசப்பட்டு நான் இதனை மறந்துவிடுவேன். இதுதான் என்னை பணிவு, தூய்மை, எளிமை ஆகிய பண்புகளுடன் வாழச் செய்கிறது. அரசே! புறத்தோற்றத்துக்கு இந்த தாரா, உங்கள் கருணையால் பிரதம மந்திரியாகவும் ஆளுநராகவும் ஆகியிருப்பதாகத் தோன்றலாம். ஆனால் உண்மையில் இந்த தாரா பணிவு, ஏழ்மை, ஊழலற்ற தன்மை ஆகிய பண்புகளுடைய பழைய ஆடு மேய்க்கும் தாராதான். அவன் தொடர்ந்து அப்படியே இருக்க வேண்டும் என்பது தான் அவன் இறைவனிடம் இடையறாது செய்யும் பிரார்த்தனை.''

சாதகர்களே! துறவியைப் போன்ற பண்புடன் விளங்கும் தாராவிடமிருந்து பாடம் கற்றுக்கொள்ளுங்கள், நீங்கள் உண்மையில் எத்தகையவர் என்பதை இதய பூர்வமாக நினைவில் வைத்திருங்கள்.

புறத்தே ஏற்படும் மாற்றங்களும் வாய்ப்புக்களும் உங்களை நேர்மையற்ற தன்மையிலும், மாயையிலும் ஆழ்த்தாமல் பார்த்துக்கொள்ளுங்கள். தாரா தனது ஆடைகளை பத்திரப்படுத்தியதுபோல, வாழ்க்கையிலிருந்து பாடம் கற்றுக்கொள்ளுங்கள். வாழ்க்கையின் நெறியினை எப்போதும் நினைவில் வைத்திருங்கள். காலத்தின் கோலங்களால் பாதிக்கப்படாமல் இருங்கள். ஆரம்ப காலத்தில் ஆடு மேய்ப்பவனாக இருந்ததை தாரா மறக்கவில்லை. அதுபோல உங்களது உண்மை இயல்பான ஆன்மீகத் தன்மையினை நீங்கள் எப்போதும் மனதில் நிலை நிறுத்துங்கள். அகந்தையின் செல்வாக்கு உங்களை வெற்றிகாண அனுமதிக்காதீர்கள்.

நீங்கள் உங்களது ஆத்மாவின் உண்மை இயல்பினை அறிந்து கொள்ளவும், உங்களது உண்மைத் தன்மைபற்றிய விழிப்புணர்வை நீங்கள் நிலையாகப் பெற்றிருக்கவும், ஆத்மாவின் சிறப்பினை நீங்கள் அறிந்து கொள்ளவும் இறைவன் உங்களுக்கு அருள் புரியட்டும்.

## 17. சிபக் மகாதேவ்

மணமகன், தனக்குத் திருமணம் ஆகிய பின்னர் இரண்டு மாதங்கள் கழித்து ஒரு சவரத் தொழிலாளியுடன் மாமனார் வீட்டுக்குச் செல்ல வேண்டும் என்பது ஒரு கிராமத்தில் வழக்கமாக இருந்தது. இந்தக் கதையின் நாயகனுக்கும் இந்தப் பிரச்னை வந்தது. ஒரு சவரத் தொழிலாளி அழைத்து வரப்பட்டார். அவர் மிகவும் திறமையானவர். 'மாப்பிள்ளை அணிந்துகொண்டு வருவதுபோன்ற ஆடைகளைத்தான் நானும் அணிந்துகொண்டு வருவேன்' என்று அந்தத் தொழிலாளி நிபந்தனை விதித்தார். அந்த நிபந்தனை ஒப்புக்கொள்ளப்பட்டது. மாப்பிள்ளையும், சவரத் தொழிலாளியும் புறப்பட்டனர்.

மாமனூர் வீட்டுக்கு அருகில் அவர்கள் வந்ததும், சவரத் தொழிலாளி மாப்பிள்ளையை நிறுத்திவிட்டு, அவரது சிறப்பான வருகையை மாமனூர் வீட்டாருக்கு அறிவிக்கத் தான் முன்னே செல்வதாகக் கூறிவிட்டுச் சென்றூர். அப்பாவியான அந்த மாப்பிள்ளை அதற்குச் சம்மதித்தார்.

சவரத் தொழிலாளி மாமனூர் வீட்டுக்கு வந்தார். வெளியே தனது வேலைக்காரன் பெட்டியுடன் நிற்பதாகவும் அவனை அழைத்து வரும்படியும் கூறினூர். மாமனூர் வீட்டார் சவரத் தொழிலாளியை மாப்பிள்ளை எனக் கருதி உபசரித்தனர். உண்மையான மாப்பிள்ளையை வேலைக்காரனைப் போல நடத்தினர். அப்பாவி மாப்பிள்ளை இந்த வேதனையை அமைதியாகப் பொறுத்துக்கொண்டார். சில நாட்கள் இவ்வாறு கடந்தன.

ஒரு நாள் வீட்டில் விறகு இல்லை. மாமியார் சவரத் தொழிலாளி மாப்பிள்ளையிடம் வந்து, ''உங்கள் வேலைக்காரனை காட்டுக்கு அனுப்பி விறகு கொண்டுவரச் சொல்லலாமா?'' என்று கேட்டார். சவரத் தொழிலாளி உடனே தயக்கமின்றி அனுமதி கொடுத்தார்.

மாப்பிள்ளை காட்டுக்குச் சென்றூர். விறகு வெட்டினூர். வெட்டிய விறகைக் கட்ட முடியவில்லை. ஏனெனில் காட்டுக்குப் போகும்போது கயிறு எடுத்துச் செல்லவில்லை. இப்போது என்ன செய்வது என்று அவருக்குப் புரியவில்லை. ஓரிடத்தில் உட்கார்ந்து தன் விதியை நொந்துகொண்டு அழுது புலம்பினூர்.

அதிர்ஷ்டவசமாக பரமசிவனும், பார்வதியும் அந்த வழியாக வந்தார்கள். அழுதுகொண்டிருந்த அப்பாவி மாப்பிள்ளையைக் கண்ட அன்னை பார்வதி,

இரக்கம் கொண்டார். அழுகின்ற மனிதன் எதற்காகக் கவலைப்படுகிறான் என்று கேட்டு அறியுமாறு பார்வதிதேவி சிவபெருமானிடம் கூறினார். சிவபெருமான் இந்தச் சம்பவத்தில் கவனம் செலுத்தவில்லை. ஆனால் அன்னை மீண்டும் வற்புறுத்தினாள். சிவபெருமான் மாப்பிள்ளையிடம் காரணத்தைக் கேட்டார். மாப்பிள்ளை கதை முழுவதையும் சொன்னார்.

மாப்பிள்ளைக்கு ஆறுதல் கூறிய சிவபெருமான், 'சிபக் மகாதேவ்' என்ற வார்த்தைகளை நீ சொன்னால் எதுவும் அற்புதமாக ஒட்டிக்கொள்ளும் என்று கூறியருளினார். உடனே மாப்பிள்ளை விறகுகளைப் பார்த்து இந்த வார்த்தைகளைச் சொன்னார். விறகுத் துண்டுகள் ஒட்டிக்கொண்டன. விறகு கட்டைத் தலையில் சுமந்து வீடு வந்து சேர்ந்தார்.

அவர் வீட்டுக்கு வந்தபோது சவரத் தொழிலாளி பால் அருந்திக்கொண்டிருந்தார். அவர் பால் டம்ளரை வாய் அருகில் கொண்டு செல்லும்போது மாப்பிள்ளை, 'சிபக் மகாதேவ்' என்று மந்திரத்தை உச்சரித்தார். டம்ளர் உதட்டில் ஒட்டிக்கொண்டது. சவரத் தொழிலாளி சங்கடமான நிலையில் சிக்கித் தவித்தார். அப்போது அங்கே வந்த மாமியார் உதட்டிலிருந்து அவர் டம்ளரை எடுக்க முடியாமல் தவிப்பதைக் கண்டு அதைத் தான் எடுக்க முன்வந்தார். அவர் டம்ளருக்கு அருகில் கையைக் கொண்டு செல்லும்போது மாப்பிள்ளை 'சிபக் மகாதேவ்' என்று கூறினார். மாமியார் சிலைபோல அசையாமல் நின்று விட்டார். வைத்த கையை எடுக்க முடியவில்லை. வீட்டில் உள்ள அனைவரும் ஒவ்வொருவராக வந்து இந்த வலையில் வீழ்ந்தனர். அவர்கள் அனைவரும் ரயில் பெட்டி போல ஒட்டிக்கொண்டு நின்றனர்.

அருகில் இருந்த பண்டிதர் ஒருவர் அழைத்து வரப்பட்டார். அவர் ஒரு குதிரை மீது சவாரி செய்து வந்தார். குதிரையிலிருந்து இறங்கியதும் குதிரையின் வாலைப் பிடித்தார். மாப்பிள்ளை அதே மந்திரத்தை உச்சரித்தார். பண்டிதர் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார். அவரது கை வாலில் ஒட்டிக்கொண்டது.

அந்த வீட்டில் எல்லோரும் ஒட்டிக்கொண்டிருக்க, ஒருவர் மட்டும் அதில் சிக்காமல் இருப்பதை பண்டிதர் கவனித்தார். அவர் அன்புடன் மாப்பிள்ளையை அழைத்து விபரம் கேட்டார். அவர் மட்டும் ஒட்டிக்கொள்ளாமல் இருப்பதன் காரணத்தை வினவினார். மாப்பிள்ளை நடந்தது முழுவதையும் விபரமாகச் சொன்னார்.

அனைவரும் ஆச்சரியப்பட்டனர். உண்மையான மாப்பிள்ளையை இப்படி அவமானப்படுத்திவிட்டதற்காக அவர்கள் வெட்கப்பட்டனர். பிறகு மாப்பிள்ளை சிவபெருமானைப் பிரார்த்தித்தார். எல்லோரும் விடுவிக்கப்பட்டனர். சவரத் தொழிலாளியை எல்லோரும் நையப்புடைத்தனர். அவர் செய்த வேலைக்கு இது வேண்டியதுதான். அவரை உடனே வீட்டைவிட்டுத் துரத்தினர்.

இக்கதையின் நீதி, எவரையும் ஏமாற்றக் கூடாது என்பதாகும்.

## 18. நாரத முனிவரின் கருணை

ஒரு காலத்தில், நாரத மகா முனிவர் ஒரு காட்டின் வழியே போய்க்கொண்டிருந்தபோது, ஒரு மான் மரணாவஸ்தையில் துடித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். அதன் கால்களில் ஒன்று அம்பு பாய்ந்து முறிந்து போயிருந்தது.

கொஞ்ச தூரம் சென்றதும், அதே நிலையில் ஒரு ஆண் பன்றியும், ஒரு முயலும் தவித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். அவருக்கு மிக்க பரிதாபமாயிருந்தது. மரத்தின் பின்னுலிருந்த புதரில் வேடன் ஒருவன் ஒளிந்துகொண்டு, ஓர் மானைக் கொல்ல, வில்லை வளைத்து, நாண் ஏற்றி அம்பு எய்தத் தயாராயிருந்தான்.

அவனிடம் நேராக நாரதர் செல்லவே, மான் தப்பித்துக்கொண்டது. தனது கவனத்தை மாற்றிய முனிவர் மீது வேடன் கோபங் கொண்டு அவரைத் தூற்றினுன். வேடன், ''முனிவரே! ஏன் என்னிடம் வந்தீர்? குறி வைத்த மாஞன் நீர் குறுக்கே வந்தபடியால், ஓடியே போயிற்று'' என்று குறை கூறவே, நாரதர், ''நான் வழி தவறி விட்டேன், வேடா! உன்னை ஒன்று கேட்கிறேன். மிருகங்களை வேட்டையாடினுல், அவைகளை ஏன் குற்றுயிராய்க் கிடத்துகிருய்? அவைகளைப் பூராவும் ஏன் கொல்லக்கூடாது? குற்றுயிராய்க் கிடக்கும் மிருகங்கள் மிகவும் துன்புறுகின்றன'' என்று கூறினுர். வேடன், ''முனிவரே! குற்றுயிராயுள்ள மிருகங்கள் படும் அவஸ்தைகள் எனக்குப் பரமா னந்தத்தைத் தருகின்றன'' என்று பதிலுரைத் தான். மேலும் அவ்வேடன், ''முனிவரே! என் னுடைய குடிசைக்கு வாருங்கள். மான் தோலோ, புலித்தோலோ தங்களுக்குத் தருகிறேன்'' என்று அழைத்தான். நாரதர் அதற்கு, ''வேடா! எவ்விதத் தோலும் எனக்கு வேண்டாம். எனக்கு உறுதியான ஓர் வாக்குத்தத்தம் கொடு. அது மாத்திரம் போதும். நாளை முதல் நீ எந்த மிருகத் தைக் கொல்வதாஞலும், அதைக் குற்றுயிராய்க் கொல்லாமல், முற்றிலும் கொன்றுவிடு'' என்ருர். வேடன், ''முனிவரே! என்ன வேடிக்கையான வரத்தைக் கேட்கிறீர்கள்? ஒரு மிருகத்தைக்

குற்றுயிராய்க் கிடத்தி விடுவதால் என்ன தீங்கு உண்டாகும் என்பதைத் தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்'' என்று கேட்டான். அதற்கு நாரதர், ''காயமடைந்த பிராணிகள் சகிக்க வொண்ணுத வலியால் தவிக்கும். அதனுல் நீ பெரிய பாவத்தைச் செய்தவனுகிருய். சித்திரவதை செய்யப்பட்டு, மரணத்துக்கு உள்ளான இம்மிருகங் களெல்லாம் அடுத்த ஜன்மங்களிலே இதே மாதிரி யாக உன்னைக் குற்றுயிராய்க் கிடத்திக் கொன்று பழிக்குப் பழி வாங்கும். தாக்குதல் கட்டாயமாக எதிர்த் தாக்குதலைச் செய்யும். கர்மா எனும் சட்டமானது இரக்கமும் தயை தாக்ஷண்யமும் இல்லாதது'' என்ருர்.

நாரத முனிவரது திருவாயிலிருந்து வெளிப் பட்ட ஞானமயமான திருவாசகங்களைக் கேட்டதும் வேடன் பெரும் உணர்ச்சிவசப்பட்டான். பயமும் பச்சாத்தாபமும் அவனைப் பீடித்துக் கொண்டன. தான் செய்த தீய செய்கைகளுக்காகப் பச்சாதாபப் பட்டான். அவன் கண்களிலிருந்து அருவிபோலக் கண்ணீர் பெருகியது. நாரத முனிவரின் திருப் பாதங்களிலே அடியற்ற மரம்போல விழுந்தான். ''மஹரிஷியே! இழிவான பாபி நான்! பிள்ளைப் பிராயந்தொட்டு இதுகாறும் என் தொழில் இதுவே. என்னை ஈடேற்றுங்கள், தேவரே! என்னைக் காப்பாற்றுங்கள். தங்களையே பூரண மாகச் சரண் புகுகின்றேன்'' என்ருன். நாரதர், ''மறுபேச்சில்லாமல், என் புத்திமதியைப் பின் பற்றுவாயாஞல், உன்னை நான் ரக்ஷிக்கிறேன்'' என்ருர். அதற்கு வேடன், ''மதிப்பிற்குரிய மஹரிஷியே! எழுத்துக்கெழுத்து மாருமல் தங்கள் கட்டளையைச் சிரசின்மேல் வைத்து நிறைவேற்று கிறேன். தங்கள் சித்தம்போல நடக்கிறேன்'' என்று

பணிந்தான். நாரதர், ''ஓ, வேடா! வில்லை முறி உடனே'' என்ருர். வேடன், ''பிறகு எப்படி ஜீவிப்பது? ஸ்வாமி!'' எனவும், நாரதர், ''தினந் தோறும் ஆகாரம் படைக்கிறேன். அதற்காகக் கவலைப்படாதே, குழந்தாய்!'' என்று தேற்றினுர்.

வேடன் உடனே முறித்தான் வில்லை. அவனைப் பார்த்து, ''நேராக வீடு திரும்பு, உன் சொத்துக் களை ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடு. கங்காதீரத் திலே ஒரு குக்கிராமத்தில் ஒரு சிறு குடிசை கட்டிக் கொள். ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய நாமத்தையே இடைவிடாமல் பாடு. ''ஓம் ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே, ஹே நாதா நாராயண வாஸுதேவா'' என்று எப்போதும் பஜிப்பாய். தினந்தோறும் போதுமான உணவை அனுப்பி வைக்கிறேன். உன் பெயர் இனி கிருஷ்ணதாஸ்'' என்று உபதேசித்தார். வேடனுகிய கிருஷ்ணதாஸ் உபதேசத்தைப் பிறழாமல் பின்பற்றினுர்.

கங்காதீரத்திலே ஒரு பெரிய மஹரிஷி வந் துள்ளார் என்பதை கிராமவாசிகள் அறிந்தார்கள். புது மஹானுக்காகப் பத்துப் பதினைந்து பேர் தினந் தினம் போஜனம் தயாரித்துக் கொடுத்தார்கள். வேடுவ முனிவர் தமக்குப் போதுமான போஜ னத்தை ஏற்றுக் கொண்டார். மனப்பூர்வமான நம்பிக்கையோடும் பக்தியோடும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினுடைய நாமத்தைப் பாடி வந்தார். இங்ஙனம் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. அவர் ஒரு உண்மையான பக்தர் ஆகிவிட்டார்.

''எனது சிஷ்யனைப் போய்ப் பார்க்கலாம். வாருங்கள்'' என்று ஒரு நாள் நாரதர் பர்வத ரிஷியை அழைத்தார். கிருஷ்ணதாஸின் குடிசைக்கு இரு மஹரிஷிகளும் எழுந்தருளினுர்கள். கிருஷ்ண தாஸ் தமது ஆடையின் நுனியாலே பூமியில்

செல்லும் எறும்புகளை மெதுவாக ஒதுக்கி, வழி செய்து கொண்டு அவ்விரு முனிவர்கள் முன்பாகச் சாஷ்டாங்க தண்டஞ் சமர்ப்பித்தார். குசப்புல்லி ஞல் ஆக்கப்பெற்ற பாய்களின் மீது அமருமாறு பிரார்த்தித்தார். அவர்களது திருவடிகளை நன்னீ ரால் கழுவித் தூய்மைப்படுத்தி சரணுமிர்தத்தை அருந்திஞர்; அதில் கொஞ்சம் எடுத்துச் சிரசிலே தெளித்துக் கொண்டார். பின், அவர் ஸ்ரீ கிருஷ்ண நாமத்தை உச்சரித்துச் சங்கீர்த்தனம் பாடலாஞர். மேலே உயர்த்திய கரங்களுடன் அவர் பரவசமாக நடனம் புரிந்து, ஆனந்தக் கண்ணீரை அருவி போலச் சொரிந்தார். தேஹ உணர்ச்சியே அற்றுப் போய், பாவ ஸமாதியாக ஆறுமணி நேரம் பஜித்தார். பின்புதான் ஸ்தூல சரீர உணர்ச்சி திரும்பியது. கிருஷ்ணதாஸின் மஹத்தான ஆத்மீயப் போக்கு கண்டு முனிவர்கள் மிக்க ஆனந்த முற்றனர். ''உமக்கு ஆகாரம் கிடைக்கிறதா?'' என்று நாரதர் கேட்க, கிருஷ்ணதாஸ் ''தாங்கள் அனுப்பும் ஒவ்வொருவரும் உணவைக் கொண்டு வருகிருர்கள்'' என்று பதிலளித்தார். மஹரிஷிகள் அவரை ஆசீர்வதித்துச் சென்ருர்கள்.

நாரத முனிவரின் கருணையால் கொடிய வேடன் கிருபாநிதியாகிய முனிவராக மாறிவிட்டான். ஒரு கணப் பொழுதேனும் முனிவர்களோடு வைத்துக்கொள்ளும் இணக்கம் கணக்கிட முடியாத நன்மைகளைத் தரும்.

## 19. பாவ மூட்டை

பார்வதி மிகவும் கர்வம் கொண்டிருந்தாள். தான் ஒரு பாவமும் செய்யவில்லை என்று எண்ணிக் கொண்டு இருந்தாள். இந்த உலகில் தான் இறந்த பிறகு நேரக சொர்க்கத்துக்கு போகப்போவதாக உறுதியாக நம்பிஞள்.

ஒரு நாள் அவளது வீட்டில், பெருக்கி சுத்தப் படுத்திக் கொண்டிருந்தாள். திடீரென்று துடைப் பம் ஒரு கரப்பான் பூச்சி மேல் விழுந்தது. அந்த கரப்பான் பூச்சி உடனே இறந்துவிட்டது.

பார்வதி நிலைகுலைந்தாள். அவளுக்கு பைத்தியமே பிடித்துவிடும் போலிருந்தது. ''இந்த பாவத்தை யார் ஏற்றுக்கொள்வார்கள்? இந்த பாவத்தை எப்படி நான் கழிப்பது? இதுவரை நான் ஒரு பாவமும் செய்ததில்லை. நான் இப்போது பாவம் செய்துவிட்டேன். என் செய்வேன்?''

இறந்த கரப்பான் பூச்சியை கையில் தூக்கிக் கொண்டு அங்கும் இங்கும் ஓடினாள். கடைவீதியில் சாவித்திரி என்ற ஒரு பெண் மீன் விற்றுக்கொண் டிருந்தாள். அவளைப் பார்த்த இவள் ஆச்சரியப் பட்டாள்.

பார்வதி, சாவித்திரியைப் பார்த்து, ''வெறுக் கத்தக்க பெண்ணே! நீ இறந்தால் எப்படிப் போவாய் தெரியுமா? நீ தினமும் இத்தனை மீன்களைக் கொல்கிறாயே! நான் இன்று காலை வரை ஒரு பாவமும் செய்ததில்லை. இன்றுதான் தற்செயலாக ஒரு கரப்பான் பூச்சியை கொன்றுவிட்டேன். இந்த பாவத்தையும்கூட ஏதாவது பிராயச்சித்தம் செய்து கழுவிவிட நான் துடித்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறினாள்.

சாவித்திரி, பார்வதியைப் பார்த்து, ''அப்படியா! கவலைப்படாதே! நான் லட்சக்கணக் கான மீன்களை கொன்றிருக்கிறேன். நீ ஒரு பாவமும் செய்யவில்லை. இந்த கரப்பான் பூச்சி பாவம் உன்னைக் கவலைப்படுத்த வேண்டாம். அதை இப் படிக் கொடு. கூடை நிறைய இருக்கிற பாவத்தோடு

அதையும் சேர்த்துவிடுகிறேன். உன் கவலை உடனே பறந்துபோகும். கவலைப்படாதே நானும் கவலைப் படமாட்டேன். ஏனென்றால் கூடை நிறைய உள்ள மீன்களுடன் இந்த சிறு கரப்பான் பூச்சியை சேர்த்திருப்பதால் நிலைமையில் எந்தவிதமான மாற்றமும் ஏற்படப்போவதில்லை'' என்று சொன்னாள்.

பார்வதி மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள். அவள் தன் கையிலிருந்த இறந்த கரப்பான் பூச்சியை சாவித்திரியிடம் கொடுத்தாள். சாவித்திரி அதை வாங்கி மீன் கூடையில் போட்டாள். பார்வதி இப்போது நிம்மதிப் பெருமூச்சுவிட்டாள். சாவித்திரி எதையும் கண்டுகொள்ளவில்லை.

இருவரும் ஒரே நாளில் இறக்க நேர்ந்தது. சாவித்திரியை ஸ்வர்க்கத்துக்கு அழைத்துச் செல்ல ரதம் வந்தது. நரகத்திலிருந்து வந்த தூதர்கள் பார்வதியை அழைத்துச் செல்ல அவளை நெருங்கினர். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவள் கோபமடைந்தாள். அவள் தூதர்களைப் பார்த்து, ''என்ன இது! நீங்கள் தவறு செய்திருக்க வேண்டும். நான் அந்தப் பாவி சாவித்திரி அல்ல. நான் பக்தியுடன் வாழ்ந்தவள். நீங்கள் சாவித்திரியைக் கொண்டு செல்லுங்கள். நான் ஸ்வர்க்கத்திற்குச் செல்ல அந்த ரதத்தை இங்கே அனுப்பிவையுங்கள்'' என்று கூறினாள்.

நரகத்தின் தூதர்கள் பதிலளித்தனர்: ''பெண்ணே! நாங்கள் தவறு எதுவும் செய்யவில்லை. நீதான் நரகத்துக்கு வரவேண்டும். சாவித்திரிதான் ஸ்வர்க்கத்திற்குப் போகவேண்டும்''.

''ஏன் ?''

''பார்வதி! மீன் விற்பது சாவித்திரியின் தொழில். அவள் மீன்களை தன் சுகத்துக்காகக் கொல்லவில்லை. கடமை எனக் கருதிச் செய்கிறாள். கடமை உணர்வுடன் செயல்பட்ட அவள் கடவுள் பக்தியுடனும் வாழ்ந்தாள். அவள் தனது செயல்கள் அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டாள். தன்னை தெய்வீகப் பணியில் ஒரு கருவி யாகவே கருதிக்கொண்டாள். ஆகவே அவள் ஸ்வர்க்கத்துக்குச் செல்லும் தகுதி பெறுகிறாள். மாறாக, நீ ஒரு கரப்பான் பூச்சியைக் கொன்றாய். அதை 'நான் கொன்றேன்' என நீ நினைத்தாய் நீ உனது அகந்தையையும், தற்பெருமையையும் அதிக ரித்துக் கொள்ளவே சில தர்ம காரியங்களையும், நற்பணிகளையும் செய்தாய். உனது கர்வம் காரண மாக நீ துறவிகளையும் அறச் செல்வர்களையும் அலட் சியமாக எண்ணினாய். நீ ஒருபோதும் கடவுளை நினைக்கவில்லை. நீ இறுமாப்பு உடையவள். நீ சுய நலக்காரி. நீ உனது பாவத்தை சாவித்திரி மீது சுமத்தவும் முயற்சித்தாய். மாறாக, சாவித்திரி தன்னலமற்றவள். உனது பாவத்தைச் சுமக்கவும் அவள் ஆயத்தமாக இருந்தாள். பாவத்தைப்பற்றிய எண்ணத்திலிருந்து உன்னை விடுவிக்கவும் செய்தாள். ஆகவே, அவள் ஸ்வர்க்கத்துக்கு போகும் தகுதியைப் பெற்றாள். நீ நரகத்துக்குப் போகும் தகுதியைப் பெற்றாய். உம்-புறப்படு நரகத்துக்கு. தாமதம் செய்யாதே.''

## 20. கருணைக்கு உதாரணம்

பசியால் வாடிய ஒரு மனிதன், ஒரு மரச் சோலை வழியாகப் போய்க் கொண்டிருந்தான். பசி அவனை மிகவும் வாட்டியது. கடந்த மூன்று நாட்க ளாக அவன் உணவு உட்கொள்ளவில்லை. அந்தச் சோலையில் நிறைய மாம்பழங்கள் இருந்தன. அது

மாம்பழக் காலம். சுவைதரும் மாம்பழம் கண்ணைக் கவர்ந்தது. பசியால் வாடிய மனிதன் கல்லை எடுத்தான்; மரத்தின் மீது எறிந்தான். சில மாம்பழங்கள் தரையில் விழுந்தன. அந்த மனிதனின் முகம் மலர்ந்தது. அவனது கைகள் விரைந்து சென்று பழத்தை எடுத்தன. ஆவலுடன் அந்தப் பழத்தை உண்டான்.

தன் பசியைப் போக்கிக் கொள்ளப் பழம் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில், அந்த மனிதன், பழத்தை மரத்திலிருந்து கீழே வீழ்த்திய கல் எங்கே போய் விழுந்தது என்று கவனிக்கவில்லை. கல், தனது பணியை நிறைவேற்றிவிட்டுக் கீழே விழத்தான் வேண்டும்; பசியால் வாடிய மனிதன் மிகப் பெரும் வேகத்துடன் அந்தக் கல்லை எறிந்தான். கல் கீழே விழுவதற்கு முன்பாக ஆகாயத்தை நோக்கி விரைந்து பாய்ந்தது.

விந்தையான சூழ்நிலைகளைத் தோற்றுவிக்கும் விதி சதி செய்தது. அன்றைய நாளில் பசியால் வாடிய மனிதனையும், அந்நாட்டு மன்னனையும் விதி சோலைக்குள் கொண்டு வந்து சேர்த்தது. பசியால் வாடி இறக்குந் தருவாயில் இருந்த மனிதன் கையில் கிடைத்த எதையேனும் சாப்பிட்டு, உயிரைக் காத்துக் கொள்ள விரும்பினான். மன்னனோ, அரசாங்க விருந்துக்குப் பிறகு மரத்தின் குளிர் நிழலில் ஓய்வு எடுக்க அங்கு வந்திருந்தான். மன்னன் தன் மனைவியருடனும், அமைச்சர்களுடனும் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தான். பசியால் வாடிய மனிதன் சோலையிலிருப்பது மன்னனுக்குத் தெரியாது. மன்னன் சோலையிலிருப்பது அந்த பசியால் துடித்த மனிதனுக்குத் தெரியாது.

மரத்தில் பட்டு பழத்தைக் கீழே வீழ்த்திய ஜடப் பொருளான கல்லுக்கு, மன்னன் மீது விழக் கூடாது என்ற மரியாதை தெரியாது. அது சரியாக மன்னன் தலையில் வந்து விழுந்தது. மன்னன் தலைப்பாகை அணிந்திருந்தான். அந்தத் தலைப் பாகை கல் வந்து தாக்கிய வேகத்தில் தலையிலிருந்து தூக்கி எறியப்பட்டு உருமாறியது. தலைப்பாகை மன்னன் தலையைக் காத்தது. மன்னன் தனது மனைவியருடன் ஆனந்தமாக சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தான். கல் விழுந்த காரணத்தை ஆராய அவன் முயற்சிக்கவில்லை. ஆனால் அரசவை யைச் சார்ந்தவர்கள் மன்னனுக்கு இழைக்கப்பட்ட அவமானத்தைச் சகித்துக் கொள்வதாக இல்லை. இந்தத் தவறைச் செய்தவனை அவர்கள் தேடினர். அந்த மனிதன் ஆவலுடன் பழத்தைத் தின்று கொண்டிருந்தான்.

பணியாளர்கள், இந்த மனிதனுக்கு மன்னன் எவ்வளவு கடுமையான தண்டனையை வழங்குவான் என எண்ணிப் பார்த்தனர். மன்னனைத் தாக்கிய வனுக்குக் கடுந் தண்டனை அளித்து மன்னனிடம் நற்பெயர் எடுக்க அவர்கள் விரும்பினர். இந்த வழக்கிலும் அமைச்சர்கள் உடனடியாக நீதிமன்றத் தைக் கூட்டினர். அந்த இடத்திலேயே, மன்னனைத் தாக்கிய அந்த மனிதனுக்கு மரண தண்டனை விதித்தனர்.

மன்னன் விளையாட்டு முடிந்து எழுந்தான். அப்போது சட்ட அமைச்சர் தொல்லை தந்த மனிதன் கடுமையாகத் தண்டிக்கப்பட்டதை மன்ன னிடம் தெரிவித்தார்.

"அவனை இங்கு கொண்டு வாருங்கள்" மன்னன் கட்டளையிட்டான்.

அந்த ஏழை மனிதன் மன்னன் முன் கொண்டு வரப் பட்டான்.

''நீ ஏன் கல்லை எறிந்தாய்?''

''மாம்பழத்துக்காக''

''எதன் மீது கல்லை எறிந்தாய்?''

''மரத்தின் மீது?''

''உனக்குப் பழம் கிடைத்ததா?''

''ஆம் அரசே?''

''நீ பழத்தைத் தின்ருயா?''

''ஆம் அரசே!''

இப்போது மன்னன் சட்ட அமைச்சரை நோக்கிஞன்.

''இந்த மனிதன் பசியால் வாடியிருக்கிருன். அந்நிலையில் மரத்தின் மீது கல்லை விட்டெறிந்திருக் கிருன். அவனுக்கு மாம்பழம் கிடைத்திருக்கிறது. அதனைத் தின்றிருக்கிருன். இப்போது சொல்லுங் கள்; அவன் எவ்வளவு நேரம் பசியிலிருந்து விடுபட் டிருப்பான்?''

''அரசே! சுமார் 24 மணி நேரத்துக்கு அவன் பசியின்றி இருப்பான்.''

''அது போதும். இப்போது நாம் நமது தீர்ப்பை வழங்குகிரேம்.''

அங்குக் கூடியிருந்தவர்கள் மன்னன் முடிவை அறிய மூச்சுக்கூட விடாமல் காத்து நின்றனர். மன்னன் வழங்கும் தண்டனை நீதிபதி அளித்த தீர்ப்பைவிடக் கடுமையானதாக இருக்குமா?

''இன்றிலிருந்து இந்த உலகில் வாழும்வரை இந்த மனிதன் நமது கஜானுவிலிருந்து அவனுக்குத் தேவையான பொருளைப் பெறுவான். இது நமது உத்தரவு. இதனை உடனே நிதி அமைச்சருக்குத் தெரிவியுங்கள்.''

அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். எந்த வகையில் சேர்ந்த தண்டனை இது ?

அரசி தான்தான் இதற்குக் காரணம் என எண்ணினுள். விளையாட்டில் தான் மன்னனை மகிழ்ச்சியுடன் வைத்திருந்ததால்தான் மன்னன் மனமிரங்கி அந்த ஏழைக்கு இப்படி பரிசளித்திருப்ப தாக அரசி எண்ணினுள். அவள் புன்முறுவல் பூத்தாள்.

மன்னன் அரசியைப் பார்த்து, ''ராணி, மரத் துக்குப் புலனறிவு உண்டா இல்லையா ?'' என்முன்.

''இல்லை அரசே!''

''எனக்கு ?''

''என்ன கேள்வி கேட்டீர்கள் ! மன்னு ! இறைவன் படைப்பில் சிறப்புற்றுவிளங்கும் மனிதன் புலனறிவுடையவன். நீங்கள் மனிதருள் மாணிக்கம். நீங்கள் உண்மையில் தெய்வீகத் தன்மையுடையவர். அறிவிலும், விவேகத்திலும் உங்களைவிடச் சிறந்தவர் கள் என்று யார் இருக்கிமுர்கள் ?''

''அன்பே ! அப்படியாளுல் கடவுளருளால் புலனறிவுபெற்றுள்ள நான், புலனறிவற்ற மரத்தை விடத் தகுதி மிக்கவன் என்பதை நிரூபிக்க வேண்டாமா ?''

''நீங்கள் என் பிரபு: உண்மையிலும், விவேகத்திலும் எல்லா மனிதர்களையும்விட நீங்கள் சிறந்தவர். ஆனால் ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?''

''இங்கே பார்! அந்த ஏழை மனிதன் மரத்தின் மீது கல்லை வீசி எறிந்திருக்கிறான். அது அவனுக்கு ருசியான பழத்தைத் தந்திருக்கிறது. அது அவனது பசியை ஒரு நாளுக்குப் போக்கியிருக்கிறது. அவன் வீசிய கல் என் மீதும் விழுந்தது. அதைக்கொண்டு அவன் என்னைத் தாக்கியதாகவும் கூறப்பட்டுள்ளது. அந்த மரத்தைவிட நான் சிறந்தவன் என நிரூபிக்க வேண்டாமா? ஆகவேதான் அவனுக்குத் தேவையானவற்றை அவன் வாழ்நாள் முழுவதும் கொடுக்க நான் உத்திரவிட்டேன்.''

அமைச்சர்கள், பணியாளர்கள், அரசி ஆகிய அனைவரும் மன்னனின் கால்களில் வீழ்ந்து வணங்கி, அவன் பாதத்தின் தூசியை முத்தமிட்டனர். அவனைப் பலவாறு புகழ்ந்து போற்றினர்.

''அரசே! நீங்கள் உண்மையில் இந்த உலகின் தெய்வீக மனிதர். இத்தகைய நேரத்தில் கடவுளைத் தவிர வேறு யார் இப்படிக் கருணையை வெளிப்படுத்த முடியும்! அரசே! இந்த நற்பண்பின் மூலம் நீங்கள் புத்தர், ஏசுநாதர், மற்றும் காலந்தோறும் தோன்றிவரும் ஞானியர்கள், துறவியர்கள் ஆகியோருடன் சமமாக வைத்து மதிக்கத்தக்கவராக உயர்ந்திருக்கிறீர்கள். உங்களை 'வாழ்க! வாழ்க!' என வாழ்த்துகிறோம். அறவழிப்பட்ட பயனுள்ள தங்கள் ஆட்சி இந்த பூமியில் பல்லாண்டுகள் நீடிக்கட்டும். ஏனெனில், உங்களைப் போன்ற ஆட்சியாளர்கள்தான் கருணை, அன்பு, பொறுமை ஆகிய நற்பண்புகளைப் பெற மக்களை ஊக்குவிக்க முடியும்.

உங்களின் சிறப்பான உதாரணத்தைப் பின்பற்றுகிற மக்கள் பரஸ்பரம் அன்பு செலுத்தி வாழ்வதுடன், ஒருவருக்கொருவர் தொண்டு செய்வர். இதன் மூலம் அவர்களது இதயம் தூய்மைப்படும். அவர்கள் தெய்வீக வாழ்க்கை வாழ்ந்து உயர்வு பெறுவார்கள். அரசே! தங்களுக்குத் தகுந்த தொண்டர்களாக இருக்க எங்களை வாழ்த்துங்கள்.''

## 21. தீமையை விட்டு விலகுதல்

விடாமுயற்சியின் மூலம் ஒரு பாவி ஞானியாக முடியும். நீங்கள் தீமையை விட்டு விலகினால் அது முன்னிலும் தீவிரமாக உங்களைப் பற்றிக் கொள்ளும்.

ஒரு ஊரில் ஆடு திருடுவது குற்றம் என்று கருதப்பட்டது. இரு சகோதரர்கள் இந்த சட்ட விரோதமான செயலில் ஈடுபட்டனர். கிராமத்துப் பெரியோர்கள் அவர்களுக்குத் தண்டனை கொடுப்பதற்காக அவர்களின் நெற்றியில் ''ஆ. தி'' (ஆடு திருடியவன்) என்ற எழுத்துக்களைப் பதித்து அவர்களை விடுவித்து விட்டனர்.

கிராமத்து மக்கள் அனைவருக்கும் செய்தி தெரிந்து விட்டது. ஆதலால் இரு சகோதரர்களும் வருந்தினர். அவர்கள் பொது இடங்களில் செல்லும் போது மக்கள் அவர்களைக் கேலி செய்தனர்.

''இதோ ஆ. தி. போகிறான். ஆடு திருடியவனைப் பாருங்கள்'' என்று குழந்தைகள் கேலி செய்வர்.

அந்தச் சகோதரர்களில் மூத்தவன் இந்த அவமானத்தைப்பற்றி எண்ணிப்பார்த்தான். ''இந்தத் தீமையிலிருந்து விலகி ஓடிவிடலாம்'' என்று அவன்

எண்ணினன். அவன் கிராமத்தைவிட்டுப் புறப் பட்டான். காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரிந்தான். ஆனல் அந்தோ! அவனுக்கு எங்கும் அமைதி கிடைக்கவில்லை. அவன் நெற்றியில் பளிச் சென்று தெரியும் எழுத்துக்கள் அவன் செல்லுமிடங் களில் உள்ளவர்களின் கவனத்தைக் கவர்ந்தன. அவர்கள், ''இந்த எழுத்துக்களின் பொருள் என்ன? யார் இதைப் பதித்தது?'' என்று கேட்டார்கள். சிறிது காலம் இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல் லாமல் தப்பித்துக் கொண்டான். ஆனல் எவ்வளவு நாட்களுக்குத்தான் அப்படி இருக்க முடியும்? இதற் காக அவன் அவ்வப்போது இடத்தை மாற்றவேண் டியிருந்தது. அவன் நாளுக்குநாள் அமைதி இழந் தான். வேதனையும் ஏமாற்றமும் அடைந்த அவன் ஒரு நாள் இறந்துவிட்டான். சொந்த ஊரிலிருந்து பிரிந்து எங்கோ அலைந்து திரிந்த அவன், சொந்த ஊரின் இதமான சூழ்நிலையில் இல்லாமல் எங்கோ ஒரு தனி இடத்தில் அவன் புதைக்கப்பட்டான்.

ஆனல் அவன் தம்பி சொந்த ஊரிலேயே தங்க விரும்பினன். ''நான் குற்றம் செய்தவன் என்ற உண்மையிலிருந்து நான் தப்ப முடியாது'' என்று அவன் எண்ணினன். பொதுமக்கள் தன்னை அவமதித்ததை அவன் உறுதியான இதயத்துடன் சகித்துக்கொண்டான். நிகழ்ந்ததை மறக்கவும், தன் வாழ்வில் புதிய அத்தியாயத்தைத் துவக்கவும் அவன் தீர்மானித்தான். தளரா உறுதியுடன் பல மாதங்களாக, ஆண்டுகளாக முயற்சி செய்து, தான் நேர்மையானவன் என்ற பெயரை படிப்படியாகப் பெற்றன். அவன் நற்பண்பின் உறைவிடமாக வாழ்வதை அவனது பக்கத்து வீட்டுக்காரர்கள் உணர்ந்தனர். காலம் என்ற அருமருந்து அவனது புண்ணை ஆற்றியது. காலப்போக்கில் அவனது கடந்த காலத்தை மக்கள் மறந்தனர்.

பல ஆண்டுகளுக்குப் பின் புதிய ஆள் ஒருவர் அந்த கிராமத்துக்கு வந்தார். அங்கு வயதான ஒருவர் நெற்றியில் 'ஆ. தி' என்ற எழுத்துக்கள் பதிக்கப்பட்டிருப்பதை அந்தப் புதியவர் கண்டார். பக்கத்தில் இருந்தவர்களிடம் இதுபற்றி விசாரித்தார். ''அது மிகப் பழைய கதை. அது பற்றிய விபரங்கள் எனக்கு நினைவில் இல்லை. ஆனால் ஒரு 'ஞானி'யைக் குறிக்கும் சுருக்கெழுத்தாக அது இருக்க வேண்டும்'' என்று பக்கத்திலிருந்தவர் கூறினர்.

இக்கதையின் நீதி யாதெனில், விடாமுயற்சி யின் மூலம் ஒரு பாவியும் நிச்சயமாக ஞானியாக ஆக முடியும் என்பதுதான். எவரும் தனது செயலின் தீமையிலிருந்து விலகி ஓட முடியாது. அது நிழல் போல் தொடருகிறது. அவன் கடந்த காலத்தைப் பற்றி நினைக்க நினைக்க மனச்சாட்சி உறுத்துகிறது. அவன் எங்கு சென்றாலும் மனம் ஒட்டிக்கொண் டிருக்கிறது.

வெகுசிலர்தான் பிறக்கும்போதே ஞானியாகப் பிறக்கின்றனர். இன்றையப் பாவி, நாளைய ஞானி என்ற நீதியை இக்கதை சித்தரிக்கிறது. சிரத்தை கலந்த முயற்சி, வெற்றி காணவேண்டுமென்பதில் உறுதிப்பாடு.இவை மூலம் நச்சு இயல்பைக்கூட ஒரு ஞானியின் இயல்பாக மாற்றமுடியும். போக்கிரி யாக இருந்த ரத்னகர் வால்மீகி மகரிஷியாக மாறி யது, இதிகாசம் உணர்த்தும் உண்மை.

ஆகவே, ராமா! உனது குறைகளை எண்ணி இதயத்தைத் தளர விடாதே. உங்களது கடந்த காலம் எவ்வளவுதான் வெறுக்கத் தக்கதாக இருந் தாலும், தளரா உறுதியின் மூலம் நீங்கள் குறை களைப் போக்கிக்கொள்ளலாம். நற்பண்பு மற்றும்

அறநெறியின்படி வாழ்ந்து உங்களைச் சுற்றி இருப்பவர்களுக்கு நீங்கள் உதாரண புருஷராகத் திகழ முடியும். உற்சாகமாக இருங்கள். உங்கள் சாதனைப் பயிற்சிகளில் இப்போதே ஈடுபடத் துவங்குங்கள்.

## 22. கடவுளின் கருணை

நாராயண பிரசாதின் தாயார் காலமாகி விட்டார். எதிர்பார்த்ததற்கு மாருக, நாராயண பிரசாத் பெருமகிழ்ச்சி அடைந்தார். அவர் பூஜை அறைக்குச் சென்று, ஜகநாதரை வழிபட்டார். ''இறைவா! நான் கேட்காமலேயே என் மீது கருணை பொழிந்திருக்கிருய். என்னை இந்த உலகியல் வாழ்வில் பிணைத்துக்கொண்டிருந்த ஒரே ஒரு பந்தத்தையும் அறுத்து விட்டாய்! இனி எனது வாழ்க்கையை முழுமையாக எவ்விதக் குறுக்கீடும் இல்லாமல் உனக்காக, உனக்கு மட்டுமே செலவிடுவேன். இறைவா! எனக்கு தூய பக்தியைக் கொடு.''

நாராயண பிரசாதும் அவரது தாயாரும் பூரி ஜகநாதரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தனர். நாராயண பிரசாத் பூரி நகரை நோக்கி நடக்கலானுர். வழியெங்கும் அவர் நாம ஜபம் செய்துகொண்டே சென்ருர். தன்னை மறந்த பேரானந்த நிலையில் அவர் இருந்தார்.

பக்தனின் இதயத்தில் இறைவன் குடிகொண்டிருக்கிருர். நாராயண பிரசாத் இறைவனுடன் இடையருது பேசினுர். பூரி ஜகநாதர் ஆலயத்துக்குள் அவர் செல்லவில்லை. அவர் நேராகக் கடற்கரைக்குச் சென்ருர். அங்கு இறைவனின் திருநாமத்தை ஜபம் செய்தார். இறைவனின் பெருமைகளை தியானம் செய்தார்.

மூன்று நாட்கள் கடந்தன. நாராயண பிரசாத் உணவு உட்கொள்ளவில்லை. அதைப்பற்றி எண்ணவும் இல்லை. அவர் ஆள் நடமாட்டம் இல்லாத ஒரு இடத்தில் அமர்ந்திருந்தார். அவர் பட்டினி கிடந்தார். ஆனால் கீர்த்தனையிலும், தியானத்திலும் ஈடுபட்டு பேரானந்தத்தில் திளைத்திருந்தார்.

பிரபு ஜகந்நாதர், தேவியின் பக்கம் திரும்பி, ''லக்ஷ்மி, என்ன பரிதாப நிலை! எனது பக்தன் கடற்கரையில் பட்டினியால் வாடுகிறான். நான் எனது கடமையைப் புறக்கணித்துவிட்டேன். நான் இதயமற்றவனாக இருந்துவிட்டேன். கொடுமை இழைத்துவிட்டேன். என்னையே நினைத்திருப்பது என்ற கடமையிலிருந்து அவன் பிறழவில்லை. பக்தனைக் காப்பாற்றுதல் என்னும் கடமையிலிருந்து நான் தவறிவிட்டேன். அந்த பக்தன் முகத்தில் எப்படி விழிப்பேன்? நான் வெட்கத்தால் வேதனைப் படுகிறேன். நீ சுவையான உணவுப் பொருட்களை எடுத்துக்கொண்டு சென்று அவனுக்குக் கொடு''.

லக்ஷ்மி சம்மதம் தெரிவித்தாள். ஒரு தங்கத் தட்டில் இறைவன் பிரசாதமாகிய உயர்ந்த பொருட்களை எடுத்துக்கொண்டாள்.

நாராயண பிரசாத் உலகை மறந்து இருந்தார். அவர் இறைவன் திருநாமத்தை உச்சரிப்பதில் ஆழ்ந்து ஈடுபட்டிருந்தார். லக்ஷ்மி அவர் முன்னே சென்று காண வெட்கப்பட்டாள். ஒரு பக்தனை தானும் தன் கணவரும் இப்படி பட்டினி போட்டு விட்டதற்காக அவள் மிகவும் வருந்தினாள். தங்கத் தட்டை நாராயண பிரசாதுக்குப் பின்னே வைத்து விட்டு தேவி வேகமாகத் தன் இருப்பிடம் திரும்பினாள்.

நாராயண பிரசாத் சிலம்பொலி கேட்டுத் திரும்பினுர். அவர் தங்கத் தட்டைக் கண்டார். அதைக் கொண்டு வந்து வைத்தவர்களை அவர் காண முடியவில்லை. அவருக்குப் பசித்தது. தக்க சமயத்தில் கருணை புரிந்த கடவுளுக்கு அவர் நன்றி செலுத்தினுர். உணவை, இறைவனின் பிரசாத மாகக் கருதி மகிழ்ச்சியுடன் உட்கொண்டார். மூன்று இரவுகள் உறக்கமின்றி இருந்ததால், உணவு உட்கொண்டதும் அவர் உறக்கத்தில் ஆழ்ந்தார்.

அவர் உறக்கத்திலிருந்ததும் நான்கு பிராமணர் களும், காவலர்களும் தன்னைச் சுற்றி நிற்பதைக் கண்டார்.

''திருட்டுப் பயலே!'' திருக்கோயிலின் மூலஸ்தானத்திலிருந்து தங்கத் தட்டைத் திருட உனக்கு எவ்வளவு தைரியம்! வா! வெறுக்கத்தக்க தீயவனே! எழுந்திரு. எங்களைப் பின்தொடர்ந்து மன்னரின் அரண்மனைக்கு வா. அவரிடம் தண்டனை யைப் பெற்றுக்கொள்.

நாராயண பிரசாத் முதலில் கலங்கினுர். பிறகு, ''நான் இந்தத் தட்டைத் திருடவில்லை. இதைக் கொண்டு வந்தவர் ஏன் இதனைத் திரும்ப எடுத்துச் செல்லவில்லை'' என்று எண்ணினுர். உடனே தன்னைத் தானே சமாதானம் செய்துகொண்டு, நடந்ததைப்பற்றி எண்ணிக்கொண்டிருப்பது வீண் வேலை என்று உணர்ந்தார். கவலைப்படுவதை விடுத்து மனத்தளவில் பஜனை செய்யத் துவங்கினுர்.

அரசன் நிகழ்ந்ததைக் கேட்டு கடுங்கோபம் அடைந்தான். குற்றவாளியை சவுக்கால் அடிக்க உத்திரவிட்டான். இதயமற்ற பணியாளர்கள், தமது பதவியையும், புகழையும் அதிகரித்துக்

கொள்ளுவதற்கான வாய்ப்பாக இதனைக் கருதினர். நாராயண பிரசாத்தின் முதுகில் சவுக்கடி பலமாக விழுந்தது. ஆனால் அந்த பக்தர் சிரித்த முகத்துடன் இருந்தார். நாம ஜபம் செய்துகொண்டே இருந்தார். சவுக்கடி அரை மணி நேரம் நீடித்தது. ஆனால் அந்த பக்தரின் உடம்பில் சிறிதளவும் காயம் ஏற்படவில்லை. இனி அடிப்பதால் பயனில்லை என்று கருதிய பணியாளர்கள் அவரை அரண்மனையை விட்டு விரட்டினர்.

நாராயண பிரசாத் கடற்கரையில் உள்ள தனது இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கு நாம ஜபத்தில் ஈடுபட்டு மெய் மறந்தார். இரவில் உணவு வந்தது. ஆனால் இம்முறை அவர் உணவு உட்கொண்ட பின்னர் மர்மமான முறையில் தட்டு எடுத்துச் செல்லப்பட்டது.

மன்னனுக்கு அன்றிரவு உறக்கம் வரவில்லை. தனது படுக்கையிலிருந்து தன்னை யாரோ தூக்கி எறிவதுபோல அவன் கனவு கண்டான். திடீர் திடீரென்று ஜகந்நாதர் தன்முன் தோன்றுவதையும் அவரது இடுப்பில் ரத்தம் கசிந்து வருவதையும் மன்னன் கண்டான். அரசன் கலங்கினான். அவன் படுக்கையிலிருந்து எழுந்தான். ஓடினான் ஆலயத்தை அடைந்தான். ஆலயத்தை உடனே திறக்குமாறு அர்ச்சகர்களிடம் கூறினான். உடனடியாக ஜகந்நாதரை தரிசிக்க விரும்பியே இவ்வாறு கூறினான்.

ஆலயத்தைத் திறந்து உள்ளே சென்ற அர்ச்சகர்களும் அரசனும் வாய்மூடி மௌனமாக நின்றனர். அங்கு ஜகந்நாதப் பிரபுவின் இடுப்பிலிருந்து ரத்தம் கசிந்து மூலஸ்தானத்தில் வடிந்து கொண்டிருந்தது. அரசனுக்கு விஷயம் புரிந்தது.

அவன் இதயம் வருத்தத்தால் வாடியது. வெறுக்கத் தக்க முறையில் தான் செய்த குற்றத்தை எண்ணி அரசன் வருந்திஞன். அன்று பிற்பகல் அந்த அப்பாவி பக்தனைத் துன்புறுத்தியதுதான் இந்த அதிசயச் சம்பவத்துக்குக் காரணம் என்று அரசன் புரிந்துகொண்டான்.

தமது பணியாளர்களுடன் அரசன் கடற் கரைக்கு ஓடிஞன். நாராயண பிரசாத்தின் கால்களில் வீழ்ந்து வணங்கிஞன். தான் செய்த தவறுக்காக தன்னை மன்னிக்கும்படி வேண்டிஞன். இறைவனின் உடம்பில் ஏற்பட்டிருக்கும் காயத்தை ஆற்றுமாறும் வேண்டிஞன். அதனைச் செய்ய அவரால் மட்டுமே முடியும்.

நாராயண பிரசாத் கதறி அழுதார். ''என் இறைவா! கருணைக் கடலே! நீ இப்படிச் செய்ய லாமா! உனது அப்பாவி பக்தனுக்காக நீ ஏன் இந்தக் கொடுமையைத் தாங்கிக் கொண்டிருக் கிருய்? அரசனின் ஆட்கள் என்னை சவுக்கால் அடிக்காமல் நீ தடுத்திருக்கலாமே! அதற்குப் பதிலாக நீ ஏன் இந்தக் கொடுமையான தண்டனையை உனது உடலில் தாங்கிக் கொண் டாய்?'' அவர் அழுது புலம்பிஞர். பதறித் துடித்தார். ரத்தம் கசிவது நின்றது.

பகவான், பக்தனுக்கு பதிலளித்தார்! ''நாராயண பிரசாத்! உனது முன்வினைப்பயன் காரணமாக நீ இந்த தண்டனையை அனுபவிக்க நேர்ந்தது என்பதை அறிந்து கொள். நீ பூரண மாக என்னிடம் சரணுகதி அடைந்து விட்டாய். நீ என்னிடத்தில் கொண்டிருந்த அன்பும், பக்தியும் அத்தகையது. நீ காயம் படாமல் உன்னைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை. ஆஞல்

முன் வினையை ரத்து செய்ய என்னால் முடியவில்லை. அதனை நீ அனுபவித்துதான் தீரவேண்டும். அதனால் தான் முன் வினையின் காரணமாக உன் மீது விழுந்த சவுக்கடியை என்மீது தாங்கிக் கொள்ள நேர்ந்தது. முன்வினையின் காரணமாக தனக்கு கிடைப்பதை பக்தன் ஏற்றுக்கொள்ளுகிறான். ஆனால் அது அவனை பாதிக்கவில்லை. எனது காக்கும்கரங்களால் பக்தர்களை தழுவிக்கொள்கிறேன். ஆதலால் அவர்கள் பாதிக்கப்படுவதில்லை''.

இறைவனின் அருட்ஜோதியில் நாராயண பிரசாத் கலந்து மறைந்தார்.

## 23. சிறையில் வாடிய புறு

தஞ்சாவூர் அரசர் மரணப் படுக்கையில் இருந்தார். அவர் இறக்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதை டாக்டர்கள் உறுதிப்படுத்தினர். அவரது உற்றார் உறவினர் தாம் மிகவும் நேசித்த மன்னரின் இறுதி நேரம் எப்பொழுது வருமோ என்று எண்ணி, வருந்தி, அமர்ந்திருந்தனர். உறக்கமின்மையாலும், கண்ணீர்விட்டுக் கதறியதாலும் அவர்கள் வாடிப்போயிருந்தனர். பேச்சின்றி இருந்தனர். அவர்களின் முகவாட்டம் அரசரின் முகவாட்டத்தைவிட அதிகமாக இருந்தது.

அரண்மனையின் வாயில் காப்பாளர்கள் ''போ! போ! பெரிய டாக்டர்களெல்லாம் பார்த்தும் ஒன்றும் செய்ய முடியவில்லை. நீயா குணப்படுத்தப் போகிறாய்?'' என்று ஆண்டி ஒருவரை விரட்டிக் கொண்டிருந்தனர். அவர், பெரும் ஞானியாகிய ராகவையா என்பது அவர்களுக்குத் தெரியவில்லை.

நாகூர் ஆண்டவர் என்ற முஸ்லீம் மகாத்மா வாழ்ந்து வந்த காலத்தில் இந்த ராகவையா வாழ்ந்து வந்தார். அவர்கள் அவதூதர்களாக வாழ்ந்து வந்தனர். கிட்டதட்ட நிர்வாணமாக உள்ள அவர்களது உடல்கள், உயரிய அவர்களின் ஆன்மாக்களுடன் பட்டும் படாமல் ஒட்டிக்கொண் டுள்ளன. இந்த ஆத்மாக்கள், எங்கிருந்து வந்தனவோ அந்த இனிய இருப்பிடத்துக்கு எந்த நேரத்திலும் திரும்பிச்செல்ல ஆயத்தமாக உள்ளன. சாந்தமான, தாடியுடனுன அவர்தம் முகங்கள், அனைரையும் வசீகரிக்கும் அமைதியை வெளிப்படுத் தின. அவர்களது கண்களின் ஒளி மனித உடலின் வசீகரிக்கும் அழகை வெட்கித் தலைகுனிய வைக் கிறது. அவர்களை கவனித்து, மதித்து அவர்களிடம் அன்பு செலுத்துமாறு தூண்டும் சக்தி அந்தக் கண் களின் ஒளிக்கு உண்டு.

ராகவையாவும், நாகூர் ஆண்டவனும் இதயத் தால் ஒன்றுபட்டவர்கள். அவர்கள் இருவரும் இணைந்து பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறுர்கள். எல்லா நிகழ்ச்சிகளின் போதும் அனைவரின் நலனை யுமே அவர்கள் நோக்கமாகக் கொண்டிருந்தனர். அவர்கள் நோயாளிகளை குணப்படுத்தினர். ஆத்திகர்களும் வளம் சேர்த்தனர். பக்தர்களுக்கு ஆன்மீகப் பேரின்பத்தை அருளினர்.

வாயில் காப்போரின் முகத்திலிருந்த கவலையை ராகவையா கவனித்தார். ''டாக்டர்கள் கவனிக்க முடியாமல் தோற்றுப்போன இடத்தில் ஒரு ஆண்டி வெற்றிபெற முடியாது என்று கருதுகிறீர்கள்? அரசருக்கு என்ன ஆயிற்று? சொல்லுங்கள். நான் ஏதாவது உதவி செய்ய முடியுமா என்று பார்க்க லாம். நான் இங்கு பிச்சை கேட்க வரவில்லை. ஆசி வழங்க வந்திருக்கிறேன்'' என்று கூறினுர்.

ராஜாவின் வயதான தாயார் சந்நியாசியின் அமைதியான ஆனால் உறுதியான அறிவிப்பைக் கேட்டார். பார்வைக்கு முக்கியமான ஒருவராகத் தோற்றமளிக்காத இந்த சந்நியாசியின் கூற்று, அந்த தாயாருக்கு நம்பிக்கையைத் தந்தது. அந்த அன்னை சந்நியாசியை வரவேற்க ஓடினார். வாயில் காப்போர் அலட்சியமாகப் பார்த்தனர். நீரில் மூழ்கிக்கொண்டிருப்பவன், ஒரு துரும்பைக் கூட பிடித்துக்கொண்டு கரையேற முயற்சிப்பான்.

''தாயே, நான் அரசரைப். பார்க்கலாமா? கடவுள் ஏதேனும் ஒரு வகையில் நமக்கு நல்வழி காட்டக்கூடும்.''

சாதுவின் உறுதிப்பாடு அந்தத் தாய்க்கு நம்பிக்கையை அளித்தது. ஆனால் அவரது தோற்றம் அவ நம்பிக்கையைத் தோற்றுவித்தது. ஆயினும் அந்த அன்னை அரசர் இருக்கும் அறைக்கு அந்த சாதுவை அழைத்துச் சென்றார்.

ராகவையா அரசரை அமைதியுடன் பார்த்தார். புன்முறுவல் பூத்தார். சுற்றியிருந்தவர்களும் தம்மை மறந்து புன்முறுவல் பூத்தனர். அவர்களின் மனக்கவலை சற்று குறைந்தது.

''நானே மருந்து எதையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது'' என்றார் ராகவையா.

அந்த அன்னை கண்ணீர்விட்டுக் கதறினார்.

''ஆனால் இதற்கு மருந்து எங்கே கிடைக்கும் என்ற விபரத்தைச் சொல்லுகிறேன்''

அழுதுகொண்டே அன்னை கூறினார். ''தயவு செய்து கூறுங்கள்''

''உடனே நாகூர் ஆண்டவனிடம் செல்லுங்கள். நீங்கள் அங்கு சென்ருல் அவர் ஒரு மரத்தின் அடியில் படுத்திருப்பதைக் காணலாம். உங்கள் குறைகளை அவரிடம் தெரிவியுங்கள். அரசரின் நோயைக் குணப்படுத்தத் தேவையான மருந்தை அவர் கூறுவார்''.

ஒரு குழுவினர் நாகூர் நோக்கிப் புறப்பட்டனர். அரசரின் அன்னையாரின் மனம் ஒரு மைல் முன்னுலேயே போய்க்கொண்டிருந்தது! பெரிதும் வணங்கத் தக்க ஆனல் பொதுவாக அகந்தையுள்ள ஹிந்து அரசனின் அன்னை, அரைகுறை ஆடை அணிந்து உடலில் நீறுபூசிக் காட்சியளித்த அந்த முஸ்லீம் பெரியவர் நாகூர் ஆண்டவரின் காலில் வீழ்ந்து வணங்கினுர்.

நாகூர் ஆண்டவரின் பாதங்களைப் பிடித்துக் கொண்டு, ''என் மகனைக் காப்பாற்றுங்கள், பிரபு!'' என்று அந்தத் தாய் கதறினுர்.

நாகூர் ஆண்டவர் அந்தத் தாயை நோக்கி, ''ம்.... நீங்கள் எல்லாவிதமான முட்டாள்தனமான செயல்களையும் செய்துவிட்டு ஆபத்தில் சிக்கித் தவிக்கும்போது என்னிடம் வருகிறீர்கள். சரி நான் சொல்வதுபோல் செய்வாயா ?''

''தாங்கள் சொல்வது எதுவாயினும் அப்படியே செய்கிறேன்''

''நேராக அரண்மனைக்குப் போ. மன்னன் தலைக்குமேலே உள்ள தளத்தின் அருகே கூரையில் புதிதாக ஒரு வட்ட வடிவில் சாந்து பூசப்பட்டிருப்பதைக் காணலாம். அதை உடைத்துத் திறந்து விடுங்கள். ஒரு புரு சுவற்றுக்குள் உயிருக்காகப்

போராடிக்கொண்டிருக்கிறது. அதனை உடனே விடுவித்துவிடுங்கள். உமது மகன் உடல்நிலை தேறி விடும். அவனது இரக்கமற்ற இந்தச் செயலால்தான் அவன் கஷ்டப்படுகிறான். புறு அனுபவிக்கிற அதே துன்பத்தைத்தான் அரசன் அனுபவித்துக்கொண் டிருக்கிறான். புறு இறந்தால், அந்தக் கணமே அரசனும் இறந்துவிடுவான். விரைந்து செல். அரசன் பிழைத்துக் கொள்வான். ஆனால் எந்தப் பிராணிக்கும் சிறிதளவுகூட துன்பம் தருவதில்லை என்ற உறுதிமொழியை நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். எல்லா உயிரும் புனிதமானது என்பதை நினைவில் கொள்ளுங்கள். வாழ்க்கையை நடத்து வதில், உயர்ந்த நிலையில் உள்ள பிரம்மாவுக்கு உள்ள உரிமையில் சிறிதும் குறையாத அளவிலான உரிமை ஒரு எறும்புக்கும் உண்டு. எந்த உயிரின் வாழ்க்கையிலும் குறுக்கிட மனிதனுக்கு உரிமை யில்லை. போ!''

அந்த ஞானியின் ஆசிகளுடன் அன்னை அரண் மனைக்கு விரைந்தார். அவர் நேராக மன்னர் இருக்குமிடத்துக்குச் சென்றார். கொத்தனார் வரவழைக்கப்பட்டார். பூசப்பட்ட சாந்து உடனே இடித்துத் தள்ளப்பட்டது. அங்கு பரிதாபமான காட்சியை அனைவரும் கண்டனர். அங்கு ஒரு புறு உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தது. உயிருக்கு ஆபத்து விளைவிக்கக்கூடிய ஒரு அறைக் குள் அகப்பட்டுக்கொண்டு அனுபவித்த வேதனையை அந்தப் புறு வாயால் சொல்ல முடியாவிட்டாலும் அரைகுறையாகத் திறந்திருந்த அதன் கண்கள் அந்த உண்மையை வெளிப்படுத்தின. தாய் அந்தப் புறுவை எடுத்து அது புத்துணர்வு பெற வகை செய்தார். அரசர் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார். புறு உட்கொண்ட ஒவ்வொரு அரிசியின் பயனாக, அரசர் வாயில் ஊற்றப்பட்ட ஒவ்வொரு துளி தண்ணீரும் அரசருக்குப் புத்துணர்வைத் தந்தது.

அரசர் உண்மையை ஒப்புக்கொண்டார். ''எனது படுக்கைக்கு மேலே சுவரில் ஒரு துவாரம் இருந்தது. புறாக்கள் அதில் வாழ்ந்து வந்தன. அவை எனது படுக்கையை அழுக்காக்கின. அவற்றின் தொல்லையிலிருந்து விடுபட எண்ணிய நான் அந்த துவாரத்தை அடைக்க உத்திரவிட்டேன்''.

அரசரின் அன்னை அவசர அவசரமாக தன் மகனை நோக்கிப் பேசினார்; ''மகனே நாகூர் மகானின் அற்புதம் கலந்த கருணையால் நீ காப்பாற்றப்பட்டாய். அவரை தரிசிக்க புறப்படு. அவரை வணங்கு. எந்த உயிருக்கும் எள்ளளவும் துன்பம் விளைவிப்பதில்லை என்ற உறுதியை அவருக்கு முன்னால் எடுத்துக்கொள். நேரத்தைக் கடத்தாதே. உடனே புறப்படு.''

ஹிந்து மன்னர், முஸ்லீம் மகானின் திருவடி களில் தன் தலை படும்படியாக வீழ்ந்து வணங்கினார். ''நாகூர் ஆண்டவன்'' என்ற பெயரை முதலில் கூறியது அந்த மன்னர்தான்.

அந்த முஸ்லீம் மகான் இறந்த பிறகு அவரது சமாதியின் மீது பெரிய ஆலயம் ஒன்றை இந்த ஹிந்து மன்னர் கட்டினார். அந்த ஆலயத்துக்கு பெருமள வில் நிலங்களை எழுதி வைத்தார். இந்த நிலங்களி லிருந்து விளையும் தானியத்திலிருந்து ஆயிரக் கணக் கான புறாக்களுக்கு உணவு ஊட்டப்பட வேண்டும். என்று அவர் ஏற்பாடு செய்து வைத்தார். இந்த வழக்கம் இன்றும் நடைமுறையில் உள்ளது. இந்த ஆலயம் அற்புதக் கருணை, நோய் தீர்க்கும் சக்தி, அமைதி, ஒற்றுமை, வளமை இவற்றுடன் சிறந்து விளங்குகிறது.

நாகூர் ஆண்டவன் புகழ் ஓங்குக! அவருக்கு என் வணக்கங்கள்!

## 24. மனிதன்—படைப்பின் சிறப்பு

இறைவனின் படைப்பில் மனிதனுக்கு உயரிய அந்தஸ்து அளிக்கப்படுவதையும், அவன் புகழ்ந்து பேசப்படுவதையும் கண்டு வஞ்சகம் நிறைந்த குள்ள நரி வயிற்றெறிச்சல்பட்டது. அது தனக்குத்தானே பின்வருமாறு எண்ணிக்கொண்டது. ''புத்திசாலித் தனத்தில் எந்த வகையிலாவது நான் மனிதனைவிட குறைந்திருக்கிறேனு? அல்லது மனிதன் மற்றவர்களை ஏமாற்றுகிறபோது வஞ்சகத்தில் என்னைவிட குறைந் திருக்கிருனு? என்னைப்போல் அவனும் ஒரு உயிருள்ள ஜீவன். உண்மையில் பார்க்கப்போனுல் மனிதனை விட நான் அதிக திருப்தியுற்று வாழ்கிறேன். ஒவ் வொரு காலத்திலும் விலையுயர்ந்த அல்லது பலவகை யான ஆடைகளை நான் அணிவதில்லை. வெயிலையும் மழையையும் நான் பொறுமையுடன் சகித்துக் கொள்கிறேன். மழைக் காலத்தில் என்னைக் காத்துக் கொள்வதற்காக குடை வேண்டுமென்று நான் கேட்பதில்லை. அல்லது கோடை காலத்தில் சூரிய ஒளியிலிருந்து என்னைப் பாதுகாத்துக்கொள்ள குளிர்ச்சிதரும் மூக்குக் கண்ணுடிகள் வேண்டுமென்று நான் கேட்டதில்லை. ஒரு இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கு போவதற்கு எனக்கு மோட்டார் கார் அல்லது ரயில் வேண்டுமென்று நான் கேட்பதில்லை. மிருகங்களாகிய நாங்கள் இவற்றுடன் இன்னும் பல நற்பண்புகளை பெற்றிருந்த போதிலும் மனிதன் மட்டும் ஏன் எங்களைவிட உயர்ந்தவனுக மதிக்கப்பட வேண்டும்? இந்த அநீதிக்கு நான் ஒரு முடிவு கட்டுகிறேன்.

நரி அங்கும் இங்கும் ஓடியது. மற்ற மிருகங் களைத் தூண்டியது. கணிசமான எண்ணிக்கையில் மிருகங்களை அது திரட்டியது. எல்லா மிருகங்களும் யானையிடம் சென்றன. புத்திசாலியான யானை

பின்வருமாறு பேசியது: ''சகோதரர்களே! நீங்கள் சொல்லுவதில் ஓரளவுக்கு உண்மை இருக்கிறது. பக்கத்தில் உள்ள காட்டில் வாழும் ஒருவரைக்காண நாம் அனைவரும் செல்வோம். ஒரு குடிலில் ஞானி ஒருவர் அங்கு வசித்துவருகிறார். அவரிடம் போய் நமது குறைகளைச் சொல்வோம் வாருங்கள்''.

எல்லா மிருகங்களும் யானையின் யோசனைக்கு சம்மதம் தெரிவித்தன. அவை அனைத்தும் அந்த ஞானி இருக்கும் குடிலுக்குச் சென்று, அவரைக் கண்டு தம் குறைகளைக் கூறின.

''சுவாமி! என்னை நீங்கள் நன்றாக அறிவீர்கள்,'' என்று குரைத்தது நாய். ''நான் நன்றிக்கு எடுத்துக்காட்டு. மனிதன் என்னை ஆயிரம் தடவை அடித்துவிட்டு ஒரே ஒரு தடவை எனக்கு உணவளித்தாலும் அவனுக்கு என் வாழ்நாள் முழுவதும் தொண்டு செய்ய நான் ஆயத்தமாக இருக்கிறேன். ஆனால் மனிதன் தனக்காகச் செய்யப்பட்ட ஆயிரம் தொண்டுகளை மறந்துவிடுகிறான். தனது நண்பன் செய்த ஒரு தவறை நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறான். தனது உற்றார் உறவினராயினும், அவர்கள் செய்த உதவிகளை முற்றிலும் மறந்துவிட்டு அவர்கள் அறியாமற் செய்த ஒரு தவறுக்காக அவர்களைக் கொலை செய்யவும் தயாராக இருக்கிறான். ஆகவே, முனிவரே! எந்த வகையில் மனிதன் மிருகங்களைவிடச் சிறந்தவன் என்று கூறமுடியும்?''

பசு பின்வருமாறு தன் குறையை வெளிப்படுத்தியது: ''நான் மேய்வதற்காக மனிதன் என்னைப் புல்வெளிக்குக் கொண்டுசெல்லுகிறான். சில நேரங்களில் சிறிதளவு வைக்கோலை எனக்குத் தருகிறான். அதற்குப் பதிலாக நான் பாலைத் தருகிறேன். சில நேரங்களில் மனிதன், தானும் தனது குழந்தைகளும்

பால் குடிப்பதற்காக எனது குழந்தையைப் பட்டினி போட்டுவிடுகிறுன். அவன் வீட்டின் பின்புறத்தில் அசுத்தமான இடத்தில் துர்நாற்றம் வீசும் இடத்தில் என்னைத் தங்கவைக்கிறுன். நான் பால் தருவதை நிறுத்தியதும் அவன் என்னைத் துன்புறுத்துகிறுன், புறக்கணிக்கிறுன். எனக்கு வயதாகிவிட்டால் அவன் என்னை விரட்டிவிடுகிறுன். அல்லது கசாப்புக்கார னிடம் கொடுத்துவிடுகிறுன். இத்தகைய மனிதனைத் தான் வானளாவப் புகழுகிறீர்கள். ஐயா, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? தயவுசெய்து சொல்லுங் கள்''.

இப்போது காக்கை பேசிற்று: ''ஐயா, என்னிடமுள்ள இந்த ஒரு குணம் மனிதனிடம் இருக்கிறதா? சிறு ரொட்டித் துண்டு எனக்குக் கிடைத்தாலும் நான் கரைந்து என் சகோதர சகோ தரிகளை அழைத்து அதனை அவர்களுடன் பகிர்ந்து உண்ணுகிறேன். ஆனுல் மனிதன் இதற்கு நேர் மாருகச் செயல்படுகிறுன். தன்னிடம் எவ்வளவு தான் இருந்தாலும், மேலும் பதுக்கி வைக்கவே அவன் விரும்புகிறுன். அத்துடன் நில்லாமல், மற்ற வர்க்குரிய உணவைப் பறித்துக்கொள்ளவும் அவன் முறைதவறி முயற்சிக்கிறுன். இவ்வாறு சுயநலமும் பேராசையும் உடைய மனிதனை எவ்வாறு என்னை விடச் சிறந்தவன் எனக் கூறமுடியும்?''

மீன் பின்வருமாறு பேசியது: முனிவரே! மனிதன் என்னைவிடத் தாழ்ந்தவன் என்று கூறமாட் டேன். ஆனுல் அவன் வடிகட்டிய முட்டாள் என்று கூறுவேன். நான் அவனுக்கு எந்தவிதத் தொல்லை யும் தருவதில்லை. உண்மையில், குளங்கள், ஏரிகள், ஆறுகள் இவற்றைத் தூய்மையாக வைத்துக்கொள் வதன் மூலம் நான் அவனுக்குத் தொண்டு செய்து வருகிறேன். அவன் தண்ணீருக்குள் வீசி எறியும்

அழுக்குகளை நான் சாப்பிட்டுவிடுகிறேன். இத்தகைய நன்மை செய்யும் என்னை பாதுகாத்து வைத்துக் கொள்ளாமல் இந்த முட்டாள் மனிதன் என்னைப் பிடித்து, கொன்று தின்றுவிடுகிறான்! இந்த முட்டாள் மனிதனையா என்னைவிட உயர்ந்தவன் என்கிறீர்கள்?''

கோவேறு கழுதை கனைத்தது: ''ஐயா, மீன் சரியாகச் சொல்லிற்று. என்னுடைய பரிதாப நிலையைப் பாருங்கள். நான் சுமை தூக்கும் மிருகம். பொறுமை என்னும் தெய்வீகப் பண்பு என்னிடத்தில் இருக்கிறது. இதனை அனைவரும் அறிவர். நான் அவமானத்தையும் வேதனையையும் பொறுமையுடன் சகித்துக்கொள்கிறேன். என் தொண்டு இல்லை என்றால், மலைப் பகுதிகளில் வசிக்கும் மக்கள் வாழ்வின் அத்தியாவசியப் பண்டங்கள்கூடக் கிடைக்காமல் இறந்துவிடுவார்கள். நான் அவர்களது உணவையும் மற்ற பொருட்களையும் சுமந்து செல்கிறேன். எனக்குக் கிடைக்கும் பரிசு என்ன? அடி! மேலும் அடி! இந்த மனிதன்தானா என்னைவிட உயர்ந்தவன்?''

''நண்பர்களே, உங்களது சிறப்பியல்புகள் அனைத்தையும் அவரிடம் சொல்லுங்கள். மனித சக்திக்கு அப்பாற்பட்ட உங்களது சாதனைகளை அவரிடம் தெரிவியுங்கள்'' என்று நரி கூறியது.

''நீங்கள் இறைவனை நினைத்து தியானம் செய்ய எந்த மான்தோலில் அமர்ந்திருக்கிறீர்களோ, அது என் இனத்தவர் தந்தது. இத்தகைய நல்ல பணிக்கு மனிதன் தோல் பயன்படுத்தப்பட்டதாக எப்போதாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அழகைப் பற்றிக் குறிப்பிடும்போது, அழகிய பெண்ணின் கண்களை எனது கண்ணுடன்தான் அடிக்கடி

ஒப்பிட்டுப் பேசுகிருர்கள். எனது அழகிய கொம்பு கள் மனிதனின் அறைகளை அலங்கரிக்கின்றன,'' என்று மான் கூறியது.

''அதுபோல எனது இறகுகளும் அழகானவை. கிருஷ்ண பகவான்கூட அதனைத் தனது முடியில் சூட்டிக்கொண்டார். சண்முகக் கடவுள் என்னைத் தனது வாகனமாகப் பயன்படுத்துகிருர். அவரது பக்தர்களும், மந்திரவாதிகளும் பேய், பிசாசுகளை விரட்ட எனது இறகுகளை மந்திரக்கோலாகப் பயன் படுத்துகின்றனர். மனிதனின் தோல் அல்லது முடி பயன்பட்டதாக எவரும் கேள்விப்பட்டிருக்க மாட் டார்கள்'' என்று மயில் கூறியது.

அடுத்து பசு பேசியது: ''எனது கழிவுப் பொருட்கள் அனைத்தும் புனிதமானவையாகவும் தூய்மைப்படுத்துபவையாகவும் மதிக்கப்படுகிறது. மனிதன் நடத்தும் புனிதச் சடங்குகள் அனைத்திலும் பஞ்சகவ்யம் அவசியம் தேவைப்படுகிறது. மனித னின் கழிவுப் பொருளைப்பற்றிக் கேள்விப்பட்டாலே மனிதனுக்கு வாந்தி எடுக்கத் தோன்றும். எவரும் அதன் அருகில் போகமாட்டார்கள். அப்படிப்போக நேர்ந்தால் தண்ணீர் ஊற்றி சுத்தப்படுத்திப் போவார்கள். சில சமயங்களில் சுத்தப்படுத்தி விட்டுக் குளித்துவிடுவார்கள்.''

''அற்புதமாக மோப்பம் பிடிக்கும் சக்தி என்னி டம் உள்ளது. எந்த மனிதனுவது தன்னிடம் இந்த சக்தி இருப்பதாகக் கூறிக்கொள்ள முடியுமா?'' என்று நாய் கேட்டது.

''அற்புதமாகப் பார்க்கும் சக்தி என்னிடம் இருக்கிறது. எந்த மனிதனுவது தன்னிடம் இந்த சக்தி இருப்பதாகக் கூறமுடியுமா?'' என்று பருந்து கேட்டது.

''நான் இரவிலும் பகலிலும் ஒரே மாதிரியாகப் பார்க்கமுடியும். எந்த மனிதனுவது இப்படிச் செய்ய முடியுமா'' என்று பூனை கேட்டது.

''ஐயா, என்னுல் மகத்தான செயல்களைச் செய்ய முடியும். எனக்கு மிகப்பெரிய உடம்பு இருக்கிறது. எனது அறிவாற்றலை வெளிப்படுத்தும் கதைகள் ஏராளமாக உள்ளன. என்னுடைய தந்தம் மற்றும் எலும்புகள்மூலம் அழகிய உருவச் சிலைகளும் சிற்பங்களும் செதுக்கப்படுகின்றன. இவை அனைத்தும் உண்மை, ஐயா. ஆயினும் ஏன் மனிதன் எங்களைவிடச் சிறந்தவனுகக் கருதப்படுகிருன்? என் சகோதரர்கள் கூறிய கருத்துக்களில் நியாயம் இருக்கிறது என்ருலும், இதற்கு விவேகமான காரணம் இருக்க வேண்டும் என்று நான் கருது கிறேன்.

அந்த ஞானியின் கருத்தைக்கேட்க எல்லா மிருகங்களும் பொறுமையாகக் காத்துக்கொண் டிருந்தன.

''காட்டில் வாழும் எனது உறவினர்களே! நீங்கள் கூறிய அனைத்தும் உண்மை. ஆனுல் கடவுள் மனிதனுக்கு ஆருவது அறிவைக் கொடுத்திருக்கிருர். அது பகுத்தறிவு. தீமையிலிருந்து நன்மையைப் பிரித்தறியும் அறிவு. பொய்யிலிருந்து மெய்யைப் பிரித்தறியும் அறிவு. தவருனவற்றிலிருந்து சரியான வற்றைப் பிரித்தறியும் அறிவு. சுபாவம் உங்களை வழி நடத்துகிறது. மனிதன் உள்ளுணர்வு பெற முடியும். அவன் தனது சுபாவத்தைக் கட்டுப்படுத் திக்கொண்டு, உள்ளுணர்வின் மூலம் இறைவனை அடையமுடியம்'' என்று அந்த ஞானி கூறினுர்.

''அவன் அப்படிச் செய்யாவிட்டால்?'' குள்ள நரி கேட்டது.

''அவன் அப்படிச் செய்யாவிட்டால் அவன் மிருகத்தைவிட மோசமானவன். அவன் அப்படிச் செய்தால், இறைவனுல் படைக்கப்பட்ட உயிரினத்தில் தலைசிறந்து விளங்குவான்,'' என்று ஞானி பதிலளித்தார்.

அந்த ஞானசீலரின் பதிலைக் கேட்டு மிருகங்கள் திருப்தி அடைந்து, சென்றன.

## 25. குருவின் அன்பு

''குருதேவா, நான் என்னை எவ்வளவுதான் கட்டுப்படுத்திக்கொண்டாலும், மனம், உலக இன்பத்தை அனுபவிக்க விரும்பி அலைகிறது. உங்களிடம் சொல்லாமலேயே உங்களை விட்டுப் பிரிந்து செல்ல அடிக்கடி நினைக்கிறேன். தங்கள் பாதகமலங்களில் நான் வைத்திருக்கும் அன்பு, அத்தகைய நன்றி கெட்ட செயலைச் செய்யாமல் என்னைத் தடுக்கிறது. பிரபு, நான் என்ன செய்ய வேண்டும்? எனக்கு வழி காட்டுங்கள்''. ராமன் தனது குருநாதரிடம் வேண்டினுன். அவன் குருநாதரின் ஆஸ்ரமத்திற்கு வந்து ஒரு மாதம்தான் ஆகியிருந்தது.

''குழந்தாய்! உனது தீவிரமான மனப் போராட்டத்தை நானும் கவனித்துக்கொண்டுதான் இருக்கிறேன். ஆழ்ந்து வேரூன்றிவிட்ட ஆசைகளை அகற்றுவது கடினம். அச்சம் கொள்ளாதே. உலகத்திற்குள் செல். சில காலம் இல்லறம் நடத்தி, உனது மனத்தின் விருப்பத்தைப் பூர்த்தி செய். ஆனுல் எல்லா நேரத்திலும் இறைவனின் தாமரைத் திருவடிகளில் உனது மனம் நிலைத்திருக்குமாறு பார்த்துக்கொள். உனது லட்சியத்தை ஒருபோதும் மறக்காதே. பத்து ஆண்டுகள் கழித்துத் திரும்பவும் இங்கு வா. அதற்கு மேல் அங்கு இருக்காதே'' என்று குரு கூறினுர்.

ராமன் குருநாதரிடமிருந்து விடைபெற்றுச் சென்றான். அவன் தனது சொந்த ஊருக்குச் சென்றான். திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்தினான். அவன் மனம், மொழி, மெய்களால் குருநாதருக்குத் தொண்டு செய்து அவரது ஆசியைப் பெற்றிருந்தான். வெற்றி அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தது. விரைவில் அவன் நகரத்திலேயே சிறந்த செல்வச் சீமானாக ஆனான். அவன் மனைவியும் குழந்தைகளும் அவனிடம் மிகவும் அன்பாக இருந்தார்கள்.

பத்து ஆண்டுகள் உருண்டோடின.

ராமனின் பங்களா வாசலில் ஒரு சாது வந்து நின்றார். அவனது குழந்தைகள் அஞ்சி வீட்டுக்குள் ஓடினர். அவனது மனைவி, சாதுவைப் பார்த்து வசைமாரி பொழிந்தாள். சாது எதைப்பற்றியும் கவலைப்படாமல் வீட்டின் எஜமானனைக் காண நின்றார். ராம் தன் குருநாதரை அடையாளம் கண்டுகொண்டான். மிகவும் மரியாதையுடன் அவரை வரவேற்று அமரச் செய்தான்.

''ராம், பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. நீ இன்னும் திருப்தி அடையவில்லையா?''

''குருதேவா! உலகம் தரும் சுகமனைத்தையும் அனுபவித்து விட்டேன். ஆஸ்ரமத்தில் மீண்டும் சேர்ந்துகொள்ள நானே வந்திருப்பேன். ஆனால் இந்தச் சிறு குழந்தைகளை கவனிக்காமல் விட்டு விட்டு வரமுடியுமா? அவர்களுக்குக் கல்வி அளித்து, அவர்களது நல்வாழ்வுக்குத் தேவையான எல்லாவற்றையும் ஏற்பாடு செய்து கொடுக்க வேண்டும். ஆகவே இன்னும் சில ஆண்டுகள் இங்கு இருக்க அனுமதி கொடுங்கள். அதன் பிறகு நிச்சயமாக வந்துவிடுகிறேன்.''

மீண்டும் பத்து ஆண்டுகள் கடந்தன.

இந்த முறை முதுமை அடைந்து தளர்ந்த நிலையில் ராமன் தன் குருநாதரை வரவேற்முன். அவனது மனைவி உலகைவிட்டுப் பிரிந்துவிட்டாள். அவனது புதல்வர்கள், இளைஞர்கள்; திருமணம் செய்து கொண்டு தனிக் குடித்தனம் நடத்தினர்.

''என் அன்புக்குரிய குருதேவா! இல்லற வாழ்வின் கடமைகளையெல்லாம் நான் நிறைவேற்றி விட்டேன். எனது குழந்தைகளெல்லாம் வளர்ந்து விட்டார்கள்; வளமான வாழ்க்கையை நடத்துகின்றனர். ஆயினும் அவர்கள் இளைஞர்கள். உலக இன்பத்தை அனுபவிப்பதில் மூழ்கியிருக்கிமுர்கள். அவர்களுக்கு பொறுப்புணர்வு இல்லை. அவர்களை சுதந்திரமாக விட்டுவிட்டால் தந்தை சேர்த்த பணத்தையெல்லாம் வீண் செலவு செய்துவிட்டுப் பட்டினி கிடப்பார்கள், அவர்களின் குடும்ப வரவு செலவுகளை அவர்களுக்குத் திட்டமிட்டுத் தந்து வழிகாட்ட வேண்டும். அவர்கள் முழுமையான மனிதனுக வளர்ந்து குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுகிறவரை இன்னும் சில ஆண்டுகள் இங்கு இருக்க அனுமதியுங்கள். அதன் பிறகு நான் நிச்சயமாக ஆஸ்ரமம் வந்து சேர்ந்துகொள்வேன்.''

அதன் பின்னர் ஏழு ஆண்டுகள் ஓடிவிட்டன.

சாது, பிரேமானந்தா தனது சீடனைக் காண ராமனின் இல்லத்துக்கு வந்தார்.

ஒரு பெரிய நாய் வீட்டைக் காத்துக்கொண்டிருந்தது. அது ராமன்தான். சாது உள்ளே சென்முர். முதுமை அடைந்த ராமன் இரண்டு ஆண்டுகளுக்கு முன் இறந்துவிட்டதாகத் தகவல்

கிடைத்தது. ராமன் இறந்த பின்னும் நாயாகப் பிறந்து தனது வீட்டையும் குழந்தைகளேயும் காவல் புரிந்துவந்தான். பிரேமானந்தர் நாயின் ஆவிக்குள் புகுந்தார்.

''குழந்தாய்! இப்போது என்னுடன் வருகிருயா?''

''குருநாதா! இன்னும் இரண்டு ஆண்டுகளில் வந்துவிடுகிறேன்'' என்று நாய் வடிவில் இருந்த ராமன் கூறினன். எனது குழந்தைகள் இப்போது வளமான வாழ்க்கை வாழ்ந்துகொண்டிருக்கிருர்கள். அவர்களுக்கு பொருமைமிக்க எதிரிகள் இருக்கிருர்கள். இரண்டு ஆண்டுகளில் அவர்கள் இந்த எதிரிகளின் தொல்லேயிலிருந்து விடுபட்டுவிடுவார்கள். அதன் பிறகு நான் ஆஸ்ரமத்துக்கு ஓடி வருவேன்,

மேலும் பத்து ஆண்டுகள் கடந்தன.

சாது, ராமனின் இல்லம் வந்தார். இப்போது நாய் இறந்துவிட்டது. ராமன் இப்போது ஒரு நாகப் பாம்பாகப் பிறந்திருப்பதையும் தனது வீட்டின் இரும்புப் பெட்டியைக் காத்துக்கொண்டிருப்பதையும் சாது தனது உள்ளுணர்வால் அறிந்துகொண்டார். தனது சீடனே மாயையிலிருந்து விடுவிக்கும் நேரம் வந்துவிட்டது என பிரேமானந்தர் உறுதியாக நம்பினுர்.

அவர், ராமனின் பேரனே அழைத்து, ''தம்பி! அந்த இரும்புப் பெட்டிக்கு பக்கத்தில் உள்ள சந்தில் கொடிய நாகப்பாம்பு ஒன்று இருக்கிறது. அது மிகவும் ஆபத்தானது. அதனே அங்கிருந்து அகற்றுங்கள். தயவு செய்து அதனேக் கொன்றுவிடாதீர்கள்.

அதனை நன்ருக அடித்து முதுகு எலும்பை ஒடியுங் கள். பிறகு அதை என்னிடம் கொண்டுவாருங்கள்'' என்று கூறினுர்.

சாது கூறியது உண்மை என்பதை அறிந்த இளைஞன் திடுக்கிட்டான். அவன் வீட்டிலுள்ள இளைஞர்கள் அனைவரையும் ஒன்று திரட்டி பாம்பை அடித்தான். சாது உத்திரவிட்டபடி அவர்கள் பாம்பைக் கொல்லவில்லை. ஆனுல் இருந்த இடத்தை விட்டு நகர முடியாமல் செய்துவிட்டனர். சாது பாம்பின் தலையை அன்புடன் தடவிக் கொடுத்தார்; பிறகு அதை தன் தோளில் போட்டுக்கொண்டு ராமனின் பேரக் குழந்தைகளிடம் விடைபெற்று அங்கிருந்து புறப்பட்டார். பேரக்குழந்தைகளும் சாதுவின் உதவியுடன் விஷம் கக்கும் நாகப்பாம்பி லிருந்து அதிசயமாகத் தப்பியதற்காக மகிழ்ந்தனர்.

செல்லும் வழியில் சாது, நாகப்பாம்பிடம் பேசினுர்: ''அன்பிற்குரிய ராமா! இதுவரை எவரும் புலன்கள் மற்றும் மனதை திருப்திப்படுத் தியதில்லை. ஆசைகளை அகற்ற முடியாது. ஒன்றை அகற்றினுல் பத்து தலையெடுக்கும். உங்களின் ஒரே புகலிடம் விவேகம். விழித்துக்கொள். அடுத்த பிறவியிலாவது நீ பரம்பொருளை அடைய வேண்டும்.''

ராமன் வேதனைப்பட்டு அழுதான்: ''குருதேவா! நீங்கள் என்மீது எவ்வளவு கருணை வைத்திருக்கிறீர் கள். நான் உங்களிடம் விசுவாசமாக இல்லாதிருந் தும், தாங்கள் என்னை மறக்காமல் என்னைப் பின் தொடர்ந்து வந்தீர்கள். தாங்கள் என்னை மீண்டும் தங்கள் தாமரைத் திருவடிகளுக்குக் கொணர்ந்து சேர்த்திருக்கிறீர்கள். குருவைப் போல தெய்வீக அன்பு செலுத்துபவர் உலகில் வேறு எவரும் இல்லை

என்பது உறுதி. தன்னலமற்ற அன்பு குருவுக்கும் சீடனுக்குமிடையில்தான் உள்ளது. அது உலகில் வேறு எங்கும் இல்லை.''

## 26. கஞ்சப் பிரபு

அலகாபாத்திற்கு அருகில் உள்ள ஒரு குக்கிராமத்தில் கஞ்சப் பிரபு என்ற ஒரு வியாபாரி இருந்தார். அவரது பெற்றோர் மைசூர்காரர்கள். இந்த வியாபாரி வியாபாரத்துக்காக சொந்த ஊரை விட்டுக் கிளம்பினார். பல ஊர்களுக்குப் போய்விட்டு கடைசியில் அலகாபாத் வந்து தங்கினார். அவருக்கு சில்லரை ஜவுளி வியாபாரம். இறையருளால் அவர் பெரிய பணக்காரரானார். தனக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது என்பதே அவருக்குத் தெரியாத அளவுக்கு அவர் பெரும் செல்வந்தராக விளங்கினார். அவருக்குப் புதல்வர்கள் இல்லை. அவருக்குத் தொண்டு செய்ய அவர் மனைவி மட்டும்தான் இருந்தார்.

நாட்கள் உருண்டோடின. கஞ்சப் பிரபு முதுமை அடைந்தார். அவர் தனது வாழ்நாளில் ஒருநாள்கூட எவருக்கும் தர்மமாக எதையும் தரவில்லை. ஆகவே அவர் மனைவி சாந்திப்ரியா, அவர் ஏதாவது தர்மம் செய்யவேண்டும் என்றும் காசி முதலிய புனிதத் தலங்களுக்கு யாத்திரை சென்று வர வேண்டும் என்றும் கூறினாள். அவர்கள் வாழ்நாளில் ஒரு தடவையாவது இவ்வாறு யாத்திரை சென்றுவர வேண்டும் என்று கூறினாள்.

கஞ்சப் பிரபு தயங்கினார். ரயில் கட்டணத்துக்கும் உணவு முதலிய பிற செலவுகளுக்கும் பணம் செலவாகுமே என்று அவர் அஞ்சினார். ''எங்கும் யாத்திரை செல்லவேண்டாம். ''பிரயாகையே

புனிதத் தலங்களுள் முக்கியமானது'' என்று அவர் மனைவியிடம் கூறினார். அவர்கள் இருவரும் பிரயாகையில் திரிவேணி சங்கமத்தில் குளித்தால் போதும் என்றார். மனைவியும் அதற்குச் சம்மதித் தாள்.

கஞ்சப் பிரபு தர்மம் செய்ய பணம் எதுவும் எடுத்துக்கொள்ளவில்லை. அவர் சிறிதளவு தானி யத்தை துணியில் முடிந்துகொண்டு கங்கையில் குளிக்கக் கிளம்பினார். பண்டாக்கள் யாரும் காத்துக் கொண்டிராத இடமாகப் பார்த்து அவர் குளிக்கச் சென்றார். அன்று சங்கராந்தி நாள். கங்கையின் கரையில் குளிக்கும் இடங்களில் பெருங்கூட்டம் இருந்தது. பண்டாக்கள் தக்ஷிணை கேட்பார்களே என கஞ்சப் பிரபு அஞ்சினார். ஆகவே, இறந்தவர் களின் சடலங்கள் எரிக்கப்படும் இடத்துக்குச் சென்று குளிக்க முற்பட்டார்.

கஞ்சப் பிரபுவின் எண்ணத்தை அறிந்த சிவ பெருமான், ஒரு பண்டாவின் வடிவில் அங்கு அமர்ந் திருந்தார். இறுதிச் சடங்குகள் நடைபெறும் இடத்தில்கூட ஒரு பண்டா உட்கார்ந்திருப்பதைக் கண்ட கஞ்சப் பிரபு பயந்து நடுங்கினார்.

அந்தப் பண்டா அருகில் வந்து, ''சேட்ஜி, இன்று புனித நாள். குளிப்பதற்கு முன் சங்கல்பம் செய்துகொள்ளுங்கள்'' என்றார்.

''என்னிடம் பணம் இல்லை'' என்று கஞ்சப் பிரபு கூறினார்.

''நீங்கள் தக்ஷிணை பிறகு கொடுக்கலாம். ஆனால் என்ன கொடுப்பீர்கள் என்பதை மட்டும் இப்போது சொல்லுங்கள்'' என்று பண்டா பதிலளித்தார்.

ஒரு பைசா தருவேன் என்று வியாபாரி கூறினார். பண்டாவின் வடிவில் வந்திருக்கும் சிவபெருமான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். எல்லாச் சடங்கு களையும் செய்து வைத்தார்.

வியாபாரி, குளித்துவிட்டு பக்தியுள்ள தனது மனைவியுடன் வீடு திரும்பினார். குளிக்குமிடத்தில் நிகழ்ந்ததையெல்லாம் வியாபாரியின் மனைவி கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தாள். தக்ஷிணை கொடுக்கு மாறு சொல்ல அவளால் முடியவில்லை. அப்படிச் சொல்லியிருந்தால் வியாபாரி கோபப்பட்டிருப் பார்.

சில நாட்கள் சென்றன. அந்த பண்டா தனது தக்ஷிணையை வாங்கிக்கொள்ள வியாபாரியிடம் வந்தார். கஞ்சப் பிரபு வீட்டுக்குள் இருந்தார். பண்டா வந்திருப்பதை கஞ்சப் பிரபுவிடம் அவர் மனைவி தெரிவித்தாள். கஞ்சப் பிரபு மனம் கலங் கினார். தருவதாகச் சொன்ன தக்ஷிணையை தராமல் இருப்பது எப்படி என்று அவர் சிந்திக்கலானார். ஒரு பைசாவை தர்மமாகக் கொடுத்துவிட்டால் தன் உடலைவிட்டு உயிர் பிரிந்துவிடும் என்று அவர் எண்ணினார். அவர் காய்ச்சலாகக் கிடப்பதுபோல் பாசாங்கு செய்தார். 'பண்டாவை இன்னொரு நாள் வரச்சொல்' என்று மனைவியிடம் கூறினார்.

கணவன் கூறியபடி, அந்த வியாபாரியின் மனைவி பண்டாவிடம் தன் கணவன் உடல் நிலை சரி யில்லை என்றும் இப்போது அவரைப் பார்க்க முடியாது என்றும் கூறினாள். ''சேட்ஜியின் உடல் நிலை சரியில்லை என்றால் அவரை நான் அவசியம் பார்க்க வேண்டும். அவர் உடல்நிலை சரியில்லா திருக்கும்போது அவரை கவனிக்கவேண்டியது என் கடமை'' என்று பண்டா கூறினார்.

சாந்திப்ரியா உள்ளே சென்றாள், ''உங்களுக்கு உடல்நிலை சரியில்லாதிருப்பதால் உங்களை அவசியம் பார்க்க வேண்டும் என்றும் உங்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்றும் அந்த பண்டா கூறுகிறார்'' என்று தன் கணவனிடம் கூறினாள். இப்போது கஞ்சப் பிரபுவுக்கு என்ன செய்வதென்று புரிய வில்லை. அவர் ஒரு திட்டம் தீட்டினார். காய்ச்சல் கடுமையாகி தான் இறந்துவிட்டதாகச் சொல்லி பண்டாவை அனுப்பிவைக்குமாறு வியாபாரி மனைவி யிடம் கூறினார். இனிக்காத்திருப்பதில் பயனில்லை என்று சொல்லச் சொன்னார்.

இதைக் கேட்ட பண்டா, ''தாயே! எனது நண்பர் இறந்துவிட்டது எனது துரதிஷ்டம். நான் இப்போது அவருக்கு இறுதிச் சடங்குகளைச் செய்து விட்டுத்தான் போவேன்'' என்றார்.

மனைவி கணவனிடம் சென்று விஷயத்தைச் சொன்னாள். ''சாந்திப்ரியா, இந்தப் பண்டா என்னை விடமாட்டார். சவப்பெட்டி ஒன்றைக் கொண்டுவா. என்னை இடுகாட்டுக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடு செய்'' என்றார் வியாபாரி.

ஆழ்ந்த கவலையுடன் அவள் சவப்பெட்டிக்குள் அவரைப் படுக்கவைத்தாள். அவர் இறந்தவர் போல பாசாங்கு செய்தார்.

இறுதி ஊர்வலம் புறப்பட்டு சுடுகாட்டை அடைந்தது. பண்டா மந்திரங்களைச் சொன்னார். வியாபாரியின் உடலை தீயில் கிடத்த முற்பட்டனர். உடனே வியாபாரி சவப்பெட்டியிலிருந்து துள்ளிக் குதித்தார். இது கண்டு பண்டா வடிவில் நின்ற இறைவன் சிரித்தார்; தனது சுயரூபத்துடன் காட்சி அளித்தார்.

''உன்னைக் கண்டதில் எனக்கு மகிழ்ச்சி. ஏதேனும் வரம் கேள் தருகிறேன்'' என்று வியாபாரியைப் பார்த்து இறைவன் கூறினார்.

''பிரபு! உங்களுடைய தக்ஷிணையை தராததற்காக என்னை மன்னித்து விடுங்கள்'' என்று வியாபாரி கூறினார்.

'அப்படியே ஆகட்டும்' என்று இறைவன் ஆசியளித்தார்.

பந்தம் மர்மமானது. மனித இயல்பு மர்மமானது. இதுபோன்ற சம்பவங்கள் இன்றும் நிகழ்வதைக் காணலாம், அனைத்தையும் கூர்ந்து கவனிப்பவர்கள், உலகியற் பொருட்களுக்காக ஏங்கி நிற்பதும், அதற்காக முடிவில்லா வேதனைகளையும் துன்பங்களையும் ஏற்றுக்கொள்ளுவதும் எந்த அளவுக்கு தவறானது என்பதை உணரலாம்.

உங்களது உயிர் இந்த உலகை விட்டுச் செல்லும்போது உங்களுடன் ஒரு பைசாவையாவது எடுத்துச் செல்ல முடியுமா? நீங்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டுத்தான் செல்ல வேண்டும். நீங்கள் பெரிதும் விரும்பும் இந்த உடலையும்கூட விட்டுச் செல்ல வேண்டும்.

## 27. ஆண்டவனின் அறிவாற்றல்

குறிக்கோள் இன்றி எதுவும் படைக்கப்படவில்லை. ஒவ்வொரு தெய்வீகச் செயலும் இறுதியில் நன்மை பெற வேண்டும் என்ற நோக்குடன் வழி நடத்தப்படுகிறது.

ஆசார்ய ஸ்ரீ அகங்கார கேசரி ஆழ்ந்த புலமை உடையவர். அவரது நாக்கு இருமடங்கு கூராகத்

தீட்டப்பட்டது. அவர் விவாதத்தில், தனது எதிரியை ஆயிரம் துண்டுகளாக வெட்டிவிடுவார். அவர் அரசவையில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். அவர் மன்னரைப் புகழும்போது இடி முழக்கம் செய்வார்; வார்த்தைகள் மின்னலெனப் பளிச்சிடும்.

மன்னர், •அந்த ஆசிரியருக்குப் பெரிய தோட்டத்தை அன்பளிப்பாக வழங்கினுர். பலவிதமான இனிய பழங்கள் அந்தத் தோட்டத்தில் இருந்தன. கூர்மையான புத்தி உடைய ஆசிரியர், தனது பசியை ஆற்றிக்கொள்ளத் தகுந்தவையாக அந்தப் பழங்கள் ருசியுள்ளவையாக இருந்தன. அவர் காலையும் மாலையும் நடக்கும்போது அவர் தனக்குத் தானே பேசிக்கொள்வார். இந்த நிலையில் அவரை உற்சாகப்படுத்த பல வண்ண மலர்களும் அங்கு இருந்தன.

அது குளிர்காலம். ஞாயிற்றுக்கிழமை. மதியம் உணவு அருந்திய பின் ஆசிரியர் தோட்டத்தில் உலவச்சென்ருர். கனிகள் நிறைந்த மரங்களின் நடுவே அவர் வேகமாக நடந்து சென்ருர். அவர் இறைவனின் படைப்பை எண்ணிப் பார்த்தார்.

''பரங்கிக்காய் எவ்வளவு பெரிதாகக் கூரையெங்கும் படர்ந்திருக்கிறது? ஆயினும் அதன் கொடி எவ்வளவு சிறியதாக இருக்கிறது! ஆப்பிள் எவ்வளவு புதிதாக, சிகப்பாக இருக்கிறது. அது எவ்வளவு ருசியாக இருக்கிறது. இந்த மரம் பெற்ற பேறு எவ்வளவு சிறப்பானது!''

இவ்வாறு, அவர் நடந்து செல்லும் போதே பல்வேறுவிதமான பழங்களைப் பற்றியும் மலர்களைப் பற்றியும் எண்ணிக்கொண்டே சென்ருர்.

ஓரிடத்தில் பெஞ்சு இருந்தது. அதைக் கண்ட ஆசிரியர், ''ஓ! கடைசியாக இங்கே ஒரு பெஞ்சு இருக்கிறது. அலுப்பாக இருக்கிறது. சிறிது ஓய்வெடுக்கலாமே'' என்று சொல்லிக்கொண்டே ஒரு பெரிய ஆலமரத்தின் கீழ் இருந்த அந்த பெஞ்சில் படுத்தார். படுத்துக்கொண்டே மரத்தைப் பார்த்துக்கொண்டிருந்த ஆசிரியர் பெரிய கிளைகளையும், அடர்ந்து வளர்ந்துள்ள இலைகளையும் கண்டார்.

''வெட்கம்! வெட்கம்! இவ்வளவு பெரிய மரத்தில் ஏராளமாக இலைகள் இருக்கின்றன. ஆயினும் என்ன! அதன் பழங்கள் மிகவும் சிறியவையாக இருக்கின்றனவே! இவ்வளவு பெரிய மரத்திலிருந்து ஒரு பலனும் கிடைக்கவில்லையே. கடவுள் ஏன் இப்படி மூளைகெட்ட தனமாகப் படைத்து விட்டார்! ஆனால் வயலில் பளிச்சிடும் திராட்சைப் பழங்களும், புன்முறுவல் பூக்கும் ஆப்பிள் பழங்களும் நிறைந்திருக்கின்றன. கவர்ச்சி மிக்க மாதுளம் பழங்களும் உள்ளன. எல்லா வற்றிற்கும் கீழாக, மெலிதான கொடியில் மிகப் பெரிய பரங்கிக்காய் தொங்குகிறது. இவற்றில் எதுவும் தங்கள் மரத்தின் அளவைப் பற்றிக் கவலைப் படாமல் நிறையக் கனிகளையும், காய்களையும் தருகின்றன! ஆனால் இந்த ஆலமரம் எனக்கு மேலே பிரம்மாண்டமான அளவில் வளர்ந்து நிற்கிறது. ஆனால் தின்பதற்கு ஒரு பழம் கூடத் தராமல் நிற்கிறது. என்ன வெட்கக் கேடான நிலை! உண்மையிலேயே இது ஒரு முட்டாள்தனமான படைப்பு!'' — இவ்வாறு ஆசிரியர் எண்ணினார்.

இந்தச் சிந்தனையுடன் ஆசிரியர் உறங்கினார். மாலை நேரக் காற்று இதமாக வீசியது. அவர் ஆழ்ந்த உறக்கத்தில் ஈடுபட்டார்.

''டப்!'' – ஆலமரத்தின் சிறிய பழம் ஒன்று பளிச்சிடும் ஆசிரியரின் நெற்றியில் பட்டென்று விழுந்தது. ஆசிரியர் பதறி எழுந்தார்.

''ஆஹா, பிழைத்தேன்! அதிசயமாகப் பிழைத்தேன்! கடவுளின் கருணையை என்னவென்று சொல்வேன்! கடவுளின் பார்வை எவ்வளவு நெடு நோக்கு உடையது! அவரது ஊகித்தறியும் ஆற்றலும், தீர்ப்பும் எவ்வளவு நெடுநோக்குடையதாக உள்ளது!'' என்று அலறினார் ஆசிரியர், அகங்கார கேசரி. ''இறைவா! நீ எப்போதும் அறிவிற் சிறந்து விளங்குகிறாய். ஆலமரத்தின் பழம் சற்று பெரியதாக இருந்தால் என் தலை பலமாக அடிபட்டுச் சிதறியிருக்கும். அது என் உயிருக்கே உலை வைத்திருக்கும்.''

அந்த ஆசிரியர் புதிய பார்வை பெற்றார். தனது உயிரைக் காப்பாற்றிய கடவுளுக்கு நன்றி தெரிவித்து விட்டு அவர் இல்லம் திரும்பினார்.

தெய்வீகச் செயலில் ஒவ்வொரு நாளும் எதிர்ப்படுகிற சிக்கல்களைக் காணுகிற ஒரு முட்டாள் மனிதன் அவசரப்பட்டு முடிவுகளை எடுக்கிறான். எல்லாம் நன்மைக்கே. கடவுள், நல்ல நோக்கின்றி எதையும் படைக்கவில்லை. இறுதியில் நன்மையைப் பெறவேண்டும் என்ற நோக்கில்தான் ஒவ்வொரு தெய்வீகச் செயலும் வழிநடத்தப் படுகின்றன. சாதகர்கள், அவசரப்பட்டு முடிவுகளை எடுக்காமல் தம்மைக் காத்துக்கொள்ள வேண்டும். அவர்கள் அமைதியான மனத்தையும் கூர்மையான புத்தியையும் பெற்றிருக்க வேண்டும். இறைவனின் செயல்கள் இப்போது நன்மைக்கு விரோதமானதாகத் தோன்றலாம்; நல்ல நோக்கு அற்றது எனவும் தோன்றலாம்; ஆனால் எப்போதும் கருணை உடையவராகத் திகழும் கடவுள் ஒருபோதும்

அறிவற்ற செயலைச் செய்ய மாட்டார்; இறைவனின் ஒவ்வொரு செயலும் உங்களின் நன்மைக்கே. அதில் நிச்சயமாக நல்ல நோக்கு உள்ளது. ஆகவே ஒருபோதும் அவசரப்பட்டு முடிவுகளை எடுக்காதீர்கள்.

## 28. ஆயாஸ்

ஒரு அடிமையான ஆயாஸ், முகமது கஜினியின் முதன் மந்திரியாக ஆனான். முகமது கஜினி அவன் மீது தீவிரமாக அன்பு செலுத்தினான். இதைக் கண்டு மற்ற அமைச்சர்கள் பொறாமை அடைந்தனர். மாமன்னன் ஆயாஸ்மீது கோபம் அடைந்து அவனை விரட்டவேண்டும் என்று விரும்பி அதற்காகப் பெரிதும் முயன்றனர். அவர்கள் முயற்சிகள் அனைத்தும் தோற்றன. மன்னன் ஆயாஸ்மீது முன்னிலும் அதிகமாக அன்பு செலுத்தினான்.

அமைச்சர்கள் ஒரு நாள் மன்னனை அணுகி, ''போற்றுதற்குரிய மாமன்னா! இந்த அடிமையின் மீது ஏன் அதிகமாக அன்பு செலுத்துகிறீர்கள் ?'' என்று கேட்டனர்.

''இதற்குச் சரியான காரணம் இருக்கிறது. சிறிது காலத்துக்குப் பின்னர் அதனை அறிந்து கொள்ளுவீர்கள்.''

இரண்டு மாதங்களுக்குப் பிறகு பேரரசன் ஆயாஸ் உட்பட அமைச்சர்கள் அனைவரையும் அழைத்தான். ''என் அன்புக்குரிய அமைச்சர்களே! புறநகர்ப் பகுதியில் உள்ள அரசுத் தோட்டத்தில் நான் நாளை ஒளிந்து இருப்பேன். என்னை சூரிய உதயத்துக்குப்பின் தேடத் துவங்குங்கள். சூரிய அஸ்தமனத்துக்கு முன்னர் கண்டு பிடியுங்கள்.

என்னைக் கண்டு பிடிப்பவர்களுக்கு சிறப்பாகப் பரிசு வழங்குவேன்'' என்று பேரரசன் கூறினான்.

அமைச்சர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டனர். அவர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் இல்லம் திரும்பினர். அடுத்த நாள் பெறப் போகும் பரிசு எத்தகையதாக இருக்கும் என்று எண்ணியவாறே அவர்கள் சென்றனர். அவர்கள் இரவில் சரியாக உறங்கவும் இல்லை.

நகரின் வாயிலை நோக்கிச் செல்லும் எல்லா சாலைகளிலும் அழகிய இளம் பெண்களின் நடனத் திற்கும், பாடலுக்கும் ஏற்பாடு செய்யுமாறு மாமன்னன் அன்று இரவே உத்திரவிட்டான். அதன்படி அடுத்த நாள் காலையில் நாட்டியம் ஆடும் பெண்களும், பாடகர்களும் தெருக்களில் நிறைந்து காணப்பட்டனர்.

அமைச்சர்கள் அனைவரும் காலையில் நகர வாயிலை நோக்கிப் புறப்பட்டனர். வழியில் இசை நிகழ்ச்சிகளும் அழகிய இளம் பெண்களின் நடன நிகழ்ச்சிகளும் நடைபெறுவதைக் கண்ட அவர்கள் அவற்றை ரசித்துப் பார்க்கத் துவங்கினர். அவற்றைப் பார்க்காமல் செல்ல அவர்களால் முடியவில்லை. ஒவ்வொரு அமைச்சரும் தனக்குள் இவ்வாறு எண்ணிக்கொண்டனர்; ''பேரரசன் ஒளிந்திருக்கும் இடம் மிகவும் சிறியது. நான் அவரை சில நிமிடங்களில் கண்டுபிடித்து விடுவேன், இந்த இசையையும் நடனத்தையும் ரசித்துப் பார்த்துவிட்டுச் செல்லலாம். என் வாழ்நாளில் இதுபோன்ற நிகழ்ச்சிகளை நான் கண்டதில்லை. இந்தப் பெண்கள் அனைவரும் ஆடலிலும் பாடலிலும் வல்லவர்கள்.''

சூரிய அஸ்தமன நேரம் நெருங்கியது. தோட்டத்துக்குச் செல்ல புறநகர்ப் பகுதியில் உள்ள நகர் வாயிலை நோக்கி அமைச்சர்கள் விரைந்து சென்றனர். ஆனால் அவர்கள் தோட்டத்தை அடைவதற்குள் சூரியன் மேற்கில் மறைந்துவிட்டான். அவர்கள் தோட்டத்தை அடைந்தபோது, ஏற்கனவே அங்கு பேரரசருடன் ஆயாஸ் இருப்பதைக் கண்டு வெட்கித் தலைகுனிந்தனர்.

அமைச்சர்கள் ஆயாஸைப் பார்த்து, ''நீங்கள் எப்போது வந்தீர்கள்? இசை, நடன நிகழ்ச்சிகளை நீங்கள் காணவில்லையா?'' என்று கேட்டனர்.

''இசை, நடன நிகழ்ச்சிகளா? நான் எதையும் காணவில்லை. சூரியோதயம் ஆனதும் நான் நேராக இங்கு வந்து நமது மன்னரைச் சந்தித்தேன். அப்போதிலிருந்து இங்குதான் இருக்கிறேன்,'' என்று ஆயாஸ் பதிலளித்தான்.

அமைச்சர்களைப் பார்த்து பேரரசன் பேசினான். ''என் அன்புக்குரிய அமைச்சர்களே! இதனால் தான் நான் ஆயாஸ் மீது அதிக அன்பு செலுத்துகிறேன். ஆயாஸின் கண்கள் என்னைத் தவிர வேறு எதையும் காண்பதில்லை. ஆயாஸின் இதயத்தில் என்னைத் தவிர வேறு எதற்கும் இடமில்லை. நான் எப்படி ஆயாஸை மறக்கமுடியும்? நான் எப்படி ஆயாஸ் மீது அன்பு செலுத்தாமல் இருக்க முடியும்? என் உயிரினும் இனிய ஆயாஸை நான் எப்படிப் புறக்கணிக்க முடியும்?''

ஆயாஸ் தன் மன்னன் மீது அன்பு செலுத்தியதுபோல நீங்களும் இறைவன் மீது இதயபூர்வமாக அன்பு செலுத்த வேண்டும். உங்கள் கண்கள் இறைவனைத் தவிர வேறு எதையும் காணக்

கூடாது. உங்கள் இதயத்தில் உங்கள் அன்பு தெய்வத்தைத் தவிர வேறு எதற்கும் இடமளிக்கக் கூடாது. நீங்கள் எப்போதும் இறைவனின் பெயரையும், புகழையும் பாடவேண்டும். அப்போது தான் அவர் உங்கள் இதயத்தில் குடிகொள்வார். அவரே உங்கள் அன்பிற்குரியவராக ஆவார். நீங்கள் அவரோடு எப்போதும் ஆனந்தமாக இருப்பீர்கள்.

## 29 அன்புதான் மனிதனைத் திருத்தும்

முன்னொரு காலத்தில் ஊது காட்டிற்கு அருகில் ஒரு சிறு ஆஸ்ரமம் இருந்தது. அதில் சில குடிசைகளும் ஒரு சிறு ஆலயமும் இருந்தன. அவற்றைச் சுற்றி மலர்கள், மூலிகைகள், செடிகள் மற்றும் மரங்கள் நிறைந்த தோட்டம் இருந்தது. அந்த ஆஸ்ரமம், நகரங்கள் மற்றும் மாநகரங்களிலிருந்து வெகு தொலைவில் ஒரு மலை அடிவாரத்தில் இருந்தது. அதனருகே வேகமாக நீர்பாய்ந்து வரும் சிற்றாறு ஒன்றும் இருந்தது. ஒரு ஞானி, ஆறு சீடர்களுடன் அங்கு வசித்து வந்தார். அவர் பகவான் கோபாலனின் பக்தர். அவர் தன்னை கோபாலனின் தொண்டன் என்று கூறிக்கொள்ளுவார். ஆகவே அவரது பெயர் கோபால்தாஸ் என்று விளங்கலாயிற்று. அந்த ஆஸ்ரமத்துக்கு கோபால் ஆஸ்ரமம் என்று பெயர்.

கோபால்தாஸ் ஒரு துறவி. மூலிகைகளைக் கொண்டு வைத்தியம் செய்பவர். அவர் உதார குணம், கனிவு, தூய்மை, அன்பு ஆகிய பண்புகளால் சிறப்புப் பெற்றவர். அவர் சாதி, இனம், நிறம் என்ற வேறுபாடுகளையோ, பணக்காரன் அல்லது ஏழை என்ற வேறுபாட்டையோ பார்க்காமல் எல்லோருக்கும் இலவசமாக வைத்தியம்

செய்வார். ஆஸ்ரமம் எப்போதும் திறந்தே இருக்கும். அந்தத் துறவி மக்களிடம் பணம் எதுவும் கேட்பதில்லை. ஏதேனும் ஒரு பணக்காரர் தாளுக முன்வந்து நன்கொடை கொடுத்தால் அந்தத் தொகை முழுவதையும் மருந்துகள் தயாரிக்கவும் ஏழை எளிய் நோயாளிகளும் மற்றவர்களும் தங்கு வதற்கான இடவசதிக்காகவும் பயன்படுத்திக் கொள்ளுவார். ஆனால் அவரும் அவரது சீடர்களும் அருகிலுள்ள கிராமங்களில் உள்ள வீடுகளில் வாங்கி வரும் பிக்ஷையை மட்டுமே உண்பார்கள். ஒரு நாளைக்கு இருவர் என முறைவைத்துக்கொண்டு சீடர்கள் பிக்ஷ எடுத்து வருவர்.

ஒரு இளம் ஜமீன்தார் ஜகதீஷ்சிங் என்ற பெயருடன் வாழ்ந்து வந்தார். அவர் கொடியவர், தீய நடத்தை உடையவர். அவருக்கு கோபால் தாஸிடம் மிகவும் பயம். அவர் நாக்கில் தேனும் இதயத்தில் கசப்பும் கொண்டவர். அவர் ஒருபோதும் கோபால்தாஸை மதிக்கவில்லை. ஆனால் அவரைச் சந்திக்கும்போது மதிப்பதாகப் பாசாங்கு செய்வது வழக்கம். பலநேரங்களில் அவர் பாவி களான, விஷமத்தனமான, ஒழுக்கமற்ற ஆட்களை, கோபால்தாஸையும் அவரது ஆஸ்ரமத்தையும் துன்புறுத்தவும் தொல்லைப்படுத்தவும் அனுப்பி வைத்திருக்கிறார். ஆனால் அவர்களிற் சிலர்தான் ஆஸ்ரமத்துக்குச் சென்றனர். பலருக்கு துறவியை நெருங்கவே அச்சம். சிலர் ஆஸ்ரமம் சென்றனர். ஆனால் அங்கு கோபால்தாஸைக் கண்டதும் அவர்கள் மனம் மாறிவிடுகின்றனர். அவர்களது நோக்கத்தை கோபால்தாஸிடம் கூறிவிடுகின்றார். கோபால்தாஸ் இவை அனைத்தையும் கேட்டுக் கொண்டு அமைதியாக, புன்முறுவல் பூத்த முகத் துடன் இருந்தார். தனது முயற்சிகள் அனைத்தும் தோற்றுப்போய் தனது எண்ணம் நிறைவேருத

தைக் கண்ட ஜமீன்தார், பக்கத்திலுள்ள காட்டில் தன் கோஷ்டியுடன் வாழ்ந்து வந்த கொள்ளைக் காரனுன கரன்சிங்குடன் நட்புக் கொண்டார். இருவரும் சந்தித்தனர், குடித்தனர், ஒன்ருக உணவு உட்கொண்டனர்; திட்டமிட்டனர்.

கோபால்தாஸிடம் அழகிய குதிரை ஒன்று இருந்தது. அது அழகானது மட்டுமல்ல, சிறப்பான இனத்தைச் சேர்ந்தது; கிடைத்தற்கு அரியது. சிறந்த குதிரைக்கான அத்தனை அம்சங்களையும் அது பெற்றிருந்தது. அது கோபால்தாஸுக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. அவரிடம் மிகவும் அன்பு கொண்டிருந்தது.

ஒரு நாள் பக்கத்து கிராமம் ஒன்றில் நோயாளி ஒருவரைக்காண கோபால்தாஸ் இந்தக் குதிரையில் அமர்ந்து சென்ருர். கரன்சிங் அவரைக் கண்டான்; அவரைத் தாக்க முற்பட்டான். ஆனுல் கோபால் தாஸ் துணிவுடன் தப்பிச் சென்று விட்டார். ஆனுல் அவர் திரும்பி வரும்போது கரன்சிங் ஒரு பிச்சைக்காரன் வேடத்தில் நொண்டிக் கொண்டு வந்தான். நடக்க முடியாதவன்போல பெருமூச்சு விட்டான். அவனைக் கண்ட கோபால்தாஸ் அவன் மீது அன்பும் கருணையும் கொண்டார். அவனை குதிரை மீது அமரச் செய்தார். தான் நடந்து வந்தார்.

சிறிது தூரம் சென்றதும், கொள்ளைக்காரன் குதிரையை விரட்டிக் கொண்டு வேகமாகப் பறந் தான். கோபால்தாஸைப் பார்த்த கரன்சிங் உரத்த குரலில், ''ஏ, முட்டாள் சாதுவே! நான் கரன்சிங். உன் குதிரையைப் பறித்துக்கொள்ள எண்ணினேன். தந்திரமாக அதனை சாதித்துக் கொண்டேன். இப்போது நீ அதனைத் திரும்பப் பெற முடியாது'' என்று கூறினுன்.

கோபால்தாஸ் சிரித்துக்கொண்டே பதிலளித்தார்: ''குதிரை நன்கு பயிற்சி பெற்றது. இப்போது கூட நான் விசிலடித்தால் அது திரும்பி வந்துவிடும். ஆனால் நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை. உன் வடிவில் கோபாலுக்கு அடியேன் தொண்டு செய்ய முடிந்ததாக எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன்.''

சிறிது நேரம் கழித்து மீண்டும் கோபால்தாஸ் கூறினார்: ''முடிந்தால், தயவு செய்து ஒன்று செய்.''

''இந்த கரன்சிங்கிடமிருந்து நீ எதனை எதிர் பார்க்கிறாய்? என்னை முட்டாளாக்க முயற்சிக்காதே'' என்று முரட்டுக் குரலில் கரன்சிங் கூறினான்.

''அப்படி நினைக்காதே. நீ குதிரையை எடுத்துச் செல். ஆனால் இந்த சம்பவத்தை மட்டும் எவரிடமும் சொல்லாதே.''

''ஏன், நான் இது பற்றி மற்றவர்களிடம் சொன்னால் என்ன தீங்கு வந்துவிடும்?''

''இந்த சம்பவத்தைக் கேட்டால், அல்லற்படும் ஏழை மக்களுக்கு எவரும் உதவ முன்வர மாட்டார்கள்.''

கோபால்தாஸ் ஆஸ்ரமத்துக்குத் திரும்பி வந்தார். ஆனால் அவரது வார்த்தைகள் கரன்சிங்கை வசீகரித்தன. அவன் தனது செயலுக்காக வெட்கப்பட்டான். இரவு முழுவதும் அவன் அமைதி இழந்த நிலையில் உறங்காமல் இருந்தான். மறுநாள் காலையில் குதிரையுடன் அவன் ஆஸ்ரமத்துக்குச் சென்றான். அங்கு அவன் நண்பனைப்போல வரவேற்கப்பட்டான். அவன் கோபால்தாஸின் திருவடிகளில்

வீழ்ந்து, கெஞ்சும் பார்வையுடன் கனத்த இதயத்துடன், ''இப்போது என் தொழிலை முழுமையாக விட்டுவிடத் தீர்மானித்துவிட்டேன். தாங்கள் என்னை மன்னித்து, ஆதரித்து, அன்பு காட்ட வேண்டுகிறேன்'' என்று கூறினன்.

கோபால்தாஸ் அன்புடன் அவனைத் தூக்கி நிறுத்தி, ''கவலைப்படாதே. அமைதியாக இரு. நேற்று இரவு முழுவதும் நீ உறங்கவில்லையென்று தெரிகிறது. ஆகவே, குடிலுக்குச் சென்று ஓய்வு எடுத்துக்கொள்'' என்று கூறினர். அதே நேரத்தில் தனது சீடர்களில் ஒருவரை அழைத்து கரன்சிங் தங்குவதற்கும், உணவு உட்கொள்ளுவதற்கும் ஏற்பாடுகள் செய்யுமாறு கூறினர்.

ஜமீன்தார் இதனைக் கேட்டு கோபமுற்ருர். இப்போது தானே நேரில் சென்று ஆஸ்ரமத்திற்கு தீ வைத்து கோபால்தாஸை கொன்றுவிட ஜமீன்தார் தீர்மானித்தார். நள்ளிரவில் தனது நம்பிக்கைக்குரிய சில ஊழியர்களுடன் புறப்பட்டார். ஜமீன்தார் ஜகதீஷ் சிங் தன் கோஷ்டிக்குத் தலைமைதாங்கி குதிரையில் சென்ருர். அவர்கள் ஆஸ்ரமம் இருக்கும் மலையடிவாரத்திற்குச் சென்றதும், அவர்களின் கைகளிலிருந்த கை விளக்குகளில் ஒன்றைத் தவிர மற்ற அனைத்தையும் அணைத்துவிடுமாறு ஜமீன்தார் கூறினர். அவர்கள் அனைவரும் ஆஸ்ரமம் நோக்கிச் சென்றனர். அவர்கள் ஆஸ்ரமத்துக்கு அருகில் வந்ததும், ஜமீன்தாரின் குதிரை தவறி விழுந்து, அலறியது. அது தன் எஜமானனுடன் ஒரு பள்ளத்தில் வீழ்ந்தது. ஆஸ்ரமத்தின் நாய்கள் குரைத்தன. ஜமீன்தாருடன் வந்த வேலைக்காரர்கள் குழப்பத்தில் ஆழ்ந்தனர்; அச்சமுற்றனர்; செய்வது அறியாது திகைத்தனர்.

சிறிது நேரத்தில் தங்களை நோக்கி, தீப்பந்தம் ஏந்திய சிலர் வருவதைக் கண்டனர். ஓடிவிடலாம் என்று எண்ணிய அவர்கள் காதுகளில் ஆறுதலளிக்கும் குரல் கேட்டது; ''பயப்படாதீர்கள். நான் உங்களுக்கு உதவி செய்யவே வருகிறேன்.''

கோபால்தாஸ், நான்கு சீடர்கள் மற்றும் கரன்சிங்குடன் அங்கு வந்து, நடந்தது என்னவென்று விசாரித்தார். வேலைக்காரர்களில் ஒருவன் உண்மையைக் கூறினுன். இதைக் கேட்ட கரன்சிங் கடுங்கோபம் அடைந்தான். கோபால்தாஸ் கையில் விளக்கை ஏந்திக்கொண்டு சீடர்களுடனும் ஜமீன்தாரின் ஆட்களுடனும் கீழே இறங்கினுர். கரன்சிங் நின்ற இடத்தைவிட்டு அசையவில்லை. ஜமீன்தார் ஒரு மரக்கிளையில் தொங்கிக்கொண்டிருப்பதை கோபால்தாஸும் மற்றவர்களும் கண்டனர். அவருக்கு பலத்த அடி, நினைவிழந்த நிலையில் இருந்தார்.

கோபால்தாஸ் ஜமீன்தாரை குடிலுக்குக் கொண்டு சென்றுர். காயங்களைத் துடைத்தார். மருந்து போட்டு ஜாக்கிரதையுடன் கட்டுப் போட்டார். பிறகு சிறிதளவு மருந்தை வாயில் ஊற்றினுர். ஜமீன்தாரின் நினைவு திரும்பவே இப்படிச் செய்தார். பக்கத்திலேயே அமர்ந்திருந்தார்.

இவையனைத்தையும் கோபத்துடனும் ஆச்சரியத்துடனும் பார்த்துக்கொண்டிருந்த கரன்சிங், கோபால்தாஸை பார்த்து, ''ஐயா என்னை மன்னித்துவிடுங்கள். இந்தக் கெடுமதிபடைத்த ஜகதீஷின் காரணமாக தாங்கள் பல துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தது. ஆனுல் இப்போதும்கூட நீங்கள் இந்த ஆளைக் காப்பாற்றுவதற்காக வேதனையையும், துன்பத்தையும் ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள்.

கோபால்தாஸ், விரலை அசைத்து, அமைதியாக இருக்குமாறு கூறினார்.

காலையில், சூரியோதய வேளையில் ஜகதீஷ் மெதுவாகக் கண்ணைத் திறந்தார். சுற்று முற்றும் பார்த்துவிட்டு மீண்டும் கண்ணை மூடிக்கொண்டார். கோபால்தாஸ் கோபாலனை பிரார்த்தித்தார். அமைதியாக இறைவனுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார். பிறகு அவர் கரன்சிங்கை அழைத்துக் கொண்டு குடிலிலிருந்து வெளியேறினார்.

''வெறுப்பு, வெறுப்பை உற்பத்தி செய்கிறது. அன்பு, வெறுப்பை அன்பாக மாற்றுகிறது. பிறரை உடல் பலத்தின் மூலமாக வெற்றி கொள்ளுவதற்கும் தெய்வீக அன்பு என்னும் பலத்தின் மூலம் வெற்றி கொள்ளுவதற்கும் நிறைய வேறுபாடு உள்ளது'' என்று கோபால்தாஸ் கூறினார்.

அவர் தொடர்ந்து கூறினார்: ''வெறுப்பும் அன்பும் ஒன்றுக்கொன்று எதிரானவை. முன்னது விஷம் போன்றது. பின்னது அமுதம் போன்றது; அது பலனை இருவருக்கும் அளிக்கிறது வெறுப்பு எதிரியை தற்காலிகமாக உங்களிடம் பணிய வைக்கிறது. ஆனால் அன்பு, அவனை நிரந்தரமாக உங்களிடம் பணிவு கொள்ளச் செய்கிறது. அன்பே கடவுள். கடவுளே அன்பு. அன்பு மட்டுமே மனிதனை மாற்றமுடியும்.''

இதற்கிடையில் ஒரு சீடன் ஓடிவந்து, ஜகதீஸ் சிங் மீண்டும் கண்ணைத் திறந்து பார்ப்பதாகவும் யாரையோ தேடுவதுபோலத் தோன்றுவதாகவும் கூறினான். கோபால்தாஸ் குடிலை நோக்கி விரைந்தார். கரன்சிங்கும், சீடனும் பின் தொடர்ந்தனர். ஜகதீஷ்சிங் பேசும் நிலையில் இல்லை. ஏனெனில் கீழ் உதடு பலத்த காயத்துக்கு உள்ளாகியிருந்தது.

அவரது கண்கள் மூடியிருந்தாலும், கோபால் தாஸின் காலடி ஒலியை அவரால் கேட்க முடிந்தது.

ஒரு நிமிடத்தில் ஜகதீஸ் மீண்டும் கண்களைத் திறந்தார். ஆனால் இப்போதைய பார்வை முந்தையப் பார்வையிலிருந்து மாறுபட்டதாக இருந்தது. கடந்த கால நிகழ்ச்சிகளை எண்ணிய காரணத்தால் அவரது இதயம் பற்றி எரிவது போலத் தோன்றியது. வெட்கம், வேதனை—இந்த எண்ணங்களும் உணர்வுகளும் அவரது கன்னங் களில் வேதனை கண்ணீரின் வடிவில் பெருகி ஓடின. அன்பு மற்றும் மன்னிப்பின் வடிவமாக உள்ள துறவிக்கு நன்றி செலுத்தும் தன்மை வெளிப் பட்டது.

ஜகதீஷின் எண்ணங்களையும் உணர்வுகளையும் புரிந்துகொண்ட கோபால்தாஸ், அவரது தலைமீது கைவைத்து ஆசீர்வதித்து ஆறுதல் அளித்தார்.

## 30. இறைவன் உயிரோடு இருக்கிறான்

சாதனையின் பலனைப் பெற முடியவில்லையே என்ற ஏக்கத்துடன் பூரணச் சந்திரன் குருநாதரை அணுகினான்.

''வீண்வேலை, நாராயணனின் சிலையை ஆறு மாதங்களாக வழிபட்டும் ஒரு பலனும் கிடைக்க வில்லை. இன்னும் சக்திவாய்ந்த மந்திரத்தையும், இன்னும் சக்தி வாய்ந்த கடவுளையும் எனக்குச் சொல்லுங்கள்.''

குருநாதர், பூரணச் சந்திரனுக்கு நாராயண மந்திரத்தை உபதேசம் செய்து, வழிபடுவதற்கு ஒரு சிறு அழகிய நாராயணமூர்த்தியின் சிலையையும் கொடுத்திருந்தார். பூரண சந்திரன் இடையறாது

பூஜையும், ஜபமும் செய்தான். கடவுள் ஏன் அருள் புரியவில்லை என்பது கடவுளுக்குத்தான் தெரியும்.

குரு பூரணச் சந்திரனைப் பார்த்துச் சிரித்தார். ''சரி, இந்த சிவபெருமான் சிலையை எடுத்துக் கொள். இப்போது நான் புனித மந்திரமான பஞ்சாட்சர மந்திரத்தை உனக்கு உபதேசிக்கிறேன். சிவபெருமானை நம்பிக்கையுடனும் பக்தியுடனும் வழிபடு. அவரது கருணையை எளிதில் பெறலாம். அவர் உனக்கு விரைவில் அருள் புரிவார்'' என்று கூறினார்.

பூரணச் சந்திரன் பெருமகிழ்ச்சி அடைந்தான்.

அடுத்த ஆறுமாத காலம் பூரணச் சந்திரன் ஜபம் மற்றும் சிவ பூஜையில் ஈடுபட்டு வந்தான். நாராயணன் சிலை பூஜை அறையில் அழுக்கு நிறைந்த அலமாரியின்மேல் வைக்கப்பட்டிருந்தது.

''இதனாலும் பலன் இல்லை. பலன் கிடைப்பதற்கான அறிகுறியே இல்லை. பிரபு, என்னைச் சோதிக்காதீர்கள். எனக்கு விரைவாக அருள்புரியும் தெய்வச் சிலையையும், மந்திரத்தையும் எனக்குச் சொல்லுங்கள்'' என்று பூரணச் சந்திரன் குருநாதரிடம் வேண்டினான்.

குரு சிரித்தார். சீடன் தெளிவு பெறும் நேரம் வந்துவிட்டது. ஆயினும், இதனை சீடனே அனுபவத்தில் அறிந்துகொள்வான் என குருநாதர் கருதினார்.

''சரி, இந்தக் காலத்தில் காளிதேவிதான் கருணைக்கடவுள். காளி அன்னையின் உருவச் சிலையை வழிபடு. நவார்ண மந்திரத்தை ஜபம் செய். அன்னையின் அருளை விரைவில் பெறுவாய்.''

இம்முறை பூரணச்சந்திரனுக்கு சந்தேகம் இல்லை. முழு நம்பிக்கை இருந்தது.

காளி வழிபாடு துவங்கியது அலமாரியில் இருந்த நாராயணனுடன் சிவபெருமானும் சேர்ந்து கொண்டார். பூரணச்சந்திரன் ஆழ்ந்த பக்தியுடன் அன்னை காளிக்கு ஊதுபத்தி கொளுத்தி வழிபட்டான். புகை மேலே கிளம்பிற்று. அவன் கவனித்தான். புகை அலமாரிக்கும் சென்றது. அவன் ஆத்திரம் அடைந்தான். ஊதுபத்திகளை கீழே வைத்துவிட்டு எழுந்தான்.

''எனக்குக் கருணைபுரியவும், அருள் தரவும் மறுத்த இந்த சிவபெருமானுக்கு ஊதுபத்தியின் நறுமணத்தை நுகர என்ன தகுதி இருக்கிறது? நான் இப்போது அன்னை காளியை வழிபடுகிறேன். ஊதுபத்தியின் நறுமணம் சிவனின் மூக்குக்குள் செல்ல நான் அனுமதிக்கமாட்டேன். பஞ்சை வைத்து அடைத்துவிடுகிறேன்.''

அவன் அழுக்குப்படிந்திருக்கும் சிவபெருமானின் சிலையை எடுத்தான். சிலையின் மூக்கிற்குள் பஞ்சை வைத்து அடைக்கத் தொடங்கினான்.

என்ன ஆச்சரியம்! சிலை மறைந்தது. அவன் முன்னே சிவபெருமான் காட்சியளித்தார். அவர் சிரித்தவாறு கருணைபொழியும் முகத்துடன் காணப்பட்டார். பூரணச்சந்திரன் மண்டியிட்டு வணங்கினான்.

''பூரணச்சந்திரா! உனக்கு வேண்டிய வரத்தைக்கேள். உனது பக்தி குறித்து நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று சிவபெருமான் கூறியருளினார்.

இதைக் கேட்ட பூரணசந்திரன், 'இறைவா! எனக்கு விளக்கம் சொல்லுங்கள். நான் குழப்ப மடைந்துள்ளேன். நான் பஞ்சாட்சர மந்திரத்தினை ஆறுமாதங்களாக ஜபம் செய்து ஆழ்ந்த பக்தியுடன் நான் உங்களை வழிபட்டபோது தாங்கள் எனக்கு அருள்புரியவில்லை. ஆனால் உங்கள் உருவச் சிலையை ஒதுக்கி வைத்து, உங்களை வழிபடுபதை நிறுத்தி யிருக்கும்போது திடீரென்று எனக்குக் காட்சியளிக் கிறீர்கள். இதன் மர்மம் எனக்குப் புரியவில்லையே!'' என்று கூறினான்.

''குழந்தாய்! இதில் மர்மம் எதுவுமில்லை. நீ என்னை வெறும் உருவச் சிலையாக, உலோகத் துண்டாக நினைத்தபோதும், நீ விரும்பினால் என்னை வழிபடுவாய், இல்லையென்றால் என்னை புறக்கணித்து விடுவாய், என்ற நிலை இருந்தபோதும் நான் எப்படி உனக்குக் காட்சியளிக்க முடியும்? சிலையில் நான் உயிரோடு இருப்பதாக நீ கருதியபோது, ஊதுபத்தி யின் நறுமணம் என் மூக்கிற்குள் நுழையக்கூடாது என்பதற்காக மூக்கிற்குள் பஞ்சை வைத்து அடைக்க நீ முயன்றபோது, இந்த வகையில் அந்தச் சிலையில் நான் உயிரோடு இருப்பதாக நீ எண்ணியபோது நான் உன்னிடமிருந்து பிரிந்திருக்க முடியவில்லை,'' என்று சிவபெருமான் பதிலளித்தார்.

பூ ர ண ச் ச ந் தி ர ன் பேச்சற்றுப் போனான். அவனுக்கு இப்போது ஞானத்தெளிவு ஏற்பட்டது. அவன் சிவபெருமானை வணங்கினான். அவரது அன்பு என்னும் கடலில் மூழ்கினான். அவனால் வரம் எதுவும் கேட்க முடியவில்லை. அவரது அன்பில் அவன் அனைத்தையும் கண்டான்.

## 31. நாரதரின் இசை கர்வம் அகற்றப்பட்டது

நாரத ரிஷிக்கு வீணை வாசிப்பதில் தான்தான் சிறந்தவர் என்ற கர்வம் இருந்தது. இதனை அகற்ற பகவான் கிருஷ்ணர் விரும்பினார்.

ஒரு சமயம், பகவான் கிருஷ்ணனின் தர்பாரில் இசைக் கலை வல்லுனர்கள் கூடியிருந்தனர். ஹனுமான், நாரதர் ஆகியோரும் அங்கு இருந்தனர். பகவான் கிருஷ்ணர் நாரதரைப் பார்த்து, வீணையை வாசிக்குமாறு கூறினார். நாரதர் இனிய வீணை கச்சேரி ஒன்றை நிகழ்த்தினார். அந்த மக ரிஷிக்கு இசையில் உள்ள ஆற்றலை அனைவரும் பாராட்டினர். பகவானைத் தவிர மற்ற அனைவரும் ரசனையில் தலையை ஆட்டிக்கொண்டிருந்தனர்.

நிகழ்ச்சியின் நிறைவில் பகவான் கிருஷ்ணர் ஸ்ரீ ஹனுமானைப் பார்த்து, ''வானர சேனையின் தளபதியே ! நாரதரின் இசையைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய் ?''

நாரத ரிஷி இதைப்பெரும் அவமானமாகக் கருதி, தலையைக் கவிழ்த்துக்கொண்டார்.

''நாரதா ! ஏன் உற்சாகமிழந்து காணப்படுகிறாய் !'' கிருஷ்ண பகவான் கேட்டார்.

நாரதர் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு பதிலளித்தார்: ''வணக்கத்திற்குரிய பிரபு ! இந்தச் சபையில் ஆற்றல் மிக்க இசைப் பேரறிஞர்கள் வீற்றிருந்தனர். சங்கீதம் என்றால் என்னவென்று அறியாத ஒரு குரங்கிடம் அபிப்ராயம் கேட்டதன்மூலம் தாங்கள் என்னை கேலிக்கு

ஆளாக்கிவிட்டீர்கள். இது என் இதயத்தைப் புண்ணாக்கிவிட்டது.''

''நாரதா, வருந்தாதே, உனது வீணையை அந்த குரங்குத் தலைவனிடம் கொடு. வீணை வாசிக்கும் ஆற்றல் அவனுக்கு இருக்கிறதா இல்லையா என்று பார்ப்போம்'' என்று பகவான் கூறினார்.

நாரதர் மேலும் வேதனைப்பட்டார். ஏதோ முணுமுணுத்தார்.

''நாரதா! என்ன முணுமுணுக்கிறாய்? உனது எண்ணங்களை வெளிப்படையாகச் சொல்'' என்றார் பகவான்.

நாரதர் பதிலளித்தார்: ''இது மிக நுட்பமான கருவி. இதன்மீது நான் உயிரையே வைத்திருக்கிறேன். அவன் ஒரு குரங்கு. அவன் எனது கருவியை முழுமையாக வீணாக்கிவிடுவான்.''

''பயப்படாதே, நாரதா! அதனை அவனிடம் கொடு. வீணைக்கு நான் பொறுப்பு''. பகவான் பதிலளித்தார்.

நாரதர், தயக்கத்துடன் குரங்குத் தலைவனிடம் வீணையைக் கொடுத்தார். ரிஷியின் அவமானப் படுத்தும் சொற்களால் ஸ்ரீ ஹனுமான் சிறிதளவும் பாதிக்கப்படவில்லை. ஹனுமான், சஞ்சலமற்ற மனமும் மகத்தான புலனடக்கமும் உடைய ரிஷி.

பிறகு பகவான் கூறினார்: ''குரங்குகளின் தலைவா! உனது இனிய இசையை வழங்கு. கேட்கலாம்!''

ஹனுமான் தீவிர பக்தியுடன் ராம நாமத்தை பாடினார். வீணையையும் மீட்டினார் அது நாரதரின்

இசையைவிடச் சிறந்ததாக இருந்தது. ரசிகர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர். ஹனுமானின் இசை கல்லையும் கரைத்தது. அனைவரும் ஹனுமானைப் பாராட்டினர். நாரதரும் பாராட்டினார்.

''என்ன ! ரிஷி ! நீயும் குரங்குத் தலைவனின் இசையைப் பாராட்டியது பொருத்தமே. உண்மையில் அது பிரமிக்கவைப்பதாக இருந்தது'' என்று பகவான் கூறினார்.

நாரதர் வெட்கித் தலைகுனிந்தார். பகவான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, ''பிரபு ! என்னை மன்னித்துவிடுங்கள். மனிதனின் சிறப்பை என்னால் எப்படி அளவிட முடியும் ? தாங்களே அனைத்தும் அறிந்தவர். நீங்கள்தான் உண்மையான நீதிபதி'' என்று கூறினார்.

நாரதர் வீணையை எடுக்க முயன்றார். ஆனால் அதை அவரால் தூக்க முடியவில்லை. அவர் பகவானை நோக்கி, ''பிரபு ! வீணையை தரையிலிருந்து எடுக்க என்னால் முடியவில்லை. குரங்கு ஏதோ தந்திரம் செய்திருக்கிறது. நான் மீண்டும் வீணையை எடுத்துக் கொள்ள அருள்புரியுங்கள்'' என்றார்.

''நாரதா ! வீணையை எடுக்க மற்றவர்கள் முயற்சிக்கட்டும்'' என்றார் பகவான்.

ஒவ்வொருவரும் முயற்சி செய்தனர். ஒருவர் முயற்சியும் பலிக்கவில்லை. ஏன் வீணை இப்படி பூமியில் ஒட்டிக்கொண்டிருக்கிறது என பகவான் மற்ற இசைப் பேரறிஞர்களை வினவினார். அவர்களில் நிபுணரான ஒருவர் பதிலளித்தார் : ''வீணை எந்தக் கல்மீது வைக்கப்பட்டிருந்ததோ அந்தக் கல், குரங்குத் தலைவனின் இசையால் உருகிவிட்டது.

ஆதலால் வீணை அதில் பதிந்துவிட்டது. இசை நிறுத்தப்பட்டதும் வீணை கல்லுடன் இறுகிப்போய் விட்டது. அதனால் கல்லுடன் ஒட்டிக்கொண்டது.''

பகவான் கிருஷ்ணர் நாரதரைப்பார்த்து, ''நாரதா! நீ பாடி, கல்லை உருக்கி அந்த வீணையை எடுத்துக்கொள்'' என்றார்.

நாரதர் தன் திறமையை முழுமையாகச் செல விட்டுப் பாடினார். ஆனால் பலன் ஏதுமில்லை பிறகு பகவான் ஹனுமானைப் பார்த்து, தொடர்ந்து பாடி வீணையை மீட்டுத்தரும்படி சொன்னார். கல் சில நிமிடங்களில் கரைந்தது. நாரதர் மீண்டும் வீணையை எடுத்துக் கொண்டார்.

தனது கர்வத்தைக் குறைக்கவே பகவான் இவ்வாறு செய்திருக்கிறார் என்று நாரதர் அறிந்து கொண்டார். குரங்குத் தலைவன் அனுமன்தான் என்பதையும் அவர் அறிந்து கொண்டார். மிகுந்த அன்புடன் அவர் அனுமனைக் கட்டித் தழுவிக் கொண்டார். அதே நேரத்தில் தான் முறைதவறி நடந்து கொண்டதற்காகத் தன்னை மன்னிக்க வேண்டினார். இசையில் நாரதருக்கு இருந்த கர்வம் இவ்வாறு நசுக்கப்பட்டது. சில நேரங்களில் பகவான் தன் பக்தர்களுடன் இப்படித் திருவிளையாடல் புரிவார்.

கர்வம், மனிதனிடத்தில் உள்ள மிகப்பெரிய குறை. அது மிகப்பெரிய தீமை. அதனை அழிப்பது மிகக் கடினம். மிகச் சிறந்த மனிதர்களும் அதற்கு இரையாகி விடுகிறார்கள். அது ஒருவனின் சாதனையை அழிக்கிறது. ஒரு அழகிய சித்திரத்தில் ஒரு கறுப்புப் புள்ளி விழுந்தால் அது அந்தச் சித்திரத்தின் அழகையே கெடுத்துவிடுகிறது.

அதுபோல கர்வம் ஒருவனின் வாழ்க்கையையே அழித்துவிடுகிறது. ஒரு மனிதன் எவ்வளவுதான் திறமைசாலியாக இருந்தாலும், அறிவிற் சிறந்து விளங்கினாலும், சாதனைகள் புரிந்திருந்தாலும் அவன் வாழ்க்கையை கர்வம் பாழாக்கி விடுகிறது. பணிவு, சாதனை இவற்றின் மூலம் கர்வத்தை அகற்றுங்கள்.

## 32. நம்பிக்கைக்குக் கிடைத்த பரிசு

ஒரு குளக்கரையில் அரசகுமாரன் ஒருவன் விலையுயர்ந்த நகைகளை அணிந்துகொண்டு நின்றான். அந்த வழியாக கொள்ளைக்காரன் ஒருவன் வந்தான். அவன் வயதானவன். தாடி வைத்திருந்தான். அவன் இதயத்தில் தீய எண்ணமே குடிகொண்டிருந்தது. அவன் திடீரென்று தரையில் விழுந்து பரிதாபமாகக் குரல் கொடுத்தான். அரச பரம்பரையின் பண்புக்குத் தகுந்தவாறு அரச குமாரன் அந்தக் கிழவனுக்கு அருகில் சென்று அவன் உடல்நிலைப்பற்றி விசாரித்தான்.

''எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது. குடிப்பதற்குத் தண்ணீர் கொண்டு வருகிறாயா?''

''இதோ உடனே கொண்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு அரசகுமாரன் குளத்தை நோக்கி நடந்தான்.

''இப்படிச் செல்லாதே குழந்தாய். நீ கொண்டு வந்து தரும் தண்ணீர், நான் எனது வாழ்வில் கடைசியாகக் குடிக்கும் தண்ணீராக இருக்கலாம். நீ உபதேசம் பெறவில்லை. ஆதலால் இறைவனை நீ உணர்ந்து அனுபவிக்கவில்லை. புனித மந்திரத்தை உனக்கு உபதேசம் செய்தால்தான் அது உனக்கு முன்பாக இறைவனைக் கொண்டுவந்து நிறுத்தும்.

அப்போது நீ தரும் தண்ணீர் புனிதமடைந்திருக்கும்; நான் குடிக்க ஏற்றதாக இருக்கும். ஒரு துறவி இறக்கும் தருவாயில் அருந்தத் தக்கதாக அந்தத் தண்ணீர் இருக்கும்'' என்று அந்தக் கிழவன் கூறினான்.

''தயவு செய்து எனக்கு அந்த மந்திரத்தை உபதேசம் செய்யுங்கள்'' என்றான் அரசகுமாரன்.

''மகனே! நீ உள்ளே குளத்திற்குள் சென்று மூழ்கு. ஆனால் நீ குளத்தில் இறங்குவதற்கு முன்பாக இந்த விலை உயர்ந்த நகைகளை கரையில் கழற்றி வைத்துவிட்டுச் செல். மூச்சை அடக்கிக் கொண்டு, தலையை தண்ணீருக்குள் வைத்துக் கொண்டு இரு. நான் கூப்பிடும் வரை அப்படியே இரு. இதற்கிடையில் மிகவும் பயன்தரும் புனித மந்திரத்தை நான் உபதேசம் செய்துகொண்டிருப்பேன்'' என்றான் கொள்ளைக்காரன்.

களங்கமற்ற உள்ளம் கொண்ட அந்தப் பையன், கிழவன் கூறியபடியே செய்தான். நகைகள் கிழவன் காலடியில் கிடந்தன. அதைக் கண்ட அவன் இதயத்தில் மகிழ்ச்சி பொங்கியது. அரசகுமாரன் தண்ணீருக்குள் இறங்கி, மூழ்கியதும் கொள்ளைக்காரன் நகைகளை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டான்.

அரசகுமாரன் உறுதியாக இருந்தான். நேரம் கடந்தது. ஆனால் குருநாதரின் அழைப்பைக் காணோம். குரு கூப்பிடுவதற்கு முன்பாக தண்ணீருக்குமேலே தலையைத் தூக்கக்கூடாது என்று அவன் எண்ணினான். நினைவுடன் போராட்டம் நிகழ்த்தியவன் நினைவு இழந்தான். பிராணவாயுவை சுவாசிப்பதற்குப் பதிலாக அவன் தண்ணீரை மூக்கிற்குள் இழுத்துக்கொண்டான்.

இளம் பக்தனின் உறுதிப்பாடும் சரணுகதி மனப் பான்மையும் நாராயணனின் இதயத்தை நெகிழ வைத்தது. அவர் தெய்வலோகத்தைவிட்டு அரச குமாரன் இருந்த இடத்துக்கு வந்தார்.

குளக்கரையில் நின்றவாறு, கடவுள், அரச குமாரனே அழைத்தார்: ''குழந்தாய், நான் பகவான் நாராயணன். உனது பக்தியைக் கண்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இப்போது தண்ணீரை விட்டு வெளியே வா.''

ஆனுல் சிறுவன் தண்ணீருக்கு மேலே வருவதாக இல்லே. அவன் மனதுக்குள் இவ்வாறு கூறிக்கொண்டான்: ''நீங்கள் யாராக வேண்டுமாஞு லும் இருக்கலாம். ஆனுல் என் குருநாதர் அழைக்கும் வரை நான் தண்ணீரை விட்டு வெளியே வர மாட்டேன்.''

பகவான் நாராயணன் கொள்ளேக்காரன் இருக்குமிடத்துக்கு விரைந்தார். அவர் அந்தப் பையனின் தந்தையாகவும், காவல் துறை அதிகாரி யாகவும் நடித்து, அந்தக் கொள்ளேக்காரனேப் பிடித் தார். நையப்புடைத்தார். ''நீ அழைக்கும்வரை தண்ணீருக்குள்ளேயே இருக்குமாறு என் பையனே நீ நிர்ப்பந்தம் செய்திருக்கிருய். நீ கூப்பிடாவிட்டால் அவன் வெளியே வரமாட்டான். ஓடு. உடனே அவனேக் கூப்பிடு'' என்று கூறிஞர்.

அவர்கள் இருவரும் குளத்துக்குச் சென்றனர். ''குழந்தாய்! வா! இப்போது தண்ணீருக்கு வெளியே வா!'' என்று கொள்ளேக்காரன் கூறிஞன்.

அரசகுமாரன் தலேயைத் தூக்கி வெளியே வந்தான். கொள்ளேக்காரன் இறந்து வீழ்ந்தான்.

அரசகுமாரனின் தீவிர நம்பிக்கை, பக்தி, சரணுகதி ஆகிய நற்குணங்களுக்கு மிகச் சிறந்த பரிசு கிடைத்தது. அவனுக்கு பகவான் நாராயணனை தரிசிக்கும் பேறு கிடைத்தது.

## 33. அருளாட்சி

ஒரு காலத்தில் ஒரு நாட்டின் மன்னர் இறந்து விட்டார். அவர் தனது வாரிசை நியமிக்கவில்லை. இவ்வாறு மன்னர் தனது வாரிசை நியமிக்காமல் இறந்துவிட்டால் அமைச்சர்கள் அரண்மனை யானையை அவிழ்த்து விடுவதும், அந்த யானை யாரைத் தன் தலையில் தூக்கிவைத்துக் கொள்ளுகிறதோ அவனை மறுகேள்வியின்றி மன்னனுக்குவதும் அந்த நாட்டின் வழக்கம்.

அந்த நாட்டின் வழக்கப்படி யானை அவிழ்த்து விடப்பட்டது. அது இறை ஞானம் பெற்ற உண்மைத் துறவி ஒருவரைப் பிடித்தது. அவரை மேளதாளத்துடன் அரசவைக்குக் கொண்டு வந்தனர்.

துறவி குழம்பிய நிலையில் அமைச்சர்களைப் பார்த்து, ''என்ன இது? என்னை ஏன் இங்கு அழைத்து வருகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''ஐயா, தாங்கள் இந்த நாட்டின் மன்னராக முடிசூட்டப்பட வேண்டும். இதுதான் இங்கு வழக்கம். நீங்கள் யானையால் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறீர்கள்.''

''இல்லை, எனக்கு அரச பதவி வேண்டாம். நான் ஒரு துறவி.''

''ஐயா, எங்களை ஏமாற்றிவிடாதீர்கள்'' என்று அமைச்சர்கள் வேண்டினர். துறவி ஆட்சி பீடம் ஏறித்தான் ஆகவேண்டும் என அவர்கள் வற்புறுத்தினர். துறவி தயக்கத்துடன் ஒப்புக்கொண்டார்.

மன்னரான துறவி ராஜாங்கத்தில் நடப்பது எதையும்பற்றிக் கவலைப்படவில்லை. எனினும் எல்லாம் நல்லபடியாக நடந்தது. நாடு வளமாக இருந்தது.

பக்கத்து நாட்டு மன்னன் புதிய மன்னரின் இயல்பு பற்றிக் கேள்விப்பட்டு அந்த நாட்டின்மீது படையெடுக்க இதுவே தருணம் என எண்ணினான்.

வேந்தரான துறவியிடம் அமைச்சர்கள் இதனைத் தெரிவித்தனர்.

''ஏன் அந்த மன்னன் நம்மீது படையெடுக்க விரும்புகிறான். அவனுக்கு நாம் என்ன தீங்கு செய்தோம்?''

''நமக்கு எதுவும் தெரியாது. வெளிப்படையாக எந்தக் காரணமும் தெரியவில்லை. அவனது படை நம் நாட்டுக்குள் நுழைந்து விட்டது. உத்திரவிடுங்கள். நாங்கள் சென்று அவர்களுடன் போரிட்டு விரட்டுகிறோம்.''

''வேண்டாம் வேண்டாம். சும்மா இருங்கள். நாம் ஏன் போரிட வேண்டும்?''

அமைச்சர்களுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. துறவி—வேந்தரின் படை போர்க்களத்துக்கு வராதது கண்ட பகைநாட்டு மன்னன் துறவி—வேந்தரின் சபைக்கு வந்தான். துறவி—வேந்தர் எதுபற்றியும் கவலைப்படாமல் அமர்ந்திருந்தார்.

பகை நாட்டு மன்னன் சபைக்கு வந்து துறவி—வேந்தரைப் பார்த்து, ''அரசே! நான் உங்களுடன் போரிட வந்திருக்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''இதனுல் நீ பெறும் பலன் என்ன ? ஏன் எங்களுடன் போரிட விரும்புகிருய் ?''

''நான் உங்கள் நாட்டைப் பிடிக்க விரும்பு கிறேன்''

''மன்னு ! இதற்காக நீ போரிட வேண்டாம். நீ இந்த அரியணையில் அமர்ந்துகொள்ளலாம். நான் ஒரு துறவி. நான் எப்போதும் துறவிதான். நான் சொல்லுகிறேன். வா, இந்த அரியணையில் அமர்ந்து கொள். இன்று முதல் நீ இந்த நாட்டுக்கும் மன்னன்.''

துறவி, இவ்வாறு சொல்லிவிட்டு அமைதியாக அரியணையிலிருந்து இறங்கி நடந்தார்.

பகைநாட்டு மன்னன் வெட்கித் தலைகுனிந் தான். இந்தத் துறவு வேந்தனின் பாதங்களில் பணிந்து வணங்கினுன். தன்னை மன்னிக்குமாறு வேண்டினுன். தனது ராஜ்யத்தையும் எடுத்துக் கொள்ளுமாறு துறவு வேந்தனிடம் வேண்டினுன். துறவி இரு ராஜ்யங்களுக்கும் மன்னரானுர்.

இருளடைந்த முகத்துடன் அமர்ந்திருந்த அமைச்சர்களின் முகங்களில் ஒளி பரவியது. அவர்கள் துறவியின் ஆற்றலைப் புரிந்துகொண்டனர். நாடு ரத்தவெள்ளத்தில் சிக்காமல் காப்பாற்றப் பட்டது. துறவி, இன்னொரு நாட்டை, கேளாமலேயே பெற்ருர்.

## 34. கடவுளை ஏமாற்ற முடியாது

ராமகிருஷ்ணன் மெட்ரிகுலேஷன் தேர்வுக்காகப் படித்துக் கொண்டிருந்தான். அவன் ஆங்கிலப் பாடத்தில் அதிக கவனம் செலுத்திப் படிக்க வேண்டியிருந்தது. ஆகவே அவன் கணக்குப் பாடத்தை புறக்கணித்து விட்டு ஆங்கிலப் பாடத்தை படிப்பதற்கு நிறைய நேரத்தைச் செலவிட்டான். ஆங்கிலத் தேர்வுக்கு முதல் நாள் கணக்குப் பரீட்சை எழுத வேண்டியிருந்தது. அவன் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தான். கணக்குப் பரீட்சையில் நிச்சயம் தோற்று விடுவோம் என அவன் எண்ணினான்.

பள்ளிக்கு அருகில் ஒரு கோயில் இருக்கிறது. நடக்க முடியாததையும் நடத்திவைக்கக் கூடியவர் இறைவன் என்ற நம்பிக்கை ராமகிருஷ்ணனுக்கு இருந்தது. கணிதத் தேர்வை எழுதச் செல்வதற்கு முன்பாக அவன் கோயிலுக்குச் சென்றான். கடவுளிடம் பிரார்த்தனை செய்தான்; ''கடவுளே! இந்தத் தேர்வில் நான் வெற்றிபெற எனக்கு உதவி செய். நான் திருப்திகரமாக தேர்வு எழுதிவிட்டால் இருபது ரூபாய் அளவுக்கு உனக்குப் பிரசாதம் செய்து வைக்கிறேன்.''

தேர்வில் அதிசயம் நிகழ்ந்தது. கேள்வித்தாளிலுள்ள அத்தனை கேள்விகளும் மிகவும் எளிதானவையாக இருந்தன. அவன் எல்லா கணக்குகளையும் மிகவும் எளிதாக, சரியாகப் போட்டுவிட்டான். அவனுக்கு கிடைக்கப் போகும் வெற்றி சாதாரண வெற்றியல்ல. அது அறிவிற் சிறந்த மாணவனுக்கு கிடைக்கக் கூடிய வெற்றி. அவன் எல்லாக் கணக்குகளையும் சரியாகப் போட்டுவிட்டான். இதில் அவனுக்கு ஐயம் இல்லை. இது மட்டுமல்ல. ஒதுக்கப்

பட்டிருந்த நேரத்தில் பாதி நேரத்திற்குள்ளாகவே அவன் எல்லா கேள்விகளுக்கும் விடை எழுதி விட்டான். அவன் மட்டில்லா மகிழ்ச்சியடைந் தான்.

ராமகிருஷ்ணனுக்கு இன்னும் நிறைய நேரம் இருந்தது. அந்த நேரத்தைப் பயன்படுத்தி பிரசாதத்திற்கான பட்டியலை அவன் தயாரித்தான். பிரசாதத்திற்கான செலவுத் தொகை ரூபாய் இருபது. அவன் பட்டியலை எழுதி முடித்ததும் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. ''ஒன்றி ரண்டு பொருட்கள் தேவையேயில்லை. பணத்தை ஏன் வீணுக்க வேண்டும்?'' என்று அவன் எண்ணி ஞன். தேவையற்ற பொருட்கள் என்று அவன் கருதியவற்றை பிரசாதப் பட்டியலிலிருந்து நீக்கினுன். இப்பொழுது பட்டியல் தொகையின் மதிப்பு ரூபாய் பதினைந்தாகக் குறைந்தது அவன் பட்டியலை மீண்டும் பரிசீலித்தான். பிறகு தனக்குள் பின்வருமாறு எண்ணிஞன்: ''கடவுள் என்ன வியாபாரியா? தேர்வில் வெற்றியைத் தந்துவிட்டு அதற்காக பதினைந்து ரூபாய் பிரசாதத்தையா அவர் எதிர்பார்க்கிருர்? செலவு செய்யும் தொகை யைப் பற்றி நான் கவலைப்படக் கூடாது. பிரசா தத்தை இறைவனுக்குப் படைத்த பிறகு நானும் எனது நண்பர்களும்தான் தின்னப் போகிறோம். ஆகவே இவ்வளவு தொகையை ஏன் செலவு செய்ய வேண்டும்?''

பட்டியல் தொகை ரூபாய் ஐந்தாகக் குறைந் தது. அதனை மீண்டும் பரிசீலனை செய்ததில் ரூபாய் இரண்டாகக் குறைந்தது. கீதை சுலோகம் ஒன்று ராமகிருஷ்ணன் நினைவுக்கு வந்தது. அவன் பின் வருமாறு எண்ணிஞன்; ''இறைவனுக்கு நம்பிக்கை யுடனும் பக்தியுடனும் ஒரு இலை, ஒரு பூ, ஒரு

பழம் அல்லது வெறும் தண்ணீரை அர்ப்பணம் செய்தால்கூட அதனை இறைவன் ஏற்றுக் கொள்வான். கீதையில் இறைவன் இதனை தெரிவித்திருக்கிறாரே. பக்தியும் இதயத்தின் உணர்ச்சியும் தான் முக்கியம். இருபது ரூபாய் அளவுக்கு பிரசாதம் வைத்துப் பெறுகின்ற பலனை இரண்டு இனிய வாழைப் பழங்களைப் படைப்பதின் மூலம் பெற்று விடுவேன்.'' இவ்வாறு அவன் எண்ணிக்கொண்டிருக்கும்போது மணி ஒலித்தது. தேர்வு மேற்பார்வையாளர் அவன் அருகில் வந்து தேர்வுத் தாளைத் தருமாறு கேட்டார். ராமகிருஷ்ணன் மலர்ந்த முகத்துடன் தாள்களை மேற்பார்வையாளர் கையிலே கொடுத்துவிட்டு இல்லம் திரும்பினான். தேர்வில் மகத்தான வெற்றி பெற்றுவிட்டோம் என்ற நம்பிக்கையில் அவன் வீடு திரும்பினான். அவன் கையிலிருந்த தாள்களை கவனித்த அவன் தந்தை, ''என்ன இது? தேர்வுத் தாள்களை வீட்டுக்கு கொண்டுவந்து விட்டாயே!'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

ராமகிருஷ்ணனுக்கு அப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. மணி ஒலித்ததும் பிரசாதப்பட்டியல் உள்ள தாள்களை சேகரித்து நினைவு மறதியாக அவற்றை மேற்பார்வையாளரிடம் கொடுத்துவிட்டு உண்மையான தேர்வுத் தாளை வீட்டுக்குக்கொண்டு வந்துவிட்டான். அவனுக்குத் தேர்வில் கிடைக்கப் போகும் மதிப்பெண் பூஜ்யம்தான்.

ராமகிருஷ்ணன் வேதனையுடன் அழுதான். ''அப்பா! கடவுள் அருளால் நான் கணக்குப் பாடத்தின் கேள்விகளுக்கான விடைகளை அற்புதமாக எழுதி இருந்தேன். ஆனால் எனது தீய மனம் கடவுளை ஏமாற்ற எண்ணியது. பிரசாதத்துக்கான செலவிலிருந்து தப்பித்துக்கொள்ளக் கருதியது. நன்றி கெட்ட செயலுக்கு தத்துவக் கருத்துக்களும் துணை

நிற்பதுபோலத் தோன்றியது. அதன் விளைவு இப்படி ஆயிற்று.''

ராமகிருஷ்ணனின் தந்தை தன் மகனைப் பார்த்து, ''நீ கடவுளை ஏமாற்ற முடியாது'' என்று கூறினார்.

## 35. தரித்திர நாராயணனின் பிரார்த்தனை

தரித்திர நாராயணனைக் காட்டிலும் ஏழை என்று எவருமில்லை. அவனுக்கு பெரிய குடும்பம் உண்டு. சொத்து எதுவுமில்லை. சேமித்து வைத்த பணம் எதுவுமில்லை. இரண்டே இரண்டு பசு மட்டும் உண்டு. அவையும் ஓரளவுக்குத்தான் பால் தரும். அதுவும், ஒரு பவுண்டு தவிடு தின்றால்தான் ஒரு அவுன்ஸ் பால் தரும்.

ஒரு நாள் தரித்திர நாராயணனின் மகன் தவிடு இருந்த தொட்டியை எடுத்துக்கொண்டு வரும் போது தவறி கிணற்றுக்குள் விழுந்துவிட்டான். மகனும் போய்விட்டான். தவிடும் போய்விட்டது. தரித்திர நாராயணன் வாழ்க்கையை வெறுத்தான். வீட்டைவிட்டு ரிஷிகேசம் நோக்கி ஓடினான்.

வழியில் மரத்தடியின் கீழ் ஒரு யோகி தியானம் செய்துகொண்டிருந்தார். அவன் அவரை சந்தித்தான். அவரை வணங்கினான். யோகி கண்ணைத் திறந்து தரித்திர நாராயணனைப் பார்த்தார். அவன் தனது துன்பத்தை விளக்கமாகச் சொன்னான். யோகியின் அருளை வேண்டினான். யோகி, அவனுக்கு குபேர மந்திரத்தை உபதேசம் செய்தார்.

தரித்திர நாராயணன் மந்திரத்தை ஜபம் செய்தான். குபேரன் அவன் முன் தோன்றினார். ''உனக்கு என்ன வேண்டும்? கேள்'' என்றார்.

தரித்திர நாராயணன் உடனே பதிலளித்தான்: ''எனக்கு நான்கு படி தவிடு வேண்டும்''.

குபேரன் அவனது முட்டாள் தனத்தை அறிந்து சிரித்தார். அவனுக்குத் தவிட்டைத் தந்துவிட்டு மறைந்தார். இதைக் கேள்வியுற்ற யோகி, ''என்ன இப்படிப் படுமுட்டாளாக இருக்கிறாய்? செல்வத் துக்கு அதிபதியான தெய்வம் உன் முன்னே காட்சி தந்துள்ளபோது, நீ நான்கு படி தவிடு வேண்டும் என்று கேட்டிருக்கிறாயே! மூவுலகுக்கும் அதிபதி யான இறைவனிடம் பேரானந்தப் பெருவாழ்வை யும் நிலையான அமைதியையும் தரும்படி கேட்காமல் அற்பமான பணத்தையும் உலகியல் முன்னேற்றத் தையும் வேண்டுகின்ற பக்தர்களைப்போல அல்லவா நீயும் கேட்டிருக்கிறாய்!'' என்று தரித்திர நாராயணனைப் பார்த்துக் கூறினார்.

## 36. பொன்முடி

ஒரு சமயம் இமயமலைப் பள்ளத்தாக்கில் ஒரு மகாத்மா வசித்துவந்தார். கங்கை நதிக் கரையில் புல் வேயப்பட்ட சிறு குடில் ஒன்றில் அவர் வாழ்ந்து வந்தார். கிடைத்ததைக்கொண்டு திருப்தியுடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்ந்து வந்தார். இறைவனை தியானிப்பதில் அவர் தனது நேரத்தைச் செலவிட் டார்.

ஒரு நாள் காலையில், இமயமலையைவிட்டு சமவெளிப் பிரதேசத்திற்குச் சென்று ஒவ்வொரு இடமாகச் சென்று ஆண்டியாக வாழவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது.

அவர் சமவெளி பிரதேசத்துக்குச் சென்றார். ஆன்மீக ஒளி பரப்பும் அந்தத் துறவி அனைவரையும்

காந்தம்போல் கவர்ந்தார். அவர் தனது செயல், பேச்சு, உபதேசம் இவற்றின்மூலம் மக்களைத் தன்வயப்படுத்தினார். அவரது அழகிய தோற்றம் அனைவரையும் கவர்ந்தது. அவருக்கு நீளமான தலைமுடியும் அழகிய தாடியும் இருந்தது. அவரது முடி தங்கம்போல இருந்தது. இதனால் அவரை அனைவரும் பொன்முடி என்று அழைத்தனர்.

மக்கள் வாழும் சமவெளிப் பகுதியில் அவர் செல்லும்போது தனது தோற்றப் பொலிவின்மூலம் அவர் அனைவரையும் கவர்ந்தார். ஒருநாள் அவர் ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க்கொண்டிருந்தார். ஒரு பெண், கையில் குழந்தை ஒன்றைச் சுமந்துகொண்டு அவர் அருகில் வந்தாள். அவள் தனது சோகக் கதையை துறவியிடம் கூறினாள். தனது ஆறு குழந்தைகள் ஒன்றன் பின் ஒன்றாக இறந்துவிட்டதாகவும், ஏழாவது குழந்தையும் கடும் காய்ச்சலால் அவதிப்படுவதாகவும் இந்தக் குழந்தையையாவது மகாத்மா காப்பாற்றித்தர வேண்டும் என்றும் அவள் கூறினாள்.

சுவாமி பொன்முடி அந்தப் பெண்ணின் நிலை கண்டு வருந்தினார். அவளுக்கு ஆறுதல் கூறினார். பிறகு அவர் தன் தலையிலிருந்து மயிர் ஒன்றை எடுத்து அந்தப் பெண்ணிடம் கொடுத்து, ''வணக்கத்திற்குரிய பெண்ணே! இந்தத் தலைமுடியை எடுத்துச் செல். இதனை பத்திரமாக பாதுகாத்து வைத்துக் கொள். உனது குழந்தை உடல் நலம் பெறும்,'' என்று கூறினார்.

அந்தப் பெண், துறவியை வணங்கிவிட்டுப் பெருமகிழ்ச்சியுடன் சென்றாள். கடவுளின் கருணையால் குழந்தையின் உடல்நிலை விரைவிலே தேறியது.

இந்தச் செய்தி எங்கும் பரவியது. அந்த மகாத்மா வின் பெயர் எங்கும் பிரபலமாயிற்று. இந்த மகாத்மா தனது மந்திரசக்தி வாய்ந்த தலைமயிர் மூலம் குழந் தைகளின் நோயைக் குணப்படுத்த முடியும் என்ற செய்தி சுற்றுவட்டாரத்திலுள்ள கிராமங்களிலும் நகரங்களிலும் பரவியது. இந்தச் செய்தி காட்டுத் தீபோலப் பரவியது.

அவரை நாடிவரும் பக்தர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாயிற்று. ஆயிரக்கணக்கான பெண்கள் தமது குழந்தைகளுடன் வந்து ஆசீர் வதிக்க வேண்டினர். தேவையறிந்து, மகாத்மாவும் தலைமயிரை எடுத்துத் தந்து குழந்தை நிச்சயமாக குணமடைய வாழ்த்தினர்.

நாட்கள் செல்லச் செல்ல, நோயாளிகளின் எண்ணிக்கை அதிகரித்தது. மகாத்மாவின் மயிர் வேண்டும் என்ற கோரிக்கை தொடர்ந்து எழுப்பப் பட்டு வந்தது. மகாத்மா பொன்முடியால் தன் முடியைக் கொடுத்து முடியவில்லை. அவர் தலை மயிரை எடுத்துக் கொடுக்கும் வரை மக்களால் பொறுமையாக இருக்க முடியவில்லை.

இறுதியில், பொறுமை இழந்த மக்கள் மகாத் மாவின் தலைமயிரைத் தாமாகவே பிடுங்கிக் கொண்டு செல்ல முற்பட்டனர். மகாத்மா வேதனை யால் அலறினர். நோய் குணமாக வேண்டும் என்ற ஆவலில் மகாத்மாவின் தலைமயிரை இழுத்துப் பறித்துக் கொண்டிருந்த மக்கள், மகாத்மா வேதனைப்படுவதைப் பற்றிக் கவலைப்படவில்லை. உடல் முழுவதும் புண்ணாகிய நிலையில் மகாத்மா உயிர் நீத்தார்.

ஒரு ஆன்மீக சாதகர், பெயர், புகழ்நாடி ஓடக்கூடாது. பதவியை விரும்பியும் அவர் போகக்

கூடாது. விண்ணில் பறத்தல், நைட்ரிக் அமிலத்தைக் குடித்தல், தீயில் நடத்தல், பொது மேடைகளில் சமாதிநிலை அடைதல், நாற்பது நாட்களுக்கு மேலாக பூமிக்குள் புதைந்திருத்தல் இவையனைத்தும் ஒரு ஜீவன் முக்தர் அல்லது சித்தரின் உண்மை ஸ்வரூபத்தை வெளிப்படுத்துபவை அல்ல.

ஒரு யோகி என்பவர் அற்புதச் செயல்களை நிகழ்த்துபவர் அல்ல. ஒரு சித்தர் அல்லது மகாத்மாவின் சக்தியை, அவர் இடுப்பில் அணிந்துள்ள துணியைக் கொண்டோ, அவர் பனிபடர்ந்த பகுதியில் வாழ்வதைக் கொண்டோ, அவர் வேப்ப இலையைத் தின்பதைக் கொண்டோ, அவர் காற்றையும், தண்ணீரையும் மட்டும் உட்கொண்டு வாழ்வதைக் கருதியோ அளவிட முடியாது. ஒரு மகாத்மா தான் வாழும் இடத்தைச் சுற்றிலும் எந்த அளவுக்கு அமைதியும் ஆனந்தமும் பரவச் செய்கிறார் என்பதைப் பொறுத்துத்தான் அவரது உண்மையான சக்தி அளவிடப்படும். அவர் மனித குலத்துக்குச் செய்கின்ற நன்மை, அவர் அமைதியுற்று, ஆனந்தம் பெற்று, சினத்தை வென்று வாழும் தன்மை, காமத்தையும் பேராசையையும் புறக்கணித்து, பெயர் புகழை வெறுத்து வாழும் சிறப்பு, வெற்றி தோல்வியில் சமமான மனநிலை கொள்ளல், உற்சாகமாக இருத்தல், கலப்பற்ற பேரானந்தத்தினை அனுபவித்திருத்தல், கவலைகளும் ஏக்கங்களும் இன்றி இருத்தல் ஆகிய நற்பண்புகளைக் கொண்டுதான் ஒரு உண்மையான மகாத்மா மதிக்கப்படுகிறார்.

ஒரு மகாத்மா கற்பக மரம் போன்றவர். அவர் அனைத்தையும் தன் பக்தர்களுக்கு வழங்குகிறார். அவர் சக்தியின் அளவு அவர் கொண்டிருக்கும் பக்தியின் அளவைப் பொறுத்திருக்கிறது. ஒரு மகாத்மா

சிந்தாமணி போன்றவர். ஒருவர் அவரிடம் எதையும் பெறலாம்; அனைத்தும் பெறலாம். தகுதி பெறுங்கள். தூய்மையானவராக ஆகுங்கள். வேண்டாதவற்றிலிருந்து உங்களை விலக்கிக் கொள்ளுங்கள். அப்போது இறையருளால் உங்களுக்கு இறை அனுபவம் கிட்டும்; ஞான ஒளி; மகிழ்ச்சி, வளமை, அமரத்துவம், பேரானந்தம் அனைத்தும் கிடைக்கும்.

மகாத்மாக்களின் அருள் உங்களுக்கு என்றும் கிடைக்கட்டும். அவர்களின் கருணையைப் பெறும் பேறு உங்களுக்குக் கிடைக்கட்டும்.

## 37. உண்மையான துறவறம்

ஒரு புனிதத் தலத்தில் இரண்டு சாதுக்கள் வாழ்ந்து வந்தனர். அவர்களில் ஒருவர், துறவு மேற்கொள்வதற்கு முன்பாக கோடீஸ்வரராக வாழ்ந்தவர். அவர் துறவு மேற்கொண்ட பிறகும் அவரது தேவைகளை அறிந்து உதவி செய்ய அவரது குழந்தைகள் தாமாகவே முன்வந்தனர். ஆகவே அவருக்கு வேலையாட்கள் இருந்தனர். அவருக்கு வேண்டிய சகல வசதிகளும் செய்து தரப்பட்டிருந்தன. மற்றொரு சாது, மிக எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். அவர் பிக்ஷை எடுத்துத்தான் உண்டு வந்தார். அவர் உடுத்தியிருந்த ஆடைகள், ஒரு தண்ணீர் பானை, ஒரு மான்தோல் இவற்றைத் தவிர அவரது உடமை என்று எதுவுமில்லை. அவர் மிகமிக எளிய வாழ்க்கை வாழ்ந்தார்.

அந்த ஏழை சாது, தனது துறவு உணர்ச்சி குறித்துப் பெருமைப்பட்டுக் கொண்டார். அந்த பணக்கார சாதுவைக் குறித்து எள்ளி நகையாடினார். மற்ற மகாத்மாக்கள் அல்லது பக்தர்களை

சந்தித்து அவர் பேசும்போது இந்த பணக்கார சாது வைப்பற்றி இழிவாகப் பேசுவார் :

"முதுமை காரணமாக இல்லறத்தின் பொறுப் புக்களை அவரால் நிறைவேற்ற முடியவில்லை. ஆகவே தான் துறவு மேற்கொள்ளுவதாக பாசாங்கு செய்து இப்படி வாழ்கிறார். அவர் எவ்வளவு ஆடம்பரமாக வாழ்கிறார் பார்த்தீர்களா?"

அகந்தை மற்றும் நிந்தனை என்னும் தீப்பொறி நாளடைவில் கொளுந்துவிட்டு எரியத் துவங்கியது. ஏழை சாது ஒரு நாள் கர்வத்துடன் பணக்கார சாதுவை அணுகி; அவருக்கு துறவு பற்றி உபதேசம் செய்யத் துவங்கினார். "துறவறத்துக்கு மகத்தான சக்தி இருக்கிறது. ஆனால் அது உண்மையானதாக இருக்க வேண்டும். என்னைப்போல துறவறத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

நீங்கள் செல்வத்தையும் குடும்பத்தையும் துறந் திருப்பது உண்மைதான். ஆனால் இந்த ஆடம்பர வாழ்க்கையை நீங்கள் எப்போது துறக்கப்போகிறீர் கள்?"

"நாராயணா! இப்போதே துறந்துவிடுகிறேன். வாருங்கள், நாம் இருவரும் உத்தரகாசிக்குச் செல்லு வோம்" என்று பணக்கார சாது உடனே பதிலளித் தார்.

ஏழை சாது ஆச்சரியம் அடைந்தார். அவரது கர்வமும், பணக்கார சாது மேற்கொண்டுள்ளது போலித் துறவு என்று நிரூபிப்பதில் அவருக்கு இருந்த ஆர்வமும் பணக்கார சாதுவைப் பின் தொடர்ந்து செல்ல வைத்தன. அவர்கள் ஓரிரு மைல் தூரம் சென்றிருப்பார்கள். அவர்கள் நகரத்

தின் எல்லையைக் கடந்து ஒரு கிராமத்தின் அருகே வந்தபோது தண்ணீர்ப் பானையையும், மான் தோலையும் விட்டுவிட்டு வந்தது ஏழை சாதுவின் நினைவுக்கு வந்தது. ''தயவு செய்து சிறிது நேரம் காத்திருங்கள். நான் என் குடிலுக்குச் சென்று எனது தண்ணீர்ப் பானையையும், மான் தோலையும் எடுத்துக்கொண்டு வரவேண்டும்'' என்று ஏழை சாது பணக்கார சாதுவிடம் கூறினார்.

பணக்கார சாது புன்முறுவல் பூத்தார். அதில் அர்த்தம் இருந்தது

எது உண்மைத் துறவு? பற்றுக்களைத் துறப்பது, மாயை மற்றும் 'நான்' 'எனது' என்ற எண்ணத்தை துறப்பது ஆகியவைதான் உண்மையான துறவு ஆகும். ஆடம்பரமாக வாழ்ந்த சாது கணப்பொழுதில் அனைத்தையும் விட்டுவிட ஆயத்தமாக இருந்தார். ஆனால் ஏழை சாது தண்ணீர்ப் பானையிலும் மான் தோலிலும் பற்றுக் கொண்டிருந்தார்.

## 38. உண்மையான கர்ம யோகம்

ஒரு சமயம் ஒரு செருப்பும், ஒரு அல்வாத் துண்டும் ஞானி ஒருவரை அணுகி தமது குறைகளை வெளிப்படுத்தின.

செருப்பு தன் குறையைப் பின்வருமாறு கூறியது: ''வணக்கத்துக்குரிய ஞானியே! எனது பரிதாப நிலையைக் கேளுங்கள். நான் எனது எஜமானனை இரவும் பகலும் அழுக்கு, கல், முள் அனைத்தும் உள்ள பகுதிகளில் சுமந்து செல்லுகிறேன். அவரது எடை காரணமாக நான் இடையறுது கிழிந்துகொண்டிருக்கிறேன். ஆனால் எனது எஜமானர் என்னை வீட்டுக்குள் எடுத்துச் செல்

வதில்லை. அந்த அளவுக்கு அவர் நன்றி கெட்டவராக இருக்கிறார். அவர் என்னை எப்போதும் கதவுக்கு வெளியில் வைத்துவிடுகிறார். இந்த அவமானத்தை என்னால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. எனது எஜமானர் எனது சேவையை சிறிதளவும் பாராட்டுவதில்லை.''

செருப்பின் குறையைக் கேட்ட ஞானி பின்வருமாறு பதிலளித்தார். ''அன்புக்குரிய காலணியே! உண்மையில் நீ கர்ம யோகத்தில் சிறந்து விளங்குகிறாய். உனது சுயநலத்தை தியாகம் செய்துவிட்டு உனது எஜமானனுக்குத் தொண்டு செய்கிறாய். உனது எஜமானனின் பாதங்களில் கல்லும் முள்ளும் படாமல் நீ பாதுகாக்கிறாய். அவரது பாதத்தை நீ தாங்கிக் கொண்டிருக்கிறாய். எல்லாத் துன்பங்களையும் நீ தாங்கிக் கொண்டிருக்கிறாய். உண்மையில் நீ தியாகத்தின் திருவுருவம். உன்னைப் போற்றுகிறேன்! ஆனால் கர்ம யோகத்தின் நுட்பத்தை நீ சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்று நினைக்கிறேன். ஒரு கர்ம யோகி, தனது பணியை தெய்வ வழிபாடு எனக் கருதிச் செய்யவேண்டும். பிரதி பலனை தனக்கென்று எதனையும் எதிர்பார்க்கக் கூடாது. தான் செய்த பணியைப் பிறர் பாராட்ட வேண்டும் என்றுகூட எதிர்பார்க்கக் கூடாது. ஒருவர் பிறருக்குச் செய்யும் தொண்டை இறைவனுக்குச் செய்யும் தொண்டாகவே கருதிச் செய்ய வேண்டும். பிறருக்குச் செய்த தொண்டுக்காக பிறரிடமிருந்து பாராட்டுதலை எதிர்பார்த்திருப்பது மட்டுமின்றி தான் இறைவனுக்கு தொண்டு செய்ய வாய்ப்பளித்தவர்களுக்கு கர்மயோகி நன்றி செலுத்தவேண்டும்.

''நீ உனது எஜமானனின் பாதங்களுக்கு தொண்டு செய்வதாக எண்ணாதே. எஜமான் மூலம்

இறைவனுக்குத் தொண்டு செய்வதாக எண்ணிக் கொள். இறைவன் எல்லா வடிவங்களிலும் இருக்கிருர். எல்லோரும் இறைவனின் வடிவங்களே. மேலும் கௌரவத்தையும், மரியாதையையும் வெறுத்து ஒதுக்குங்கள். ஒரு கர்மயோகி கௌரவத்தையும் அகௌரவத்தையும் சமமாகக் கருதவேண்டும். கர்மயோகி, எந்தச் சூழ்நிலையிலும் மனத்தின் சமநிலையைக் காப்பாற்ற வேண்டும். நீ எல்லாப் பணிகளையும் இறைவன் பணி எனக் கருதிச் செய்தால், பலனை எதிர்பாராமல் செய்தால், பாராட்டை எதிர்பாராமல் செய்தால், மதிப்பையும் அவமதிப்பையும், வேதனையையும், துன்பத்தையும், லாபத்தையும் நஷ்டத்தையும் சமமாகக் கருதினுல், ஐயத்திற்கிடமின்றி நீ கடவுளின் உன்னதமான கருணையையும் நிலையான பேரானந்தத்தையும் பெறலாம்.''

அடுத்தபடியாக அல்வாத் துண்டு ஞானியிடம் தன் குறையை வெளிப்படுத்தியது, ''மதிப்பிற்குரிய ஞானசீலரே! எனது பரிதாப நிலையைக் கேளுங்கள். நான் மிட்டாய்க் கடையில் அழகாக இனிய மனத்துடன் இருக்கிறேன். கடையைக் கடந்து செல்லும் எவரும் என்னைக் காணுமல் செல்லுவதில்லை. மக்கள் என்னைப் பெரிதும் விரும்புகிருர்கள். என் மணத்தை நுகர்ந்த மாத்திரத்தில் அல்லது எனது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் மக்களின் நாக்கில் தண்ணீர் சுரக்கிறது. எந்த விழாவும் விருந்தும் நான் இன்றி நிகழ்வதில்லை. ஆனுல் அந்தோ! மக்கள் என்னை உட்கொண்டதும் என் உருவத்தில் மாற்றம் ஏற்படுகிறது. நான் உட்கொள்ளப்பட்டு பல மணி நேரத்திற்குப் பிறகு நான் மாறுபட்ட உருவத்தில் அழுக்கு எனவும், துர்நாற்றம் உடையது எனவும் கருதி ஒதுக்கித் தள்ளப்படுகிறேன். மக்கள் என்னிடமிருந்து விலகிச் செல்கிருர்கள். அவர்கள் என்னைப்

பார்த்தால் பூமியில் காறி உமிழ்கிறார்கள்; அல்லது மூக்கைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள். இந்த அவமானத்தை என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.''

ஞானி பதிலளித்தார்: ''அன்புக்குரிய அல்வாத் துண்டே! செருப்பைப்போல் நீயும் ஒரு கர்மயோகி. உன்னிடமுள்ள ஊட்டச்சத்தின்மூலம், உன்னை உண்பவர்களுக்கு நீ தொண்டு செய்கிறாய். நீ உன் அழகை இழக்கிறாய். நறுமணத்தை இழக்கிறாய். உன் வடிவத்தையும்கூட இழக்கிறாய். மக்கள் ஊட்டம்பெற்று ஆரோக்கியமாக வாழ நீ இப்படிச் செய்கிறாய். தன்னலமற்ற தொண்டின் திருவுருவமாக நீ விளங்குகிறாய். உனது உடலில் ஏற்படும் மாறுதல் பற்றி நீ கவலைப்படாதே. நீ இந்த உடல் அல்ல. நீ அழகிய அல்வாவும் அல்ல; துர்நாற்றம் வீசும் கழிவுப் பொருளும் அல்ல. நீ தன்னலமற்ற தொண்டு உணர்வின் வடிவம். இந்த உணர்வு நெடுங்காலமாக இருந்து வருகிறது. மகாத்மாக்களுக்கு இது லட்சியம். உடலில் ஏற்படும் மாற்றங்களால் இந்த உணர்வு மாறுவதில்லை. உன்னை உடலோடு சம்பந்தப்படுத்திக் கொள்ளாதே. நீ சாட்சியாக இருந்து அதன் செயல்களை கவனி. உனது ஊட்டச்சத்து மற்றும் ருசியின் மூலம் மக்களுக்குத் தொடர்ந்து தொண்டு செய். தொண்டு செய்கிறபோது உடலோடு தன்னை சம்பந்தப்படுத்திக் கொள்ளாமல், சாட்சியாக இருந்து தொண்டு செய்பவன்தான் கர்மயோகி. இது அமரத்துவம் பெற்ற லட்சியம். இது உனக்குப் பெருமகிழ்ச்சியைத் தரும். துன்பத்திற்கும் தொல்லைக்கும் காரணம் ஒருவர் தன்னை உடலோடு சம்பந்தப்படுத்திக் கொள்ளுவதுதான்.''

இப்போது செருப்பும், அல்வாவும் ஆறுதல் பெற்று தத்தம் இடங்களுக்குச் சென்று ஞானி உபதேசித்தபடி மக்களுக்குத் தொண்டு செய்தன. அதன் பிறகு அவை குறைசொல்ல வில்லை.

## 39. யுக்தியின்மூலம் இறை அனுபவம்

ராம்லால் பாவங்களையே செய்து வாழ்ந்து வந்தான். அவன் செய்த பாவங்கள் எண்ணற்றவை. உண்மையில் அவன் தனது ஆயுட்காலத்தில் ஒரே ஒரு தர்மச் செயலைத்தான் செய்திருக்கிறான். இறை அனுபவம் பெற்ற மகாத்மா ஒருவர் பசியோடு இருந்தபோது அவருக்கு உணவளித்ததுதான் இவன் செய்த ஒரே நல்ல காரியம்.

அவன் இறந்தபோது, அவனை அழைத்துச் செல்ல யமதூதன் வந்தான். ''ராம்லால் நீ மலையளவு பாவம் செய்திருக்கிறாய். அதன் தீய பலனை நீ அனுபவிக்க வேண்டும். நீ ஒரே ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறாய். அதன் நற்பலனையும் நீ அனுபவிக்க வேண்டும். எதை முதலில் அனுபவிக்கப் போகிறாய், நீயே சொல். ஒரு நல்ல காரியத்தின் மூலம் ஏற்பட்ட நற்பலனையா? அல்லது உனது எண்ணற்ற பாவச் செயல்களின்மூலம் கிடைத்துள்ள துன்பத்தையா?''

''நற்செயலுக்கான பலனை முதலில் அனுபவித்து விடுகிறேன். பிறகு நான் செய்த பாவங்களுக்கான பலனை நரகத்தில் அனுபவித்துவிடுகிறேன்.''

யமதூதன், ராம்லாலை ஸ்வர்க்கத்துக்கு அழைத்துச் சென்றான். ராம்லால் விரும்பியது அனைத்தையும் அங்கு பெறலாம். அவன் செய்த

ஒரு நற்செயல் மகத்தானது. அதற்காக அவன் மூன்று உலகத்துக்கும் சென்று வரலாம். அவன் வைகுண்டத்துக்கு அல்லது கைலாசத்துக்குச் செல்லலாம். கடவுளை தரிசிக்கலாம். அல்லது அவன் ஸ்வர்க்கத்தில் கிடைக்கும் அனைத்து இன்பங்களையும் அனுபவிக்கலாம்.

ராம்லால் மிகவும் புத்திசாலி. அவன் தனக்கு இதன் மூலம் நல்ல வாய்ப்புக் கிடைத்திருப்பதாக உணர்ந்தான். அவன் தேவேந்திரன் என்னும் தெய்வீகத் தன்மை உடைய குதிரையின் மீது அமர்ந்து மூன்று உலகங்களிலும் சுற்றுப்பயணம் செய்தான். இறுதியாக ஸ்வர்க்கத்தில் அவன் இருக்க வேண்டிய நாட்கள் முடிவடையும் நேரத்தில் அவன் வைகுண்டத்துக்குச் சென்றான். அங்கு கடவுளையே தரிசனம் செய்தான்.

அவன் வைகுண்டத்திலிருந்து வெளியே வரும் பொழுது நரகத்தின் தூதர்கள் அவனை அணுகி, ''ராம்லால், உனது நற்பலனை நீ அனுபவித்துவிட்டாய். இப்பொழுது நரகத்துக்கு வா. தீய செயல்களுக்கான தீய பலனை அனுபவிக்க வா.'' என்று கூறினர்.

ராம்லால் வியப்புடன் பதிலளித்தான். ''நாராயணா! என்ன இது? இறைவனை தரிசித்த எந்த மனிதனையாவது நரகத்துக்குக் கொண்டு செல்ல முடியுமா?''

நாராயணனின் தூதர்கள் உடனே தோன்றினர். நரகத்தின் தூதர்களை விரட்டினர். ராம்லால் இறைவனுடைய திருவடிகளில் நிலைத்து வாழும் பேறு பெற்றான்.

## 40. கீரியின் விவேகம்

விவேகமதி, கலிங்க நாட்டில் அறநெறிப்படி வாழ்ந்து வந்த இளைஞன். அவன் தனது குரு நாதருடன் வாழ்ந்து வந்தான். அவருக்குத் தொண்டு செய்து வந்தான். கல்வி பயின்று வேதத்தின் ஞானத்தைப் பெற்றான்.

படிப்பை முடித்து குருகுலத்திலிருந்து புறப்பட விவேகமதி ஆயத்தமானன். அவன் தனது குரு நாதரை அணுகி, ''குருதேவா! இந்தத் தூய்மையான, புனிதமான இடத்தில் தங்களுடன் வாழ்ந்து வந்ததால் உலகத்தின் கவர்ச்சி, ஆபத்து இவற்றில் அகப்படாமல் நான் தப்பித்துக்கொண்டேன். நான் இப்போது இந்தப் பாதுகாப்பான இடத்தைவிட்டுச் செல்லவேண்டும். இனி சச்சரவுகளும் லோகாயதப் போராட்டங்களும் நிறைந்த இடத்தில் நான் வாழ வேண்டும். லோகாயதம் மற்றும் மாயையிலிருந்து என்னைக் காப்பாற்றிக்கொள்ள வழிகாட்டுங்கள்.

அறிவிற் சிறந்த குருநாதர் சிறிதுநேரம் யோசித்தார். பிறகு ''வா! நீ உன்னைக் காத்துக்கொள்ள சரியான வழியைக் காட்டுகிறேன். என்னைப் பின் தொடர்ந்து வா'' என்றார்.

இப்படிச் சொல்லிவிட்டு குருநாதர் புறப்பட்டார். ஆவலுடன் விவேகமதியும் அவரைப் பின் தொடர்ந்து சென்றான். அடர்ந்த காட்டின் நடுவில் இருந்த சிறு நிலப்பகுதிக்கு வந்தனர். இங்கு ஒரு துணிச்சலான கீரி வாழ்ந்து வந்தது. அதன் பெயர் 'சுகவசீ'. நன்கு தன்னைக் காத்துக்கொள்ளும் தன்மை அதற்கு இருந்ததால் அதற்கு இப்பெயர் வந்தது. அந்தக் கீரி, மிகவும் சுறுசுறுப்பானது. எப்போதும் விழிப்புடன் இருந்தது. ஏனெனில் அந்தக் காட்டில் கொடிய விஷப் பாம்புகள் வசித்து

வந்தன. இந்தக் கீரி தினசரி தன் எதிரிகளை எதிர்த்துப் போரிட வேண்டியிருந்தது.

குருவும், விவேகமதியும் காட்டின் மத்தியில் உள்ள வெட்டவெளிக்கு வந்தபோது அங்கே கடும் போர் நிகழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டனர். கீரி, பாம்புடன் போரிட்டுக்கொண்டிருந்தது. பாம்பின் மீது வைத்த பார்வையை அது அகற்றவில்லை. கீரி, பாம்பின்மீது பாய்கின்ற ஒவ்வொரு நேரத்திலும் பாம்பு கீரியைத் தன் வளையத்துக்குள் பிடித்துக் கொள்ள முயற்சித்தது. கீரி தன் சுறுசுறுப்பின் காரணமாக பாம்பின் பிடிக்குள் அகப்படவில்லை. ஆனால் சில சமயங்களில் அதை பாம்பு கடித்து விட்டது. போர் தொடர்ந்து நிகழ்ந்தது. கீரி இடையிடையே அடர்ந்த காட்டுக்குள் சென்று திரும்பியது. அது திரும்பி வரும் ஒவ்வொரு நேரமும் அதன் உடம்பில் காயம் பட்டதற்கான அறிகுறி எதுவும் தென்படவில்லை ஒவ்வொரு முறையும் அது புத்துணர்வுடனும், அதிக வேகத்துடனும் வந்தது. பாம்பு தன் வேகத்தை படிப்படியாக இழந்தாலும், கீரி இறுதிவரை களைப்படையவே இல்லை. இறுதியில் கீரி பாம்பைக் கொன்றது; வெற்றி பெற்றது.

நிகழ்ந்தது அனைத்தையும் அமைதியாகவும் ஆச்சரியத்துடனும் பார்த்துக்கொண்டிருந்த விவேகமதி, தன் குருநாதரை நோக்கினான். குருநாதரும் விவேகமதியைப் பார்த்து, ''விவேகமதி! கீரியும் பாம்பும் சண்டையிட்டதைக் கவனித்தாயா? உலகியல் வாழ்க்கை என்னும் பாம்புடன் மனிதன் இந்த அளவுக்குப் போரிட வேண்டியிருக்கிறது. கீரியைப்போல மனிதனும் எப்போதும் விழிப்புடன் இருக்கவேண்டும். இல்லையென்றால் உலகியல் வாழ்க்கை என்னும் வளையம் அவனைக் கவ்விக் கொள்ளும்.

''விவேகம் மற்றும் சிந்தனை என்னும் இரு கண்களையும் அகல விழித்துப் பார்த்துக்கொண்டிரு. உலகியல் வாழ்வின் விஷம் சில நேரங்களில் உன்னை பாதிக்கும். கீரி காட்டுக்குள் மறைந்து சஞ்சீவி மூலிகையின் உதவியுடன் புத்துணர்வு பெற்று மீண்டும் போரிட வந்ததுபோல நீயும் அவ்வப்போது உலகியல் வாழ்க்கைச் சூழ்நிலையிலிருந்து ஒதுங்கியிருந்து சத்சங்கம், சாதனை, தனித்திருத்தல், மௌன தியானம் ஆகியவற்றில் ஈடுபடு. சத்சங்கமும், தனித்திருத்தலும் உன்னிடத்திலிருந்து உலகியல் வாழ்க்கை என்னும் விஷத்தை அகற்றும் அற்புத மூலிகைகள். அவற்றின் உதவியுடன் நீ பாதுகாப்பாக இருக்க முடியும். விவேகமதி! துணிவுடன் புறப்படு. அச்சம் கொள்ளாதே.''

விவேகமதி இதைக் கேட்டுத் தெளிவுபெற்றான். குருநாதரை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான். உலக பந்தங்களுக்கு வசப்படாமல், அவன் உதாரணமான இல்லறவாசியாக வாழ்ந்தான். உலகில் உன்னதமான பற்றற்ற வாழ்க்கை வாழ்ந்த பின் அவன் துறவு மேற்கொண்டு மிக எளிய வாழ்க்கை வாழ்ந்து முக்தி அடைந்தான்.

அவ்வப்போது தனித்திருத்தல், சாதனை, சத்சங்கம் ஆகியவை உலகியல் வாழ்வில் சிக்கித் தவிக்கும் சாதகர்களுக்கு புதுவாழ்வு தரும் மூலிகைகளாக விளங்குகின்றன. அவர்கள் இவற்றை ஒருபோதும் புறக்கணிக்காமல், பாதுகாப்பாக வாழ்ந்திருக்கட்டும்.

## 41. தோடகாசார்யர்

ஸ்ரீ சங்கராசார்யர் அத்வைத தத்துவத்தைப் பரப்பியவர். அவருக்கு நான்கு சீடர்கள் இருந்

தனர். அவர்கள், பத்மபாதர், ஹஸ்தாமலகர், சுரேஷ்வராசார்யர், தோடகாசார்யர் ஆகியோர் ஆவர்.

தோடகர், மந்த புத்தி உடைய மாணவர். ஆனால் ஸ்ரீ சங்கரரிடத்தில் ஆழ்ந்த பக்தியுடையவர். அவருக்கு எல்லா வகையிலும் தொண்டு செய்தார்.

ஒருநாள் பிரம்ம சூத்ர வகுப்பு ஆரம்பிக்கப்பட விருந்தது. தோடகர் குருநாதரின் துணிகளைத் துவைக்க ஆற்றுக்குச் சென்றிருந்தார். அவர் சிறிது அதிகநேரம் எடுத்துக்கொண்டார். மற்ற சீடர்கள் தோடகர் வருவதற்கு முன்பாகவே வகுப்பைத் துவக்குமாறு ஸ்ரீ சங்கராசார்யரிடம் கூறினர்.

அவர்கள் ஸ்ரீ சங்கராசார்யரை நோக்கி, பின் வருமாறு கூறினர்: ''தோடகாசார்யர் மந்தபுத்தி உடைய மாணவர். பிரம்ம சூத்ரத்தை அவரால் புரிந்துகொள்ள முடியாது. நாம் வகுப்பை ஆரம் பிக்கலாம். பிரம்ம சூத்ரத்தின் ஆழமான, நுட்ப மான கருத்துக்களை அவரால் புரிந்துகொள்ள முடியாது. ஆதலால் அவருக்காகக் காத்திருப்பதில் பயனில்லை.''

தற்பெருமை கொள்ளும் இந்தச் சீடர்களுக்குத் தக்க பாடம் கற்பிக்க ஸ்ரீ சங்கராசார்யர் விரும் பினார். அவர் உடனே தோடகாசார்யருக்குத் தன் அருளாசியை வழங்கினார். தோடகாசார்யர் ஞான ஒளியினைப் பெற்றார். அவர் தனது குருநாதரைப் போற்றிப் புகழ்ந்து பாடிக்கொண்டே வகுப்புக்கு வந்தார்: ''அனைத்து சாஸ்திரங்களின் ஞான ஒளி யாகிய அமுதக் கடலே! மகத்தான உபநிடதங் களின் பொருளை தாங்கள் எனக்கு உணர்த்தியிருக் கிறீர்கள். தங்களின் புனித தாமரைத் திருவடிகளை

எனது இதயத்தில் தியானம் செய்கிறேன். எனது குருநாதராகிய சங்கரரே! நீங்களே எனது புகலிடம். ஜீவன் மற்றும் ஈஸ்வரனின் தன்மையை எனக்கு விளக்கி உணர்த்திய தங்களை தியானிக்கிறேன். சங்கரரே! தாங்கள்தான் எனது தெய்வம். ஆகவே நான் பெருமகிழ்ச்சியடைகிறேன். சித்தப்பிரமை என்னும் தண்ணீர் நிறைந்திருந்த சமுத்திரத்தை நீங்கள் வற்றச் செய்துவிட்டீர்கள். எனது ஆன்மீக வழிகாட்டியாகிய சங்கரரே! நீண்ட காலமாக நான் செய்துவந்த நற்செயல்களின் விளைவாகத் தங்கள் தாமரைத் திருவடிகளை தரிசிக்கும் ஆவலைப் பெற்றிருக்கிறேன். சங்கரரே! எனது ஆன்மீக ஆசார்யரே! பணிவு மிக்க இந்த சீடனைக் காப்பாற்றுங்கள்.''

பத்மபாதரும் மற்ற சீடர்களும் ஆச்சரியமடைந்தனர். அவர்களின் அகந்தை உடனே அகன்றது. குருவுக்குத் தொண்டு செய்வது பெரும்பேறு ஆகும். குருபக்தி இதயத்தை தூய்மைப்படுத்துகிறது. ஒரு சாதகன் உலகியல் வாழ்வு என்னும் பயங்கரமான கடலைக் கடக்க குருநாதரின் கருணை மட்டுமே உதவியாக இருக்கிறது. குருவே பிரம்மா. குருவே விஷ்ணு. குருவே சிவன். குருவே பிரம்மம்.

குருவின் புகழ் வாழ்க! பிரம்ம வித்யா குருநாதர்களின் அருளாசிகள் உங்கள் அனைவருக்கும் கிடைக்கட்டும்.

## 42. துர்புத்தி

துர்புத்தி என்பவன் கயா நகரத்தில் வாழ்ந்து வந்த நாத்திகன். பகவான் புத்தரின் காலத்தில் அவன் வாழ்ந்து வந்தான்.

துர்புத்தி மிகவும் கொடியவன். நல்லவர்களை அவன் சித்திரவதை செய்துவந்தான். அவன் அவர்களை கொள்ளையடித்தான். அவர்களை அச்சுறுத்தினன். அவன் மிகவும் பயங்கரமான ஆசாமி. அவன் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே குழந்தைகளும், பெண்களும் பயந்து நடுங்குவார்கள். அவன் மனித வடிவத்தில் இருந்த பேய்.

ஒருநாள் பகவான் புத்தர் தியானத்தில் இருந்த போது துர்புத்தி அவரை அணுகினன். புத்தர் கண்களைத் திறந்து பார்த்தபோது, தன் எதிரில் துர்புத்தி நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தார்.

பகவான் புத்தர் துர்புத்தியை வாழ்த்தி வரவேற்ருர். பதிலுக்கு துர்புத்தி புத்தர்மீது வசை மொழிகளை அள்ளி வீசினன். புத்தரை இழிவாகப் பேசும்போது அவன் மிகவும் ஆட்சேபகரமான வார்த்தைகளைப் பயன்படுத்தினன்.

அவன் புத்தரைப் பார்த்து பின்வருமாறு கூறினன்: ''ஏ முட்டாளே! நீ ஒரு வேஷதாரி. நீ ஒரு ஏமாற்றுக்காரன். நீ கபடமாக நடிக்கிருய். நீ துறவியின் வேடந்தாங்கியுள்ள போக்கிரி. இந்த இடத்தைவிட்டு அகன்று செல். நாளை நீ இங்கு வந்தால் உன்னைக் கொன்றுவிடுவேன். நகரம் முழுவதும் உன்னைப் போன்ற பிச்சைக்காரர்களும் வேஷதாரிகளும் பெருகிவிட்டனர். அவர்கள் நாட்டையே கெடுத்துவிட்டனர். நீ சோம்பேறி. நீ சமுதாயத்துக்கு ஒரு சுமை. நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடும் இல்லறவாசிகளின் சொத்துக்களை நீ கரைத்துவிடுகிருய்.''

புத்தர் இவற்றைக் கேட்டுவிட்டு அமைதியாக இருந்தார். அடுத்த நாளும் துர்புத்தி வந்தான்.

புத்தரை இகழ்ந்து பேசினான். இம்முறை மேலும் ஆபாசமாகவும், வேகமாகவும் பேசினான். ஆயினும் கூட பகவான் புத்தர் அமைதியாக இருந்தார். ஒரு மாதம் இவ்வாறு நிகழ்ந்தது. நாட்கள் செல்லச் செல்ல துர்புத்தி மென்மேலும் ஆவேசம் அடைந்தான்.

இறுதியாக ஒருநாள் துர்புத்தி, புத்தரைப் பார்த்து, ''ஏனய்யா! நீ என்ன செவிடனா! நான் சொல்லுவது உன் காதில் விழவில்லையா? நான் எவ்வளவுதான் இழிவாகப் பேசினாலும் நீ கருங் கல்லைப்போல அமர்ந்திருக்கிறாயே! நீ வெட்கங் கெட்ட ஜன்மம். என்ன மனிதனய்யா நீ!'' என்று கூறினான்.

சாந்தம் தவழும் முகத்துடன் புத்தர் பின்வருமாறு கூறினார்: ''நீ பேசியதையெல்லாம் நான் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். நான் செவிடன் அல்ல. உனது அவமதிப்பு எதனையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை. நான் அவற்றை ஏற்றுக்கொள்ள வில்லையென்றால் அவை யாரைச்சேரும்? நீ எனக்கு சில பொருட்களை பரிசாக அளித்தாய். ஆனால் அவற்றை நான் ஏற்றுக்கொள்ள மறுக்கிறேன்''.

இவ்வாறு சொல்லிவிட்டு புத்தர் மௌனமாக இருந்தார்.

துறவியின் சாந்தம், துர்புத்தியின் மனதை உடனே மாற்றியது. அவன் முற்றிலும் மாறிவிட்டான். அவன் புத்தரின் திருவடிகளில் வீழ்ந்து கதறினான்: பகவானே! என்னை மன்னித்துவிடுங்கள். நான் கொடியவன். நான் உங்களுக்குத் தவறிழைத்துவிட்டேன். தூய்மையான, தெய்வத் துக்குச் சமமான உங்களுக்குத் தவறிழைத்துவிட்டேன். எவ்வளவு பெரிய குற்றத்தை நான் செய்து

விட்டேன்! என்னை மன்னிக்குமாறு மீண்டும் மீண்டும் வேண்டுகிறேன். தாங்கள் கருணைக் கடல். என்னை மன்னித்துவிடுங்கள்.''

பிறகு துர்புத்தி, பகவான் புத்தரின் சீடனாக ஆனான்.

நண்பர்களே! பொறுமையை புத்தரிடமிருந்து கற்றுக்கொள்ளுங்கள். உதாரகுணம் உடையவராக இருங்கள். பெருந்தன்மை உடையவராக இருங்கள். இகழ்ச்சிக்கும் புகழ்ச்சிக்கும் அப்பாற்பட்டவராக இருங்கள். நீங்கள் மிகவும் பலவீனமாக இருக்கிறீர்கள். உங்கள் சொந்த சகோதரர் உங்களுக்கு இழைக்கும் அவமானத்தைக்கூட உங்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. யாரேனும் ஒருவர் கடிந்து பேசினால் நீங்கள் நிலைகுலைந்துபோகிறீர்கள். நீங்கள் ஆவேசம் அடைகிறீர்கள். இகழ்ச்சி எது? புகழ்ச்சி எது? அவை காற்று மண்டலத்தில் ஏற்படும் அதிர்வுகள். அவற்றிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காதீர்கள். இன்பத்திலும் துன்பத்திலும், வெற்றியிலும் தோல்வியிலும், இகழ்ச்சியிலும், புகழ்ச்சியிலும், வெப்பத்திலும் குளிர்ச்சியிலும் சமமான மன நிலையைப் பெற்றிருங்கள். அவமானத்தையும் வேதனையையும் பொறுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் சக்கரவர்த்திகளுக்கெல்லாம் சக்கரவர்த்தியாக ஆவீர்கள்.

கோபத்தையும், பொறுமையின்மையையும் வெற்றிகொள்ள கடவுள் உங்களுக்கு ஆன்மீக பலத்தை அளிக்கட்டும்.

## 43. நன்றிகெட்ட நாய்

ஒரு அடர்ந்த காட்டில் துறவி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் கடுமையான விரதங்களைக் கடைப்

பிடித்து வந்தார். அவர் பழங்களையும், கிழங்குகளையும் உட்கொண்டு வாழ்ந்தார். அவர் புலனடக்கத்துடன் வாழ்ந்தார். உண்ணாவிரதங்களின் மூலம் அவர் தனது இதயத்தைத் தூய்மைப் படுத்திக் கொண்டார். அவர் எல்லாப் பிராணிகளிடத்திலும் தீவிர அன்பு கொண்டிருந்தார். அவர் தனது இருப்பிடத்தில் அமர்ந்ததும் அவர் கருணை மற்றும் நன்னடத்தையின் காரணமாக எல்லா மிருகங்களும் அன்புடன் அவருக்கு அருகே வரும்.

அந்த ரிஷியிடம் கொடிய விலங்குகளாகிய சிங்கங்கள், புலிகள், சிறுத்தைகள், யானைகள் ஆகியவை வரும். அவை அனைத்தும் அவரது சீடர்கள் போலவும், அடிமைகள் போலவும் இருந்து அவருக்குப் பிடித்தமானவற்றையே செய்யும்.

ஒரு நாய், துறவியிடம் நிரந்தரமாக வாழ்ந்து வந்தது. அது அந்தத் துறவியிடம் அன்பாக இருந்து வந்தது. அதுவும் பழங்களையும், கிழங்குகளையும் உட்கொண்டு வாழ்ந்தது. அது மேற்கொண்ட விரதங்களின் காரணமாக மிகவும் பலவீனமடைந்தது. இளைத்துப் போயிற்று.

ஒருநாள் பலம் வாய்ந்த சிறுத்தையொன்று பசியுடன் வந்தது. அந்த நாயை தின்பதற்காக அதன்மீது பாய்ந்தது. நாய் ரிஷியிடம் ஓடியது; தன்னைப் பாதுகாக்குமாறு வேண்டியது. நாய்மீது இரக்கப்பட்ட ரிஷி அதை சிறுத்தையாக மாற்றினார். நாயைக் கொல்ல வந்த சிறுத்தையைக் காட்டிலும் அதிக பலத்தை சிறுத்தையாக மாறிய நாய்க்கு அளித்தார். சிறுத்தை பெரும் ஏமாற்றத்துடன் திரும்பிச் சென்றது.

சிறிது காலத்திற்கு பிறகு சிறுத்தையாக மாறியிருந்த நாயை தாக்குவதற்கு ஒரு பயங்கரமான புலி வந்தது. சிறுத்தை மீண்டும் ரிஷியிடம் ஓடி தன்னைப் பாதுகாக்குமாறு வேண்டியது. இந்த முறை ரிஷி அந்த சிறுத்தையை சக்தி மிக்க ஒரு புலியாக மாற்றினார். தாக்க வந்த புலி, முன்பு வந்த சிறுத்தையைப்போல, பெருத்த ஏமாற்றத்துடன் திரும்பியது. புலியாக மாறிய நாய் பழங்களையும், கிழங்குகளையும் உண்ணும் தனது பழக்கத்தைக் கைவிட்டது. அது மிருகங்களின் அரசனைப் போல காட்டில் வாழும் மற்ற மிருகங்களை அடித்துத் தின்ன ஆரம்பித்தது.

இப்பொழுது ஒரு பெரிய யானை, புலியாக மாறிய நாயைக் கொல்ல வந்தது. அந்தப் புலி மீண்டும் ரிஷியிடம் ஓடி தன்னைப் பாதுகாக்குமாறு வேண்டியது. ரிஷி உண்மையான யானையைவிட சக்தி மிக்க ஒரு யானையாக இந்தப் புலியை மாற்றினார். உண்மையான யானை அச்சத்துடன் திரும்பியது. ஒரு நாள் யானையைத் தாக்குவதற்கு ஒரு சிங்கம் வந்தது. மீண்டும் அந்த யானை ரிஷியிடம் சென்று தன்னைப் பாதுகாக்குமாறு வேண்டியது. ரிஷியும் முன்பு நாயாக இருந்த யானையை அதன் எதிரியைவிட பலம் வாய்ந்த சிங்கமாக மாற்றினார். தன் இனத்தைச் சேர்ந்த பலம் வாய்ந்த மிருகத்தைக் கண்ட சிங்கம், அஞ்சி ஓடியது. சிறிது காலத்திற்கு பிறகு ஷரபா என்னும் கொடிய மிருகம் எட்டுக் கால்களுடனும், நெற்றியில் கண்களுடனும் வந்தது. அது இப்போது சிங்கமாக மாறியிருந்த நாயைக் கொல்ல வந்தது. ரிஷி இப்போது சிங்கத்தின் உருவிலிருந்த நாயின் மீது இரக்கப்பட்டு அதனை மிகவும் சக்தி மிக்க ஷரபாவாக மாற்றினார். ரிஷிக்கு அருகிலுள்ள ஷரபா தன்னைவிட சக்திமிக்கதாக இருப்பதைக்

கண்ட கொடிய ஷரபா அஞ்சி ஓட்டமெடுத்து காட்டுக்குள் மறைந்தது. இப்பொழுது ஷரபா எந்தவித ஆபத்துமின்றி வாழ்ந்தது. ஆனுல் மற்ற மிருகங்கள் அனைத்தும் அச்சத்தால் நடுங்கிக் கொண்டு இருந்தன.

ஒருநாள் துறவியின் கருணையால் ஷரபா மிருகமாக மாறியுள்ள அந்த நாய் நன்றிகெட்டதனமாக, அந்த ரிஷியின் ரத்தத்தையே ருசி பார்க்க எண்ணியது. ரிஷி தனது ஆன்மீக நோக்கு, மற்றும் துறவின் சக்தியின் மூலம் இதனைப் புரிந்து கொண்டார்.

ரிஷி அந்த நாயைப் பார்த்து பின்வருமாறு கூறினுர்: ''ஏ நாயே! உன்னை ஆபத்திலிருந்து காப்பதற்காக பல்வேறு உருவங்களில் மாற்றினேன். உன்னிடத்தில் நான் மகத்தான அன்பு கொண்டிருந்தேன். இழிவான காரியத்தில் ஈடுபடும் பாவியே! நீ இப்பொழுது என்னையே கொல்ல விரும்புகிருய். நான் உனக்கு எந்த துரோகமும் செய்யவில்லை. நீ மீண்டும் உனது இனத்தின் உருவத்தைப் பெற்று மீண்டும் நாயாகவே வாழக் கடவாய்.''

சிறுமதி படைத்த, தீய, முட்டாளான மிருகம் மீண்டும் தனது முந்தைய வடிவத்தைப் பெற்று நாயாக மாறிற்று.

இந்த உலகில் நன்றியுடன் வாழ்பவர்களை மிகவும் அரிதாகவே காண்கிருேம். உங்களுக்குப் பிறர் செய்த நன்மைகளை மறப்பது முறையல்ல. ஒருவர் உங்களுக்கு நன்மை செய்திருந்தால், நீங்கள் துன்பப்படுகிற வேளையில் உங்களுக்கு ஆதரவாக இருந்து ஒருவர் தொண்டு செய்திருந்தால் அவர்

செய்த நன்றியை நீங்கள் ஒருபோதும் மறக்கக் கூடாது. நீங்கள் எப்பொழுதும் நன்றி மறவாதவராக இருக்கவேண்டும்.

## 44. கற்பின் சக்தி

ஒரு சமயம் கௌசிகன் என்ற பிராமணர் வாழ்ந்து வந்தார். அவர் வேதங்களை மிகவும் ஆழ்ந்து படித்திருந்தார். அவரிடம் பக்திச் செல்வம் நிறைந்திருந்தது. அவரிடம் நல்ல பழக்க வழக்கங்கள் இருந்தன.

ஒருநாள் கௌசிகன் ஒரு மரத்தினடியிலமர்ந்து வேதபாராயணம் செய்துகொண்டிருந்தார். அந்த மரத்தின்மீது அமர்ந்திருந்த ஒரு கொக்கு அவர்மீது எச்சமிட்டது. அந்த பிராமணர் கடுங்கோபமடைந்தார். அந்த கொக்கை முறைத்துப் பார்த்தார். இவரது கோபத்தின் சக்தியால் அந்த கொக்கு எரிந்து விழுந்தது.

இப்பொழுது கௌசிகர் பக்கத்திலுள்ள கிராமத்திற்கு பிக்ஷை எடுப்பதற்குச் சென்றார். ஒரு வீட்டின் முன்பு நின்று பிக்ஷை அளிக்குமாறு வேண்டினார். அந்த வீட்டுப் பெண், ''சிறிது நேரம் நில்லுங்கள். சீக்கிரமே உங்களுக்கு பிக்ஷை அளிக்கிறேன்,'' என்று கூறினாள்.

பிக்ஷை அளிப்பதற்காக பாத்திரத்தைக் கழுவிக் கொண்டிருந்தபோது அவளது கணவன் கடும் பசியுடன் வீட்டுக்கு வந்தான்.

கற்புக்கரசியான அந்தப் பெண், தன் கணவனுக்கு உணவும், தண்ணீரும் அளித்துவிட்டு அவனது தேவையனைத்தையும் கவனிக்க அருகிலேயே நின்றாள். தேவையின்றி கௌசிகரை அவள் காத்திருக்க வைத்துவிட்டாள்.

அந்தப் பெண் கணவனிடத்தில் மிகவும் பக்தி உடையவள். தினசரி தன் கணவன் உணவு உட்கொண்ட பின்னர் மீதம் வைத்திருக்கும் உணவையே அவள் உண்பாள். அவள் தனது கணவனை தெய்வமாகவே மதித்தாள். அவள் எப்போதும் தனது தெய்வத்துக்குத் தொண்டு செய்து வந்தாள். அவள் நற்பண்புகளுடையவள். அவளிடத்தில் நல்ல பழக்க வழக்கங்கள் இருந்தன. அவள் தனது உறவினர்களுக்கு மிகவும் உதவியாக இருந்தாள்.

அவள் மிகவும் பக்தி உடையவள். கணவனுக்கு நன்மை தருபவற்றை கவனிப்பதில் அவள் கண்ணும் கருத்துமாய் இருந்தாள். தினமும் விருந்தினர், மாமனார், மாமியார், வேலையாட்கள் ஆகியோருக்கும் தொண்டு செய்துவந்தாள்.

கணவனுக்குத் தொண்டு செய்த பின்னர், அந்தப் பெண், பிராமணருக்கு பிக்ஷை அளிக்க வந்தாள். கௌசிகர் கடுங்கோபம் அடைந்தார்.

''ஞானசீலரே, என்னை மன்னித்துவிடுங்கள். எனக்கு எனது கணவன்தான் முதற்கடவுள். அவர் மிகவும் பசியுடனும் களைப்புடனும் இருந்தார். ஆதலால் அவரை முதலில் கவனிக்கவேண்டியதாயிற்று,'' என்று அந்தப் பெண் கூறினாள்.

''பிராமணர்களை நீ உயர்ந்தவர்களாகக் கருதவில்லை. நீ உனது கணவனையே அனைவரிலும் உயர்ந்தவனாகக் கருதுகிறாய். இல்வாழ்க்கை நடத்தும் நீ, பிராமணர்களை அவமதிக்கிறாய். இந்திரன் கூட அவர்களைப் பணிந்து வணங்கியிருக்கிறான். பிராமணர்கள் நெருப்பைப் போன்றவர்கள் என்றும் அவர்கள் உலகம் முழுவதையும் எரித்துச் சாம்பலாக்கிவிடுவார்கள் என்றும் உனது பெரியோர்

களிடமிருந்து நீ கேள்விப்பட்டதில்லையா ?'' என்று கௌசிகர் கூறினர்.

''பிராமணரே! துறவின் சிறப்பைப் பெற்றிருப் பவரே, என்னையும் கொக்கு என்று நினைத்தீர்கள் ! உங்களது கோபப் பார்வையால் என்னை என்ன செய்துவிடப்போகிறீர்கள். உண்மையில் நான் பிராமணர்களை அவமதிப்பதில்லை. அவர்களை தேவர் களுக்குச் சமமாக நான் மதிக்கிறேன். நீங்கள் எனது தவறை மன்னிக்க வேண்டும். பிராமணர்களின் சக்தியை நான் நன்கறிவேன்''

''பிராமணர்களின் கோபத்தால் கடல் நீர் உப்பு நீராக ஆக்கப்பட்டு குடிக்க முடியாதபடி செய்யப்பட்டதை நான் அறிவேன். சிறுமதியும், தீயமனமும் படைத்த அசுரனுகிய வாதாபியை அகஸ்திய முனிவர் ஜீரணம் செய்துவிட்டார். முனி வர்களிடத்தில் கோபமும் இருக்கிறது; அத்துடன் மன்னிக்கும் பண்பும் ஏராளமாக இருக்கிறது. அளவுக்கு அதிகமாக தங்களைக் காக்க வைத்துவிட்ட தற்காகத் தாங்கள் என்னை மன்னித்துவிட வேண் டும். என் கணவனுக்குத் தொண்டு செய்வதால் கிடைக்கும் சிறப்பினை நான் விரும்புகிறேன். எனது கணவனை தெய்வங்களில் தலையாய தெய்வமாக நான் மதிக்கிறேன். கணவனுக்குச் செய்யும் தொண்டை மிகச் சிறந்த நற்பணியாகக் கருதி அதன்படி வாழ்ந்து வருகிறேன். ஒரு பெண் கொக்கு உங்களால் எரிக்கப்பட்டதை நான் அறிவேன். ஆனால் அத்தகைய கோபம், தன்னையே அழிக்கும் எதிரி ஆகும். சினத்தைத் தவிர்த்தவர்களையும் உண்மையே பேசுகிறவர்களையும், குருநாதருக்குத் தொண்டு செய்கிறவர்களையுமே இறைவன் பிரா மணராகக் கருதுகிருன். தான் துன்புற்றாலும் பிறரைத் துன்புறுத்தாதவர்களையும், ஆசைகளைக்

கட்டுப்படுத்தி வைத்திருப்பவர்களையும், புனிதமான வர்களையும், அறம் பிறழாது வாழ்பவர்களையும், எப்போதும் வேதத்தைப் பயின்று வருபவர்களையுமே இறைவன் பிராமணர்கள் என்று கருதுகிறான்''.

''கோபத்தையும் ஆசைகளையும் கட்டுப்படுத்தி நற்பண்புகளும் சக்தியும் பெற்று ஒவ்வொரு மனித னையும் தனக்குச் சமமாகக் கருதுகிற ஒருவனையே தெய்வங்கள் பிராமணன் என்று மதிக்கின்றன''.

''தெய்வங்களின் நோக்கின்படி, எல்லாச் சம யங்களின் செயல் முறைகளையும் அறிந்தவன் பிரா மணன்; தானாகப் படித்து பிறருக்கு கற்பிப்பவன் பிராமணன்; தானே வேள்விகளைச் செய்பவன் பிராமணன்; பிறர் செய்யும் வேள்விகளுக்குத் தலைமை வகிப்பவன் பிராமணன்''.

''தெய்வங்களின் நோக்கின்படி, தனது வரு மானத்துக்குத் தகுந்தவாறு தானம் செய்பவன் பிராமணன்; தயாளகுணம் உடையவன் பிராம ணன்; எப்போதும் கல்வியில் கருத்தாய் இருப்ப வன் பிராமணன்''.

''அறநெறியின்படி வாழ்கின்றவர்கள், புல னடக்கம், வாய்மை, எளிமை ஆகியவற்றை நிலை யான, உயர்வான பண்புகளாக கருதுகின்றனர்''.

''நற்பண்புகள் நிலைத்திருப்பவை; ஆனால் அடைவது அரிது. நற்பண்பு, உண்மையில் நிலைத் திருக்கிறது. வணக்கத்துக்குரிய ரிஷிகள் உபதே சித்த ஸ்ருதிகளில் நற்பண்பு உள்ளது''.

''நற்பண்பு பல்வகையானதாகத்தோன்றுகிறது. பிராமணரே, உமக்கு நற்பண்பின் உண்மைத் தன்மை தெரியவில்லை. தூய வாழ்க்கையைப் பெற்றுள்ள உமக்கு நற்பண்பின் சிறப்புத் தன்மை தெரியாவிட்டால், மிதிலை நகரத்துக்குச் செல்லுங்கள். அங்கு பறவைகளை வேட்டையாடும் ஒருவன் தனது தாய் தந்தையருக்குத் தொண்டு செய்து கொண்டிருப்பான். அவன் உண்மையைக் கடைப்பிடிப்பவன். ஆசைகளை அடக்கி ஆள்பவன். நற்பண்பின் தன்மையைப் பற்றி அவனிடம் கேட்டு அறிந்து கொள்ளுங்கள். பல்வேறு சமயங்களின் செயல் முறைகளை அவன் உங்களுக்கு விளக்கி உரைப்பான். துறவியே! நீங்கள் விரும்பினால் அங்கு செல்லலாம்''.

''பிராமணரே! நற்பண்புகளைக் கடைப்பிடித்து வாழுகின்ற ஒரு பெண்ணை துன்புறுத்துவது என்பது இயலாத செயல். இதனை நினைவில் கொள்ளுங்கள்.''

பெண்ணின் கருத்துக்களைக் கேட்ட பிராமணர்; ''அழகிய பெண்ணே! மகிழ்ச்சியோடு இரு. உன் சொற்களைக் கேட்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். உனது கண்டிப்பு கலந்த சொற்கள் எனக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். நான் மிதிலைக்குச் செல்கிறேன். அங்கு எனக்குப் பயனளிக்கக் கூடிய செயலில் ஈடுபடுகிறேன்'' என்று கூறினார்.

இருமுறை பிறந்தவர்களில் முதன்மையானவராகிய கௌசிகர், அங்கிருந்து புறப்பட்டார். தன்னையே கடிந்துகொண்டு தன் குடிலுக்குத் திரும்பினார்.

## 45. சரணாகதியின் மகிமை

ஸ்ரீ ஜெகந்நாதசுவாமி கோவில் கொண்டிலங்கும் புண்ணிய க்ஷேத்திரம் பூரி என்பது. கோயில் பிரசித்தி பெற்றது. நற்குணமுள்ள எளிய பிராம்மணர் ஒருவர் பூரியில் மனைவியோடு வாழ்ந்து வந்தார். பிராம்மணர் கீதைப் பிரியர். ஸ்ரீமத் பகவத் கீதையை இரவும் பகலும் படித்து கீதா சுலோகங்களைப் பற்றித் தியானித்து வருவது வழக்கம். பற்றற்ற தன்மையை (விரக்தி) அவர் இன்னமும் விருத்தி செய்யவில்லை யெனினும், கடவுளிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர்.

ஒருநாள் அவர் கீதா சுலோகத்திலுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் அனுபவ ரீதியாக ஆராய்ச்சி புரிய விரும்பினார். இக்கோட்பாட்டுடன் கீதையைப் படித்துக்கொண்டே போகையில் ஒன்பதாவது அத்தியாயத்தில் 22—வது சுலோகம் வந்தது.

''அனன்யாஸ் சிந்தயந்தோமாம் யேஜனா: பர்யுபாஸதே தேஷாம் நித்யாபியுக்தானாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்''

''வஹாம்யஹம்'', என்னும் சொற்றொடரை ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டார். ''நானே பாரத்தைத் தாங்குகின்றேன்'' என்பது இதன் பொருள். ஒரு பக்தனுக்குத் தேவையான சகல பொருள்களையும் பரந்தாமனே சுமந்துகொண்டு வருகிறார் என்பது இதன் அர்த்தமாகுமா? இவ்வெண்ணம் அவரது உள்ளத்தில் உதிக்கலாயிற்று. இல்லை, இது அதன் அர்த்தமல்ல. பரம்பொருள் இதர நிர்வாகிகளின் மூலம் இப்பொருள்களை வழங்குகிறார் பக்தனுக்கு. எனவே, அவர் வஹாம்

யஹம் என்னும் சொற்றொடர் உத்தேசிக்கும் கருத்தைத் விளக்கத் தவறி விட்டதென்று எண்ணி ஞர். ஆனதால், அதைப் பேனுவினுல் கீறிவிட்டு அதன் மேலே கதோம்யஹம் என்று எழுதினுர். கதோம்யஹம் என்பதற்கு ''நானே ஏற்பாடு செய் கிறேன்'' என்று அர்த்தம் ஆகும்.

ஆண்டவருடைய போக்குகள் ஆராய்ந்தறியக் கூடாதவை. அப்பிராம்மணர் பிச்சையேற்றுக் காலங் கழிப்பவர். ஒரு நாள் கனத்த மழை பெய்யலாயிற்று. பிச்சைக்கு அன்று வெளியேபோக முடியாமையால் அவரும் அவரது மனேவியும் பட்டினி கிடந்தார்கள். மறுநாள் மழை விட்டதும், பிராம்மணர் யாசகத்திற்கு வெளியேறிஞர். வீட்டை விட்டு புறப்பட்ட சிறிது நேரத்திற்கெல் லாம், உடலெங்கும் இரத்தம் கசிய அழகான பையன் ஒருவன் அங்கே வந்தான். பிராம் மணருடைய சஹதர்மிணியைப் பார்த்து ''அம்மா, இந்த உணவுப் பிரசாதம் பண்டிட்ஜீ (பிராம்மணர்) கொடுத்தனுப்பிஞர்கள்'' என்று கூறிஞன். பிராம் மண மாது அப்பையனுடைய அழகிய முகத்தைப் பார்த்தும், அவனுடைய இனிய கவர்ச்சி மிக்க சொற்களேக் கேட்டும் பரவசப்பட்டாள். அதே சமயம் அவனுடைய உடலினின்றும் இரத்தம் கசிவதைக் காணப் பெரிதும் வேதனேப்பட்டாள். கண்களில் நீர் ததும்பியவண்ணம், அவள் அவனேப் பார்த்து ''குழந்தாய்! உன்னே இப்படி அடித்துத் தீங்கு புரியும் அளவுக்குக் குரூரகுணம் படைத்தவன் யார்?'' என்று வினவிஞள். அவருடைய கணவ ராகிய பிராம்மணரே தன்னே அடித்தாரென்று பையன் பதிலியம்பிஞன். இதைக் கேட்டதும் அவள் திடுக்கிட்டுப் போஞள். அவள், ''எனது கணவர் மிகவும் எளியவர், நற்குணம் படைத்தவர்; பெரும் பக்தரும்கூட. உன்னேப்போன்ற அழகிய

குழந்தையை அவர் எதற்காக அடித்தார்?'' என்று கூறியதும், பையன், ''அம்மா! நிஜத்தை அப்படியே சொல்லி விடுகிறேன். ஒரு ஆயுதத்தின் முனையால் எனது உடலைக் குத்தியது தங்கள் கணவனுரேதான். ஏன் அப்படிச் செய்தார் என்பது அவருக்கு மாத்திரமே தெரியும்'' என்று மறுமொழி கூறினுன்.

இவ்வாறு கூறிக்கொண்டே, உணவுப் பதார்த்தங்களின் சுமையை அம்மையாரின் முன்னுல் வைத்து விட்டுப் பையன் மறைந்து போனுன். அச்சோக சம்பவத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்த அவ்வம்மையார் பையன் எப்போது மறைந்து போனுன் என்பதைக் கவனிக்க இயலாமற் போயிற்று. தமது கணவனுரின் ஆச்சரியகரமான அந்த நடவடிக்கைக்கு நியாயமோ காரணமோ எதையும் அறிய மாட்டாமல் தடுமாறியவளாய் மிகுந்த வருத்தத்துடன் தம் கணவனுரின் வருகையை எதிர் நோக்கினுள். பிராம்மணர் வழக்கப் பிரகாரம் வீடு வந்து சேர்ந்தார். மனைவி தன் கணவரிடம் மரியாதையான சொற்களில் ஆனுல் வருத்தமும் கோபமும் தொனிக்கும் பாணியில் முழுக் கதையையும் கூறி முடித்தாள். தம் மனைவி கூறிய ஆச்சரியகரமான கதையைக் கேட்ட பிராம்மணர் வாய்ப்பேசா ஊமையைப் போலானுர். ஸ்ரீமத் பகவத் கீதையில் ஒரு வார்த்தையைப் பேனுவினுல் கீறிவிட்டதை நினைவுக்குக் கொண்டு வந்த போது, அவர் ஆழ்ந்த கவலை அடைந்தார். அவரது இருவிழிகளினின்றும் அருவிபோல நீர் வழியலாயிற்று. கடவுளிடம் பக்தி சிரத்தை பூண்டு, அவரையே நம்பியிருக்கும் உண்மையான பக்தனுக்குக் கடவுள் உணவுப் பொருள்களைத் தாமே சுமந்து கொண்டுபோய்க் கொடுக்கிருரென்ற தத்துவத்தை எழுத்துக் கெழுத்து உறுதியென இப்போது

உணரலானூர். கீதை என்பது பரம்பொருளின் வாசாவிக்கிரகம். ஆகையால், அக்கீதையில், ஒரு வார்த்தையைக் கீறுதல் என்பது பரம்பொருளின் உடலைக் குத்துவதற்குச் சமம் ஆகும். தமது குற்றத் திற்காக நிரம்பவும் பச்சாத்தாபமடைந்தவராய், அப்பிராம்மணர் மூர்ச்சித்துக் கீழே வீழ்ந்தார். கடவுள் உடனே பக்தரின் முன்னல் பேரின்பத்தைத் தருகிற திவ்ய தரிசனத்தைத் தந்து ஆசி கூறினூர். பிராம்மணர் எழுந்து நின்று வணங்கித் தமது குற்றத்திற்கு மன்னிப்புக் கோரினூர். அமோகமாக ஏற்பட்ட பக்திப் பெருக்கால் அவர் தமது கீதைப் புத்தகத்தில் காலியாயிருக்கும் ஒவ்வொரு அங்குல இடத்திலும் 'வஹாம்யஹம்' என்ற சொற்றெ டரை எழுதத் தொடங்கினூர்.

## 46. வேஷதாரியான சமயப் பிரசாரகர்

பண்டிட் ராம் சாஸ்திரி சிறந்த அறிஞர்; அவர் கோயம்புத்தூரில் வாழ்ந்து வந்தார்; அவர் அற்புத மாக சொற்பொழிவு செய்வார் அவர் சட்தர்ஷன் சாஸ்திரி.

அவர் கீதை, உபநிடதங்கள் பிரம்ம சூத்திரம் அனைத்தும் கற்றறிந்தவர்.

அவர் ஒரு நாள் புஷ்பாஞ்சலி மந்திரத்தை ஜபம் செய்தார்.

ந கர்மணு ந ப்ரஜாய தனேன<br>த்யாகேனேகே அம்ரிதத்வம் ஆனசு:

''ஒரு மனிதன் பணியின் மூலமாகவோ, குழந் தைகள் மூலமாகவோ, அல்லது செல்வத்தின் மூல மாகவோ, அமரத்துவம் பெறுவதில்லை; அதனைத் துறவின் மூலமாகவே பெறுகிருன்.''

அவர் இந்த மந்திரத்தை உச்சரித்த போது எல்லோரும் கலகலவென்று சிரித்தனர். ஏனென்ருல் அவரே தெய்வீக வாழ்க்கை வாழவில்லை.

மூன்ருவதாக ஒரு பெண்ணை அவர் திருமணம் செய்து கொண்டிருந்தார்.

துறவறத்தை அவர் ஒருசிறிதும் கடைப்பிடிக்கவில்லை.

அவர் தம் இளம் மனைவியரிடம் மிகவும் பற்றுக்கொண்டு வாழ்கிருர்.

ஒரு மந்திரத்தை விளக்குவதன் மூலமாகவோ, உச்சரிப்பதன் மூலமாகவோ பயன் ஏதும் ஏற்படாது.

உண்மையில் தேவைப்படுவதெல்லாம் அதனை நடை முறையில் கடைப்பிடிப்பதுதான்.

நடைமுறையில் கடைப்பிடித்து ஆன்ம ஞானம் பெறுங்கள்.

## 47. கஞ்சனி

காந்தமதன மலையின் அடிவாரத்தில் ஒரு கிழவி வாழ்ந்து வந்தாள். அவள் தனிமையை விரும்பினுள். அவள் நாட்டிலுள்ள கருமிகள் அனைவரிலும் மிக மோசமான கருமி. தனது உடமைகளை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டியிருக்கும் என்ற காரணத்திற்காக அவள் தனியாக வாழ்ந்து வந்தாள். தருமம் என்ருல் என்ன என்பதே அவளுக்குத் தெரியாது. அவள் தனது வாழ்நாளில் ஒரு அரிசி அல்லது கோதுமையைக்கூட மற்றவர்களுக்குக் கொடுத்ததில்லை.

இந்த பிரபலமான கிழவியின் வாழ்க்கையையும், செயல்களையும் பகவான் விஷ்ணு ஆர்வமுடன் கவனித்து வந்தார். அவள் விரைவிலேயே இறக்க வேண்டும் என்பதை அவர் அறிந்தார். அவள் இன்னும் மூன்று நாட்கள்தான் இந்த உலகில் வாழப் போகிருள்.

ஆகவே பகவான் காகாபுசந்தியை தன் அருகில் அழைத்து, ''என் அன்புக்குரிய புசந்தி ! இந்தக் கிழவியைப் பார்த்தாயா ! அவள் சிறிதளவுகூட தருமம் செய்யவில்லை. அவள் தன் ஆயுள் முழுவதும் கருமியாகவே இருந்திருக்கிருள். நீ இன்ருவது அவளிடம் சென்று எதையாவது பெற முயற்சி செய். ஏனெனில் அவள் நாளை இறக்கப்போகிருள். இறக்கும்போது ஓரளவாவது அவளுக்கு நற்பெயர் கிடைக்கட்டுமே !''

காகாபுசந்தி சம்மதத்தை தெரிவித்தான். காகத்தின் உருவம் கொண்டு கஞ்சனியின் வீட்டுக்கு அருகில் இருந்த மரத்தின்மீது அமர்ந்தான். கஞ்சனி சமையலுக்காக கையளவு உளுந்தை தண்ணீரில் போட்டு கழுவிக்கொண்டிருந்தாள். அதில் வாயளவு உளுந்தையாவது கொத்திக்கொள்ள புசந்தி தீர்மானித்தான்.

திடீரென்று பாய்ந்து பாத்திரத்துக்கு அருகே வந்தான். மின்னல் வேகத்தில் வாயளவு உளுந்தைக் கொத்திக்கொண்டு பறந்தான். ஆனல் விழிப்புடன் இருந்த கஞ்சனி படுவேகமாக அவனைப் பற்றி இழுத்தாள். அவள் ஒரு கையால் அவனது கழுத்தை நெருக்கித் திருகிப் பிடித்துக்கொண்டாள். உளுந்து வயிற்றுக்குள் போய்விடாமல் இருக்கவே இப்படிச் செய்தாள். மற்ருெரு கையால் திணறிக் கொண்டிருந்த காக்கையின் அலகை விரித்து அத்தனை உளுந்தையும் வெளியே எடுத்துவிட்டாள்.

காகாபுசந்தி உயிருக்குப் போராடினுன். கடைசியில் அவனுக்கு விடுதலை கிடைத்தது. அவன் பறந்து சென்று விஷ்ணுவின் திருவடிகளில் வீழ்ந்தான். விஷ்ணு, தன்னிடமிருந்து புசந்தி சென்றது முதல் நடந்தவற்றை விசாரித்தார். புசந்தி நடந்தது அனைத்தையும் சொல்லிவிட்டு, ''இறைவா, நான் உயிருக்குப் போராடவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. நான் எனது பணியில் வெற்றிபெற முடியவில்லை. வெறுக்கத்தக்க அந்தக் கிழவியிடமிருந்து ஒரு உளுந்தைக்கூட நான் எடுக்க முடியவில்லை.

பிறகு பகவான் புசந்தியைப் பார்த்து, ''புசந்தி! அப்படிச்சொல்லாதே. இங்கே வா. உன் வாயை நான் சோதித்துப் பார்க்கிறேன்'' என்று கூறினுர்.

புசந்தி வாயைத் திறந்தான். அவன் வாயில் உளுந்துத் தோலின் ஒரு சிறு பகுதி ஒட்டிக்கொண்டிருந்தது. பகவான் விஷ்ணு இதனைப் பார்த்துவிட்டு பின் வருமாறு கூறினுர். ''பார்த்தாயா புசந்தி! உளுந்துத் தோலின் ஒரு பகுதி உனது மேல் வாயில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. நான் திருப்தி அடைந்து விட்டேன். அந்தக் கிழவி ஓரளவுக்கு புண்ணியம் சம்பாதித்துவிட்டாள். அவள் மரணத்துக்குப் பிறகு செல்லுகின்ற உலகில் உனது வாயில் ஒட்டிக்கொண்டிருக்கும் பருப்புத்தோல் அவளுக்கு உணவாகத் தரப்பட வேண்டும்.''

இவ்வாறு சொல்லிக்கொண்டே இறைவன் மறைந்துவிட்டார்.

தருமம் மற்றும் அறவழியின் பலன் மகத்தானது; அற்புதமானது. கடவுளின் அன்பும், கருணையும் எல்லையற்றது. வெற்றிகொள்ளக் கூடியது.

சிறிதளவு அன்பு செலுத்தினாலும் சிறிதளவு தருமம் செய்தாலும் அதன் பலன் உங்களுக்குக் கிடைக்கிறது. நீங்கள் இந்த உலக வாழ்வை விட்டுச் செல்லுகிறபோது அது உங்களைக் காப்பாற்றுகிறது. கடவுள் தன்னுடைய மகத்தான அன்பின் காரணமாக, பாவியும் திருந்தி தெய்வத்தன்மை பெற வாய்ப்பளிக்கிறார். இறைவன் தருகிற இத்தகைய வாய்ப்புக்களை மனிதன் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

கிழவி கஞ்சனி பாராட்டுக்குரிய எந்த நற்செயலையும் செய்யவில்லை. ஆனால் அவளுக்கு உளுந்துத் தோலில் தயார் செய்யப்பட்ட ரொட்டி கிடைத்தது. ஏழைகளுக்கு உணவளித்தல், ஆடையற்றோருக்கு ஆடை அளித்தல், பிறர் துன்பத்தைப் போக்குதல், வருந்துவோருக்கு ஆறுதல் அளித்தல் ஆகிய பாராட்டத்தக்க நூறு செயல்களில் ஈடுபட்டுள்ள உங்களுக்குக் கிடைக்கும் பலன் எத்தகையதாக இருக்கும், எண்ணிப் பாருங்கள்! பருப்புத்தோலின் ஒரு துண்டு ஆயிரம் மடங்காகப் பெருகி அடுத்த பிறவியில் கிழவிக்கு உணவாக வரும். தருமத்தின் சிறப்பு அத்தகையது. தருமம் எவ்வளவு சிறியதானாலும், அது பக்தியுடன் கடைப்பிடிக்கப்பட்டால், நூறு மடங்கு பலனை அது தருகிறது.

ஆகவே, நண்பர்களே! தருமம் செய்யுங்கள். அறவழிக்கு மாறான செயல்களையும், வாழ்க்கையையும் விட்டுவிடுங்கள். கொடுமையையும் வெறுப்பையும் கைவிட்டுவிடுங்கள். அமைதி மற்றும் பேரானந்தம் பெற்றுச் சிறப்பாக வாழ்க்கை நடத்துங்கள். நல்லவராக இருங்கள். நல்லதையே செய்யுங்கள். உங்கள் வாழ்க்கை, எளிய வாழ்க்கையாக இருக்கட்டும்; கண்ணியமான வாழ்க்கை

யாக இருக்கட்டும்; மற்றவர்களின் நன்மைக்காகவும் முன்னேற்றத்துக்காகவும் பாடுபடுங்கள். உங்களிடம் உள்ள பொருளை அனைவருடனும் பகிர்ந்து கொள்ளுங்கள். இதன் மூலம் உங்களுக்கு அமைதியும் செல்வமும் கிடைக்கும். இது, ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டிய லட்சிய வாழ்க்கை ஆகும்.

நீங்கள் அனைவரும் தருமம் மற்றும் தயாள குணத்தின் வடிவமாகத் திகழுவீர்களாக! தருமத்தின் மூலம் உங்களுக்கு அருட்பேறு கிடைக்கட்டும்.

## 48. புத்திசாலியான கீரி

மகத்தான மகாபாரதப் போர் முடிந்து, பீஷ்மர் இறந்த பின்னர், யுதிஷ்டிரர் மிகவும் கவலையுற்றார். தனது உற்றார் உறவினரையே கொன்று குவித்ததற்காக அவர் வருந்தினார். அவர் அரசைத் துறந்து காட்டில் வாழ விரும்பினார்.

கிருஷ்ண பகவானும், வியாசரும் அஸ்வமேத யாகம் செய்யுமாறு அவரிடம் கூறினர். அது பாவங்களைப் போக்கக்கூடியது என்று கருதப்பட்டது.

யுதிஷ்டிரர் மிகப் பெரிய அளவில் யாகத்தை நடத்தினார். பிராமணர்கள் உட்பட அனைவரும் யாகத்தைப் புகழ்ந்துரைத்தனர்.

பிராமணர்கள் யாகத்தைப் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தபோது அங்கே ஒரு கீரி வந்தது. அது அவர்களைப் பார்த்து, ''குருக்ஷேத்திரத்தில் உஞ்சவ்ருத்தி செய்துவரும் பிராமணர் ஒருவர் பார்லி உணவை தானமாக அளித்ததற்குச் சமமாகக்கூட இந்த யாகத்தை மதிக்க முடியாது'' என்றது.

பிராமணர்கள் ஆச்சரியம் அடைந்தனர். கீரி சொல்லியதை விளக்கிக் கூறுமாறு அவர்கள் கேட்டனர்.

கீரி கூறியது : ''நான் உங்கள் அனைவருக்கும் ஒரு கதை சொல்லுகிறேன். உன்னதமான வழியினை கடைப்பிடிக்கும் ஒரு பிராமணன், உடைந்த பார்லி அரிசியில் சிறிதளவை தானமாகப் பெற்றான். அதன் மூலம் அவன் பெற்ற மிகச் சிறந்த பலனை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.''

''புனித பூமியாகிய குருக்ஷேத்திரத்தில் ஒரு பிராமணன் வாழ்ந்து வந்தான். அவன் உஞ்சவ்ருத்தி செய்து வாழ்ந்து வந்தான். அத்தகைய வாழ்க்கை, ஒரு புறாவின் வாழ்க்கையைப் போன்றதாகும். அறுவடை செய்யப்பட்ட நிலங்களில் கிடக்கும் தானியங்களை சேகரித்து, அதனை உணவாகக் கொண்டு அவன் குடும்பத்தினர் வாழ்ந்து வந்தனர். அவன் தனது மனைவி, மகன், மருமகள் ஆகியோருடன் வாழ்ந்துவந்தான். அவன் தவ வாழ்க்கை மேற்கொண்டிருந்தான். அந்தக் குடும்பத்தினர் ஆறு நாட்களுக்கு ஒருமுறைதான் உணவு உட்கொள்ளுகின்றனர். மாதத்தின் ஆறுவது நாளில் இவ்வாறு உணவு உட்கொண்டவர்கள் மீண்டும் பனிரண்டாம் நாள்தான் உணவு உட்கொள்ளுவர். அன்று எதுவும் கிடைக்கவில்லையென்றால் பதினெட்டாம் நாள்தான் உட்கொள்ளுவர்.''

''ஒரு சமயம் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. அவர்கள் உணவருந்த உட்காரும் நேரத்தில் விருந்தினர் ஒருவர் வந்தார். பிராமணர் அவரை அன்புடன் வரவேற்றார். தான் உண்பதற்காக வைத்திருந்த பார்லி உணவின் ஒரு பகுதியை அவர் விருந்தினருக்குக் கொடுத்தார். விருந்தாளி உணவை உட்கொண்டார். ஆனல் அவர் பசி அடங்கவில்லை.

பிராமணரின் மனைவி தன் பங்கு உணவை அவருக்குக் கொடுத்தாள். அவளது கணவர் அவளைப் பார்த்து, பூச்சி, புழுக்கள், மிருகங்கள் ஆகியவைகூட பெண்களை கவனித்து உணவளித்து வருகின்றன. நீ உனது பங்கு உணவைக் கொடுக்க நான் அனுமதித்தால் நான் என் மதிப்பை இழந்துவிடுவேன். நீ ஏற்கனவே மெலிந்திருக்கிறாய். உனது உடலில் எலும்பும் தோலும்தான் இருக்கிறது. என்னிடம் மீதமுள்ள உணவை விருந்தாளிக்குக் கொடுத்து அவரது பசியைப் போக்குவேன்' என்று கூறினார்.

''ஆனால் மனைவி, விருந்தாளிக்குத் தன் உணவைக் கொடுப்பதில் பிடிவாதமாக இருந்தாள்; அப்படியே செய்தாள். விருந்தாளி உணவை உட்கொண்டார். ஆனால் பசி இன்னும் அடங்கவில்லை.

''அந்த பிராமணர், அவரது மகன், மருமகள் ஆகியோர் தமது பங்கு உணவை விருந்தாளிக்குக் கொடுத்தனர். இப்போது விருந்தாளிக்கு பசி பூரணமாக அடங்கிவிட்டது. உனது இந்த தூய்மையான தானம் குறித்து நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். தானமாகத் தரப்பட்ட இந்த உணவு நேர்மையான வழியில் சேகரிக்கப்பட்டு பகிர்ந்து கொள்ளப்பட்டதாகும்,'' என்று விருந்தாளி கூறினார்.

''விருந்தாளி மேலும் சொன்னார்; உடைந்த பார்லி அரிசியைக் கொண்டு செய்யப்பட்ட இந்த தானத்தின் மூலம் நீ பிரம்மத்தின் நிலையான இடத்தை வெற்றி கொண்டு விட்டாய். இருமுறை பிறந்தவர்களில் முதன்மையானவரே! உங்களையெல்லாம் ஸ்வர்க்கத்துக்கு அழைத்துச் செல்ல ஸ்வர்க்கத்திலிருந்து ரதம் வந்திருக்கிறது. தேவர்கள், தேவலோகத்துப் பெண்கள் ஆகியோருடன்

அந்த ரதம் வந்திருக்கிறது. தயவு செய்து அதில் ஏறி, தேவலோகத்துக்குச் செல்லுங்கள். பிராம ணரே! நான் தரும தேவதை !''

''பிறகு அந்த பிராமணரும் அவரது மனைவி, மகன், மருமகள் ஆகியோரும் தேவலோகம் சென் றனர்.''

கீரி மேலும் சொல்லியது; ''நான் வளையிலி ருந்து வெளியே வந்தபோது அந்த இடத்தில் தரை யில் பார்லி அரிசியின் தூள் கிடப்பதைக் கண்டேன். நான் அதில் விழுந்து புரண்டேன். அதன் விளை வாக என் தலையும் உடலின் ஒரு பகுதியும் பொன் நிறமாக ஆயிற்று. பார்லி அரிசியின் தூள்பட்ட இடமெல்லாம் பொன் நிறம் பெற்றது. எனது உடலின் மற்றொரு பகுதியையும் பொன் நிறமாக ஆக்கிக்கொள்ள விரும்புகிறேன். யாகங்கள் நடந்த பல இடங்களுக்கு நான் சென்றேன். அங்கெல்லாம் புரண்டேன். ஆனால் பலன் ஏதுமில்லை. பார்லி உணவுதானம் செய்யப்பட்டதற்கு இருந்த சிறப்பு, இந்த வேள்விகளுக்கு இல்லை. யுதிஷ்டிரரின் வேள்வி யிலாவது எனது உடலின் மறுபாதி தங்கமாகிவிடும் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அப்படி எதுவும் நிகழவில்லை. இதிலிருந்து தெளிவாகத் தெரிவது யாதெனில், ஏழை பிராமணரும் அவரது குடும்பத் தாரும் தன்னலம் பாராமல் தமது பார்லி உணவை தானம் செய்ததற்கு இருந்த சிறப்பு, இந்த வேள் விக்கு இல்லை என்பதுதான்.''

செல்வம், பகட்டு இவற்றின் மூலம் தியா கத்தை அளவிட முடியாது. பார்லி தூளை தானம் செய்வதன் மூலம் பிராமணனும் அவனது குடும்பத் தாரும் மகத்தான தியாகத்தைச் செய்தனர். அவர்கள் மிகச் சிறப்பாக, உன்னதமான முறை யில் தன்னலத்தை தியாகம் செய்தனர்.

## 49. இப்ராஹிம் ஆதம்

இப்ராஹிம் ஆதம், ஒரு மாபெரும் சுபி. அவர் ஆடம்பரத்துடனும் ஏராளமான பணியாட்களுடனும் பயணம் செய்வது வழக்கம். அவரது கூடாரங்கள் தங்க ஆணிகளைக்கொண்டு அமைக்கப்பட்டிருக்கும்.

யாத்திரிகரான ஒரு டெர்விஷ் அவரது கூடாரத்தின் வழியாகப் போக நேர்ந்தது. அந்த டெர்விஷ் பெரிதும் ஆச்சரியம் அடைந்தார். ஒரு காலத்தில் மன்னராகவும் இப்போது சுபியாகவும் இருக்கின்ற ஒருவருக்குத்தான் இந்தப் பொருள்களும் ஆடம்பரமும் சொந்தமானது என்று கேட்டு அவர் வியப்புற்றார். கையில் திருவோட்டை ஏந்தியவாறு அவர் அரச வாழ்வில் இருக்கும் சுபியை அணுகினார். ''நீங்கள் உங்களை சுபி எனச் சொல்லிக்கொள்வது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. ஏராளமான உலகியற் பொருட்கள் உங்களிடம் இருக்கின்றன. உங்களது கூடாரங்கள் தங்க ஆணியினால் அடிக்கப்பட்டிருக்கின்றன'' என்று அவர் கூறினார்.

இப்ராஹிம், அந்த டெர்விஷைச் சிறிது நேரம் இளைப்பாறுமாறு செய்தார். ஒருமணி நேரத்துக்குப் பிறகு இப்ராஹிம் அந்த டெர்விஷை தன்னுடன் மெக்காவுக்கு வருமாறு அழைத்தார். டெர்விஷ் ஒப்புக்கொண்டார்.

சுபி, தனது கூடாரத்தையும் பரிவாரத்தையும் விட்டுவிட்டு டெர்விஷுடன் யாத்திரை செய்யத் துவங்கினார். அவர்கள் சிறிது தூரம்தான் சென்றிருப்பார்கள். அப்போது, மரக்கோப்பையை கூடாரத்தில் வைத்துவிட்டு வந்தது டெர்விஷுக்கு நினைவில் வந்தது. அதை எடுத்துவரத் தன்னை

அனுமதிக்குமாறு இப்ராஹிமிடம் டெர்விஷ் கேட்டார்.

சுபி அப்போது பின்வருமாறு கூறினுர்: ''உமக்கும் எனக்கும் இதுதான் வேறுபாடு. நான் எந்த வித மனக் கவலையுமின்றி அனைத்தையும் விட்டு விட்டு வந்தேன். ஆனல் அற்பமான ஒரு கோப்பையை விட்டுவிட்டு வர உம்மால் முடியவில்லை. உம்மை வியப்பில் ஆழ்த்திய தங்க ஆணி பூமியைத் தான் தொட்டுக்கொண்டிருக்கிறது. என் இதயத்தைத் தொடவில்லை.''

அறியாமையும் உலகியற் சிந்தனையும் உடையவர்கள் தமது புறச் செயல்களை வைத்து பிறரை அளவிடுகின்றனர். மனப்போக்குத்தான் உண்மையான செயல். உலகியல் வாழ்வில் ஈடுபட்டிருக்கும் சாதாரண மனிதரும், ஒரு துறவியும் ஒரே செயலைச் செய்தாலும் முன்னவர், அதனை ஆசை, அகந்தை, பற்று இவற்றின் அடிப்படையில் செய்வதால் அந்தச் செயலுடன் பந்தப்பட்டு நிற்கிறுர். ஆனல் பின்னவரோ அகந்தையிலிருந்தும் பந்தங்களிலிருந்தும் விடுபட்டு நிற்கிறுர்.

ஒரு துறவி பூரண ஞானமும், பற்றற்ற தன்மையும் பெற்றிருக்கிறுர்; இறைவனிடம் பக்தி கொண்டிருக்கிறுர். அவர் முறைமைகளுக்கு அப்பாற்பட்டவர். அவர் பேரறிஞர், ஆயினும் குழந்தைபோல விளையாடுகிறுர். அவர் எல்லாம் அறிந்தவராய் இருந்தாலும் ஏதும் அறியாதவர் போல நடந்து கொள்ளுகிறுர். அவர் ஆழ்ந்த நூலறிவு உடையவராக இருந்தாலும் சாதாரண மனிதனைப்போல பேசுகிறுர். கைதட்டல், பெயர், புகழ் இவற்றை விரும்பாமல் அவர் பேசுகிறுர். சந்தர்ப்பவசத்தால் கிடைக்கின்ற உணவு, அது எப்படிப்பட்டதாக

இருந்தாலும் அதனை அவர் உட்கொள்ளுகிறார். இன்பத்திலும் துன்பத்திலும் அவரது மனோநிலை ஒரே மாதிரியாக இருக்கிறது. முரண்பாடுகளுக்கு அப்பாற்பட்டவராக அவர் இருக்கிறார். ஏனெனில் எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளுடன் அவர் இணைந்திருக்கிறார். மாயையின் வசப்பட்ட மனிதன், ஆசைப்பட்ட பொருள் கிடைத்தபோது ஆனந்தம் அடைகிறான்; அது கிடைக்காதபோது அழுது புலம்புகிறான்.

## 50. ஒரு கோவணத்தின் கதை

ஒரு சமயம் ஒரு கோவணம் மனிதனின் உடம்பில் தான் இருக்கின்ற இடத்தை எண்ணி மிகவும் வெறுப்புற்றது; அந்த மனிதனை விட்டு காசிக்குச் சென்றது. அங்கு அது கங்கைக் கரையில் கிடந்தது.

கங்கையில் ஒரு சாது குளித்துக்கொண்டிருந்தார். அவரது கோவணம் ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டது. கரையில் ஒரு கோவணம் கிடப்பதைக் கண்டார்.

அந்தக் கோவணத்துக்குச் சொந்தமானவர் என்று சொல்லும் அளவில் யாரும் அதன் அருகில் இல்லை. ஆதலால் சாது அந்தக் கோவணத்தை எடுத்துக் கட்டிக்கொண்டு நிர்வாணமாக நடக்கும் சங்கடத்திலிருந்து தப்பித்தார்.

பரிதாபத்திற்குரிய கோவணம் கவலையில் மூழ்கியது. முந்தைய மனிதனின் உடம்பில் எந்தப் பகுதியில் இருந்ததோ அதே பகுதியில்தான் சாதுவின் உடம்பிலும் கோவணம் இருந்தது. இரண்டு

மூன்று நாட்கள்கூட ஆகவில்லை. புதிய எஜமானன் முந்தைய மனிதனைவிடக் கொடுமையானவர் என அது உணர்ந்தது. சாதுவுக்கு வேறு கோவணம் இல்லை. ஆதலால் இந்தப் புதிய கோவணத்தையே இருபத்து நான்கு மணி நேரமும் பயன்படுத்தினர். ஆனால் முந்தைய மனிதன் அதனை இரண்டு நாட்களுக்கு ஒரு முறைதான் பயன்படுத்தினன்.

கோவணம் தனக்குத்தானே முணகிக்கொண்டது. ''நான் தவறு செய்துவிட்டேன்! நான் எனது முந்தைய எஜமானனைவிட்டுப் பிரிந்து வந்திருக்கக் கூடாது. எனது புதிய எஜமானன் எனக்கு ஒருநாள் கூட ஓய்வு தரமாட்டேன் என்கிறர்.''

அதுபோல ஒரு எருமையும் தனது எஜமானனின் வயலில் காலை முதல் இரவு வரை வேலை செய்வது குறித்து வருந்தியது. ஒரு நாள் இரவில் மேய்வதற்காக அவிழ்த்துவிடப்பட்டிருந்தபோது அது தப்பி ஓடியது. வேறு ஒரு இடத்தை அடைந்தது. அதை ஒரு விவசாயி கண்டார். அது திசை தடுமாறி வந்துவிட்டது என அறிந்து அதை தனக்குச் சொந்தமாக்கிக்கொண்டார். அவர் எருமையை இரவிலும் பகலிலும் உழுவதற்குப் பயன்படுத்தினர்.

எருமை தன் தவறுக்கு வருந்தியது, ''முந்தைய எஜமானனிடமிருந்து ஓடிவந்ததன் மூலம் நான் தவறு செய்து விட்டேன். அவர் என்னிடம் அன்பு கொண்டிருந்தார். இரவில் ஒரு போதும் என்னை வேலையில் ஈடுபடுத்தமாட்டார். ஆனல் புதிய எஜமானன் என்னை இரவிலும் பகலிலும் வேலையில் ஈடுபடுத்துகிறர். ஈவிரக்கமின்றி என்னை சவுக்கால் அடிக்கிறர். நான் எனது முந்தைய எஜமானனை விட்டு வந்திருக்கக் கூடாது.''

இறைவன் நிச்சயித்தபடிதான் எல்லாம் நடக்கும் என்றும், அதிலிருந்து ஒருவரும் தப்ப முடியாது என்றும், அப்படித் தப்பிச் செல்லும் முயற்சி, வீண் முயற்சி என்றும், இதனுல் அதிகம் அதிகமாக துன்பமே வந்துசேரும் என்றும் கோவணமும் எருமையும் உணர்ந்து கொண்டன. இறைவன் நிச்சயித்தபடியே நாம் செயல்பட வேண்டியிருக்கும் என்பதையும் அவை தெரிந்து கொண்டன. இறைவன் நமக்கு நிச்சயித்துள்ள பணியை, அதில் எவ்வளவு இன்னல்களும் அசௌகரியங்களும் இருந்தாலும் அதுபற்றிக் கவலைப்படாமல் செய்து கொண்டு இறைவனிடம் சரணுகதி அடைவதன் மூலம்தான் ஞானம் ஏற்படும் என அவை கண்டு கொண்டன.

நல்ல சூழ்நிலை எங்கே இருக்கிறது என்று ஒருவரும் தேடவேண்டாம். ஒரு புதிய சூழ்நிலையை அடைந்தால் அதில் தவறு காண மனம் விரும்பும்; மற்றுமொரு சூழ்நிலை அதைவிடச்சிறந்ததாக இருக்குமா என நாடி ஓடும். கட்டுப்பாட்டை மீறிச் செல்வது மனத்தின் தந்திரம். கட்டுப்பாடுள்ள மனிதன், எந்த நிலையிலும் பணிபுரியத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ளுகிருன். எல்லாவிதமான சூழ்நிலைக்கும் தகுந்தவாறு தன்னைச் சரிப்படுத்திக்கொள்ளுகிருன்; தனக்குத் தரப்படுகிற பணி எதுவாக இருந்தாலும் அதைச் செய்து முடிக்கிருன். அத்தகைய பணி, கஷ்டமானதாக இருந்தாலும் அதை மலர்ந்த முகத்துடன் செய்து முடிக்கிருன். அத்தகைய கட்டுப்பாடு உள்ள மனிதன் தான் இறைவனின் உண்மையான பக்தன்.

உண்மையான பக்தி என்பது ஆத்ம சமர்ப்பணம். ஜபம், பரவசம் நிறைந்த கீர்த்தனை, நீண்ட நேரம் செய்யப்படுகிற பூஜை இவற்றை

விட, ஒருவர் தனக்குத் தரப்பட்ட வேலையை, குறை ஏதும் கூறுமல், தெய்வீக வழிபாடு என்ற உணர்வுடன் செய்து, இறைவன் தந்துள்ள அனைத்தும் தனது விரைவான முன்னேற்றத்திற்காகத் தரப்பட்டது என்று ஏற்றுக்கொண்டு தன்னை இறைவனிடம் சமர்ப்பணம் செய்துவிடுவதுதான் சிறந்த பக்தியாகும். இத்தகைய மனப்போக்கைப் பெற்ற நேரத்திலிருந்து ஒருவரது துன்பம், தடை அனைத்தும் அவரது முன்னேற்றப் பாதையில் அவருக்கு உதவுபவையாக அமைகின்றன. உண்மையான பக்தன், ஒவ்வொரு செயலும் தெய்வ வழிபாடு என்றும் அதன் மூலம் இறைவனின் விருப்பம் பூர்த்தி செய்யப்படுகிறது என்றும் அறிந்து அதன் படி செயல்படுகிருன். ஆதலால், இறைவனிடம் தன்னை அர்ப்பணித்த பக்தனுக்கு, எந்தப் பணியும் கஷ்டமானதல்ல, எந்தப் பணியும் கேவலமானது அல்ல. எந்தப் பணியும் ஆன்மீக முன்னேற்றத்துக்குத் தடையாக இருக்காது. இவ்வாறு பக்தன் எப்போதும் தெய்வீக உணர்வுடன் இருக்கிருன்.

யோகம் என்பது எப்போதும் இறை உணர்வுடன் இருத்தல் ஆகும். அது உத்தரகாசியிலோ, கங்கோத்திரியிலோ, அல்லது இமயமலையின் வேறு ஏதேனும் ஒரு இடத்திலோ இல்லை; எல்லாம் இறைவன் மயம் என்றும் எல்லாப் பணியும் இறை வழிபாடு என்றும் சரியாகப் புரிந்துகொள்ளுவதில் தான் அது இருக்கிறது. பல சாதகர்கள் உலகத்திலிருந்து ஒதுங்கி தனித்திருக்க ரிஷிகேசம் செல்லுகின்றனர். சிறிது காலம் கழித்து, அவர்கள் அந்த இடத்தைவிட்டு இமயமலையின் மேலும் உயர்ந்த இடத்துக்கு — உத்தரகாசி அல்லது கங்கோத்திரிக்கு செல்லுகின்றனர். இறுதியில் எங்கும் அவர்கள் தனித்திருக்க முடிவதில்லை.

உத்தரகாசி அல்லது கங்கோத்திரியில்கூட உணவுக்காக மற்றவர்களை நாடிச் செல்லவேண்டும். ஒருவர் தான் இருக்குமிடத்திலேயே தனிமையை உருவாக்கிக்கொள்ளவேண்டும். இந்த உலகில் தனித்திருப்பது என்பது இயலாத ஒன்று. மனத்தைத் தனிமைப்படுத்தாமல், உடலை மட்டும் தனிமைப்படுத்துவது உபயோகமற்றது. இடம் விட்டு இடம் மாறிச் செல்லுவதன் மூலம் ஆன்மீக சாதகர்கள் முன்னேறுவதில்லை. உருண்டோடும் கல்லில் பாசி படருவதில்லை. சாதகர்கள், இடம் விட்டு இடம் மாறிச் செல்வதால் அவர்களின் உடல் நிலை பாதிக்கப்படுகிறது. கடவுள் தனக்கென நிச்சயித்துள்ள இடத்தில் இருக்காமல் இதைவிடச் சிறந்த இடம் வேண்டும் என்று தேடிச் செல்லுகிறார்கள். கடைசியில் கோவணத்தைப் போலவும், எருமையைப் போலவும் தமது தவறை உணர்ந்து கொள்ளுகின்றனர்.

பிறருடன் ஒத்துப்போகும் தன்மையை வளர்த்துக்கொள்ளுங்கள். பிறருடன் இணக்கமாக நடந்து கொள்ளுங்கள். மனதை தாராளமானதாக ஆக்கிக்கொள்ளுங்கள்.

## 51. இளவரசன் நரேந்திரன்

இளவரசன் நரேந்திரனின் மனைவி இளவரசி லீலாவதி ஆழ்ந்த பக்தியுடன் ராமனை வழிபடுவது வழக்கம். ஆனால் நரேந்திரன் ஒருபோதும் ராம நாமத்தை உச்சரித்ததில்லை. லீலாவதி இதனால் மிகவும் வேதனை அடைந்தாள். ஒரு தடவையாவது ராம நாமத்தை உச்சரிக்குமாறு தன் கணவனிடம் பல தடவை லீலாவதி கூறியிருக்கிறாள். நரேந்திரன் மிகவும் பிடிவாதமாக இருந்தான். ராம நாமத்தை உச்சரிக்க அவன் மறுத்துவிட்டான்.

ஒரு நாள் காலை லீலாவதி மிகவும் மகிழ்ச்சியாக இருந்தாள். திவானை வரவழைத்து அவரிடம் பின் வருமாறு கூறினாள்: ''இன்று எனக்கு மிகவும் மகிழ்ச்சியான நாள். இதற்கான காரணத்தை நான் சொல்லமாட்டேன். ஆயிரக்கணக்கான பிராமணர் களுக்கும் ஏழைகளுக்கும் அன்னதானம் செய்யுங் கள். இன்றிரவு பட்டாசுகளை வெடிக்கச் செய்யுங் கள். நகரத்தின் எல்லா வாயில்களிலும் வாத்தியங் கள் முழங்கட்டும்.''

திவான், இளவரசி சொல்லியபடி எல்லாவற் றையும் செய்து முடித்தார். நகரம் முழுவதும் மகிழ்ச்சியில் ஆழ்ந்திருந்தது. நகரம் ஏன் இப்படி விழாக்கோலம் பூண்டிருக்கிறது என்று எவருக்கும் தெரியாது.

நகரம் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்திருப் பதைக் கண்ட இளவரசன், திவானைப் பார்த்து, ''திவான் அவர்களே, இன்று என்ன விசேஷம்?'' என்று கேட்டான்.

இந்த விழாச் சிறப்புக்கான காரணம் எனக்கும் தெரியாது. இளவரசிதான் இவ்வாறெல்லாம் செய்யச் சொன்னார்கள்'' என்று திவான் பதிலளித் தார்.

பிறகு இளவரசன் இளவரசியைப் பார்த்து காரணத்தைக் கேட்டான். முதலில் இளவரசி தயங்கினாள். இளவரசன் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கேட்டதால் இளவரசி அனைத்தையும் விபரமாகக் கூறினாள்.

''அன்பே! இன்றுதான் எனது இதயம் மகிழ்ச் யால் நிறைந்திருக்கிறது. எனது மகிழ்ச்சிக்கு

எல்லேயே இல்லே. நான் இருக்கும் நிலேயினே எடுத்துரைக்க என்ருல் இயலவில்லே. நான் விரும்பியதை அடைந்துவிட்டேன். நான் திரும்பத் திரும்பக் கேட்டபோதும் நீங்கள் மறுத்தது, இப்போது நிகழ்ந்திருக்கிறது.''

''நேற்று இரவு தெய்வத்தின் திருநாமத்தை நீங்கள் பலமுறை உச்சரித்தீர்கள். எனக்கு இது போதும். இறைவன் அருள்புரிந்துவிட்டான். இது எனக்கு மிகவும் மகிழ்ச்சியான நாள். இந்த மகிழ்ச்சியைக் கொண்டாடவே திவானிடம் இதையெல்லாம் செய்யச் சொன்னேன்.''

''எந்தப் பெயரை நான் உச்சரித்தேன்?'' என்று நரேந்திரன் தனது மனேவியிடம் கேட்டான்.

''ராம்'' என்று லீலாவதி பதிலளித்தாள்.

''ஓ! எனது இதயத்தின் அடித்தளத்தில் இவ்வளவு நாட்களாக ரகசியமாக வைத்திருந்த பொக்கிஷம் இறுதியில் வெளிப்பட்டுவிட்டதே!'' என்று சொல்லிக்கொண்டே இளவரசன் கீழே வீழ்ந்து இறந்தான்.

லீலாவதி மயங்கினுள். பேச நா எழவில்லே. தனது கணவன் அமைதியாக, சிரத்தையுடன், கர்வமின்றி ஸ்ரீ ர ா ம னி ட ம் பக்தி செலுத்திவந்தது அவளுக்குத் தெரியாது.

ஒரு உண்மையான பக்தன், தன்னே விளம்பரப் படுத்திக் கொள்ளமாட்டான். வேஷதாரியான ஒருவன்தான் தன்னே பக்தன் என்று விளம்பரப் படுத்திக் கொள்ளுகிருன். அவன் ஹரி, ஹரி என்று குரல் எழுப்புகிருன். பல ஜப மாலேகளே கழுத்தில்

அணிந்து கொள்ளுகிறான். போலியான, முதலைக் கண்ணீர் வடிக்கிறான். மக்களின் கவனத்தைக் கவர்ந்து பணம் பறிக்கிறான். எதையும் சுலபத்தில் நம்புகிற அப்பாவி மக்கள் ஏமாற்றப்படுகிறார்கள். ஆனால் வேஷதாரிகள் இறுதியில் அகப்பட்டுக்கொள்ளுகின்றனர். உண்மையான பக்தன், எளிதில் தனது உண்மைத் தன்மையை வெளிப்படுத்துவதில்லை. தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அவன் கவலைப்படுவதில்லை. காலிப் பாத்திரம்தான் அதிகமாக ஒலி எழுப்புகிறது. சமய வேஷதாரிகள் கடவுளையும் மக்களையும் ஏமாற்றுகின்றனர். புனித ஸ்தலங்களில் சமய வேஷதாரிகள் ஏராளமாக இருக்கின்றனர். அவர்கள்தான் அந்த இடத்தின் உண்மையான கழுகுகள். அப்பாவி யாத்ரீகர்களை அவர்கள் ஏமாற்றுகின்றனர்.

ஒரு பக்தனைப் போல உன்னை விளம்பரப்படுத்திக்கொள்ளாதே. உனது ஆன்மீக சாதனையை பிறர் அறியுமாறு செய்யாதே. ஜபம், மற்றும் தியானத்தை விளம்பரப்படுத்தாதே. அவற்றை சிரத்தையுடன் செய். உனது ஜபமாலையை சட்டைக்கு உள்ளே இருக்கும்படி அணிந்து கொள்ளலாம். உனது ஆன்மீக சாதனைகளைப்பற்றி நீயே புகழ்ந்து பேசாதே.

## 52. காமம் கலந்த அன்பு

மோகன் தனது மனைவி சாவித்திரியின் மீது மிகவும் அன்பு செலுத்தினான். சாவித்திரி மிகவும் அழகானவள். வேதாந்த நூல்களைப் படித்திருக்கிறாள் அவள் விவேகமும் பற்றற்ற தன்மையும் உடையவள். தினமும் அவள் தியானப் பயிற்சியில் ஈடுபட்டாள்.

ஒரு நாள் மோகன், சாவித்திரியிடம் பேசிக் கொண்டிருக்கும்போது, ''சாவித்திரி, நாம் இறந்த பின்னர் ஸ்வர்க்கத்துக்குப் போனாலும், நரகத்துக்குப் போனாலும் இருவரும் ஒன்றாகவே இருக்க வேண்டும்'' என்றான்.

''பிரபு, என்னுடனேயே எப்பொழுதும் இருக்கவேண்டும் என்று நீங்கள் எண்ணுகிற அள வுக்கு என்னிடத்தில் என்ன இருக்கிறது?'' என்று சாவித்திரி கேட்டாள்.

''உனது அழகிய முகம், இனிய புன்னகை, அன்பு, கனிவு, உனது சுருண்ட முடி, ரோஜா போன்ற உனது கன்னங்கள், உனது சிவந்த உதடுகள், உனது ஊடுருவிப் பார்க்கும் பார்வை, உனது இனிய குரல் மற்றும் பாட்டு ஆகியவை என்னைக் கவர்ந்து இழுக்கின்றன'' என்று மோகன் பதிலளித்தான்.

''என் உடலில் இரத்தம் குறைந்து என் அழகு மங்கிவிட்டால், எனக்கு அம்மை நோய் வந்து என் முகத்தில் குழிகள் விழுந்தால், என் உடல் முழுவதும் தடித்துவிட்டால், என் முடி உதிர்ந்துவிட்டால், நான் உங்களைக் கடுமையாக நடத்தினால், வேறு யாரிடமாவது நான் காதல் கொண்டால் நீங்கள் என்னுடனேயே இருக்க விரும்புவீர்களா ?'' என்று சாவித்திரி கேட்டாள்.

அவளது வார்த்தைகளைக் கேட்ட மோகன் திகைத்து, மலைத்து நின்றான்.

சாவித்திரி மேலும் சொன்னாள் : ''என் உடல் மீது தாங்கள் கொண்டிருக்கும் ஆசை காரணமாகத் தான் என்மீது அன்பு செலுத்துகிறீர்கள். இது

உண்மையான அன்பு அல்ல. அது நிரந்தரமாக இருக்காது. எல்லோருடைய இதயத்திலும் அழிவற்ற ஆத்மா குடிகொண்டிருக்கிறது. அனைத்து அழகுக்கும் அதுவே ஆதாரம். அது அழகுக்கெல்லாம் அழகாக உள்ளது. மனதைத் தூய்மைப் படுத்துதல், தியானம் இவற்றின் மூலம் நீங்கள் ஆத்ம ஞானம் பெறவேண்டும். அப்பொழுதுதான் உங்களது அன்பு நிலையானதாக இருக்கும். என் உடல்மீது வைத்திருக்கும் ஆசையை அகற்றுங்கள். மனதை உள்நோக்கித் திருப்புங்கள். இதயத்தின் அடித்தளத்தில் மூழ்கி ஆன்ம ஒளியினைப் பெறுங்கள்.

மோகனுக்குத் தெளிவு ஏற்பட்டது. அவன் மனைவியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, அவளைத் தன் குருவாக ஏற்றுக்கொண்டான். அவன் ஆன்மீக சாதனையில் மூழ்கி ஆன்மஞானம் பெற்றான்.

## 53. ராகவனும் அவனது மனைவியும்

ராகவன், தென்னிந்தியாவில் உள்ள சிதம்பரத்தில் பெரும் செல்வந்தரான ஜமீன்தாரின் மகன். மாயவரம் நிலப்பிரபு ஒருவரின் மகள் பங்கஜத்தை அவன் திருமணம் செய்துகொண்டான்.

சில ஆண்டுகள் ராகவனும் அவனது மனைவியும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர். அவர்கள் மூன்று புதல்வர்களையும் இரு புதல்விகளையும் பெற்றனர்.

ஒரு சமயம் ராகவன் வியாபாரத்தில் துணிந்து இறங்கினான். ஆனால் அந்த முயற்சியில் ஓரளவுக்கு சொத்தை இழந்தான். இந்த நெருக்கடியான நேரத்தில் பங்கஜம் தனக்கு வைர நெக்லஸ் செய்து தருமாறு கணவனிடம் கேட்டாள். அவள் விருப்பத்தைப் பூர்த்திசெய்யும் நிலையில் கணவன் இல்லை. ஆதலால் தினமும் அவள் கணவனுடன் சண்டையிட்டுக்கொண்டிருந்தாள்.

இறுதியாக ராகவன் மனைவியிடம் வெறுப்புற்று பின்வருமாறு கூறினான்: ''பங்கஜம், நீ தினமும் என்னிடம் சண்டையிட்டுக்கொண்டிருக்கிறபடியால், நான் வீட்டைவிட்டு வெளியேறி காசிக்குச் சென்று சந்நியாசியாக ஆகிவிடுவேன்.''

கணவன் எச்சரித்த பின்னரும்கூட பங்கஜம் சண்டையிடுவதை நிறுத்தவில்லை.

ஒருநாள் ராகவன் வீட்டைவிட்டு வெளியேறி கடலூருக்குச் சென்றான். அங்கு ஒரு வாரம் தங்கியிருந்துவிட்டு வீட்டுக்குத் திரும்பிவந்தான். அவன், மனைவியைப்பார்த்து, ''பங்கஜம், நான் வீட்டைவிட்டுப்போகிறேன். இனி திரும்பி வரமாட்டேன். நான் சந்நியாசம் மேற்கொள்ளப் போகிறேன். ஆனால் நான் உனக்கு ஒன்று சொல்லவேண்டும். வீட்டை பத்திரமாகப் பார்த்துக்கொள். நமது சொத்துக்களையும், பசு மாடுகளையும், குழந்தைகளையும் கவனமாகப் பார்த்துக்கொள்'' என்று கூறினான்.

ராகவன் வீட்டைவிட்டு வெளியேறி நேராக காசிக்குச் சென்றான். ஸ்ரீ சுவாமி சங்கர பாரதியை அணுகி பின்வருமாறு கூறினான்: ''சுவாமிஜி எனக்கு சந்நியாசம் தந்து அருள்புரியுங்கள். நான் உங்களுக்கு பக்தியுடன் தொண்டு செய்வேன். ஆனால் சுவாமிஜி நீங்கள் எனக்கு காலையில் காபியும் உப்புப்போட்ட அல்வாவும் தரவேண்டும். பிற்பகலில் சாம்பார், ரசத்துடன் உணவு தரவேண்டும். நான் எனது மனைவி, சொத்துக்கள், குழந்தை அனைவரையும் துறந்துவிட்டேன். ஆனால் கடந்த 45 வருடங்களாக நான் காபி அருந்திவருகிறேன். அந்தப் பழக்கத்தை நான் விடவில்லை.''

ஸ்ரீ சங்கர பாரதி பக்தியும் பற்றற்ற தன்மையும் உடைய மகாத்மா. அவர் பிக்ஷை எடுத்து உணவு உட்கொண்டு வந்தார். அவர் எப்படி ராகவனுக்கு காபி, அல்வா, சாம்பார், ரசம் ஆகியவற்றைத் தரமுடியும் ?

சுவாமிஜி ராகவனைப் பார்த்து பின்வருமாறு கூறினார்: ''ராகவன் நீ வீட்டுக்குத் திரும்பிப் போ. நான் பிக்ஷை எடுத்துத்தான் உணவு உட்கொள்ளுகிறேன். உனக்கு இவற்றையெல்லாம் என்னால் தர முடியாது. துறவறம் ஏற்கும் பக்குவம் இன்னும் உனக்கு ஏற்படவில்லை. உனது நாக்கைக் கட்டுப் படுத்து. சில ஆண்டுகள் ஜபம் செய்; எளிய வாழ்க்கையை மேற்கொள். உலர்ந்த ரொட்டித் துண்டை மட்டும் உண்டு வாழமுடியும் என்ற நிலைக்கு நீ ஆயத்தமாகிய பின்னர் என்னிடம் வா.''

ராகவனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அவனால் சுவாமிகளுடன் இருக்க முடியவில்லை. மேலும் அவனது மனம் இன்னும் சொத்துக்கள், மனைவி மற்றும் குழந்தைகள் மீதுதான் இருக்கிறது. ஆகவே அவன் உடனடியாக சிதம்பரம் திரும்பினான்.

துறவறத்தில் கடுமையான விரதங்களை மேற்கொள்ளவேண்டியிருக்கும். வாழ்க்கையில் ஏற்படுகின்ற கஷ்டங்களை முன்னிட்டு துறவறம் மேற்கொள்ள விரும்புகிறவர்கள், புலனடக்கம் கொள்ளாதவர்கள், அல்லது மனதைக் கட்டுப்படுத்தாதவர்கள், அமைதி, தூய்மை போன்ற முக்தியைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய தெய்வீகப் பண்புகளைப் பெறாதவர்கள், மன அழுக்கைப் போக்காதவர்கள், மனம் அலைபாய்வதை நிறுத்தாதவர்கள், தன்னலமற்ற தொண்டு வழிபாடு இவற்றின் மூலம் மன அமைதி பெறாதவர்கள் ஆகியோர்

துறவறம் அடைய முடியாது. அவர்களுக்கு நமது நண்பன் ராகவனுக்கு ஏற்பட்ட நிலைதான் ஏற்படும்.

## 54. கொசு மற்றும் மூட்டைப் பூச்சிகளின் மாநாடு

கொசு: "இறைவா! உடலைத் துளைத்து ரத்தத்தை உறிஞ்சும் அவயவத்தை எனக்குத் தந்திருக்கிறாய்! புத்தம் புதிய ரத்தத்துடன் மனிதனையும் படைத்திருக்கிறாய். சிறிய உடலுடன் எங்களைப் படைத்திருக்கிறாய். ஆபத்துக் காலத்தில் பறந்து செல்ல இறக்கைகளையும் தந்திருக்கிறாய். ஒரு மனிதனிடமிருந்து மற்றொரு மனிதனிடம் பறந்து செல்லவும் திருப்தியாக இரத்தத்தைக் குடிக்கவும் எங்களுக்கு ஆற்றல் தந்திருக்கிறாய். எங்கள் இனத்தின் மீது நீ அன்பும் கருணையும் பொழிந்திருக்கிறாய். ஆனால் எங்களுக்கு ஒரு எதிரியையும் ஏன் படைத்திருக்கிறாய்? காற்று எங்களின் ஒரே எதிரி. அவன் மிகக் கொடியவன். அவனுக்கு நாங்கள் எந்தத் தீமையும் செய்யவில்லை. நாங்கள் ஆர்வத்துடன் உணவு உட்கொண்டிருக்கும்போது எங்களை விரட்டித் தொந்தரவு செய்கிறான். காற்று வந்ததும் நாங்கள் வெகுதூரம் செல்ல வேண்டி இருக்கிறது. அப்பாவிப் பூச்சிகளான நாங்கள் என்ன செய்வோம்? எங்கள்மீது கருணைகொண்டு எங்கள் எதிரியை இந்த பூமியிலிருந்து விரட்டுங்கள்."

இறைவன்: ''குழந்தாய்! நீங்கள் அனைவரும் என் அன்பிற்குரியவர்கள். குற்றம் சாட்டப்படுகிறவர் இங்கு இல்லாமல், நான் தீர்ப்பு வழங்க முடியாது. அவனை அழைத்துவர ஆளனுப்புகிறேன். அவன் கருத்தையும் கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறேன். அதன் பிறகு வழக்கை ஆராய்ந்து தீர்ப்பு வழங்குகிறேன்.''

காற்று, இறைவனின் தர்பாருக்கு வந்ததும், கொசுக்கள் உயிருக்குப் போராடிக்கொண்டு பறந்து செல்ல வேண்டியிருந்தது. வழக்கில் சம்பந்தப்பட்ட இருவரில் ஒருவர் இல்லாத நிலையில் இறைவன் வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்க முடியவில்லை. ஆகவே இறைவன் காற்றைப் பார்த்து, ''அன்பிற்குரிய காற்றே! கொசுக்கள் உன்மீது கடுமையாகப் புகார் தெரிவித்துள்ளன. அவை திரும்பி வந்ததும் வழக்கை விசாரிப்போம்'' என்று கூறினார்.

இறைவனின் சபையில் காற்று இருந்த வரை கொசுக்கள் அங்கு வர முடியவில்லை.

இப்போது அறிவுக் கூர்மையுள்ள ஒரு கொசு, உற்சாகமான யோசனை ஒன்றைக் கூறியது: ''நாம் ஒரு வட்டமேஜை மாநாட்டைக் கூட்டி நமது எதிரியை ஒழிப்பதற்கான திட்டத்தைத் தீட்டுவோம்.''

இந்த யோசனையின்படி மூட்டைப் பூச்சிகள், ஈக்கள், தேனீக்கள், மற்றும் பிற தோழர்களுக்கு அழைப்புக்கள் விடுக்கப்பட்டன. மாநாட்டின் முதல் கூட்டத்தில் கொசுக்கள், மூட்டைப் பூச்சிகளைப் பார்த்து பின்வருமாறு பேசின :

''அன்புச் சகோதரர்களே! நீங்கள் அனைவரும் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். நீங்கள் மனிதனின் ரத்தத்தை திருப்தியாகக் குடிக்கிறீர்கள். அவனுடைய படுக்கையில் அவனுடனேயே நீங்கள் வாழுகிறீர்கள். உங்களுக்கு எதிரிகளே இல்லை. எங்கள் நிலை மிகவும் பரிதாபகரமானது. காற்று, எங்களின் முதல் எதிரி. அவன் நெருங்கி வந்தால் நாங்கள் விரட்டப்படுகிறோம். மனிதனை நெருங்கி நாங்கள் செல்ல முடியவில்லை. எங்கள்

முயற்சிகள் முறியடிக்கப்படுகின்றன. உங்கள் நிலை பொறாமைப்படத் தக்கதாக உள்ளது. எங்கள் எதிரியை ஒழிப்பதற்கு ஆலோசனை பெறுவதற்காக நாங்கள் இங்கே கூடியிருக்கிறோம்.''

மூட்டைப் பூச்சிகள்: ''சகோதரர்களே! மாயையின் உண்மைத் தன்மையை நீங்கள் உணர்ந்துகொள்ளவில்லை. தூரத்துப் பச்சை கண்ணுக்கு அழகு. ஒரு டாக்டர், ஒரு வழக்கறிஞர் தன்னைவிட மகிழ்ச்சியாக இருப்பதாக எண்ணுகிறார். ஒரு வியாபாரி, ஒரு கல்லூரிப் பேராசிரியருக்கு அதிக விடுமுறை நாட்கள் கிடைப்பதால் அவர் மகிழ்ச்சியாக இருப்பதாக நினைக்கிறார். அதுபோலவே, நாங்கள் மகிழ்ச்சியாக இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள். எங்கள் நிலை மிகவும் துன்பம் நிறைந்ததாக உள்ளது. எங்கள் கதையைக் கேளுங்கள். உங்களைப்போல நாங்கள் மனிதனைக் கொட்டுவதில்லை. அவனை எந்த வகையிலும் நாங்கள் காயப்படுத்துவதில்லை. எங்களுக்குப் பல வழிகளும் உபாயங்களும் தெரியும். மனிதனுக்குத் தெரியாமல் அவன் ரத்தத்தை நாங்கள் உறிஞ்சி விடுவோம். அவன் நிம்மதியாகத் தூங்குவான். நாங்கள் படுக்கையின் துவாரங்களில் மறைந்து கொள்ளுவோம். தலையணைக்கு அடியிலும், ஜமக்காளத்தின் மூலைகளிலும் நாங்கள் மறைந்து கொள்ளுவோம். மனிதன் எங்களைத் தேடத் துவங்கும்போது, நாங்கள் பிடிபட்டபோதும் அசையாமல் இருப்போம். நாங்கள் இறந்துவிட்டது போல பாசாங்கு செய்வோம். ஆனால் மனிதன் பழிவாங்கும் எண்ணத்தில் எங்களை இரக்கமின்றி நசுக்குகிறான். நீங்கள் உங்களது இறக்கைகளால் பறந்து செல்லுகிறீர்கள். நீங்கள் அதிர்ஷ்டம் செய்தவர்கள் என நாங்கள் நினைக்கிறோம். நாங்கள்

இறைவனை அணுகி எங்களுக்கு இறக்கைகளைத் தருமாறு பிரார்த்திக்கப்போகிறோம். அப்படித் தராவிடில் மனிதனை கண் இன்றிப் படைக்குமாறு பிரார்த்திக்கப் போகிறோம். அப்போதுதான் நாங்கள் திருப்தியாகவும் மகிழ்ச்சியாகவும் இருப்போம். அதன் பிறகு எங்களுக்கு ஒரு குறையும் இருக்காது.''

ஈக்கள் : ''சகோதரர்களே, நீங்கள் அனைவரும் மகிழ்ச்சியாக இருப்பதாக நாங்கள் நினைக்கிறோம். நீங்கள் மனிதனின் ரத்தத்தைக் குடித்துவிட்டு ஆனந்தம் அடைகிறீர்கள். எமது நிலை உண்மையில் மிகவும் பரிதாபமானது. எமது துன்பத்தை விவரிக்க முடியாது. நாங்கள் மனிதனின் ரத்தத்தைக் குடிப்பதற்காக அவன் மீது அமருகிறோம். அவன் மிகவும் கொடுமையானவன். அவன் எங்களை நன்றாக அறைந்து உடனே விரட்டி விடுகிறான். நாங்கள் தந்திரமாக தப்பித்து விடுகிறோம். ஆதலால் மனிதனால் நசுக்கப்படுவதில்லை. ஆனால் நாங்கள் பல நாட்கள் பட்டினிகிடக்க வேண்டியிருக்கிறது, ரத்தத்தைக் குடிக்க நாங்கள் மிகவும் விரும்புகிறோம். ஆனால் ஒரு துளி ரத்தத்தைக் கூட நாங்கள் பெற முடிவதில்லை. நாம் அனைவரும் கடவுளைக்கண்டு, மனிதனைக் கைகளின்றிப் படைக்குமாறு பிரார்த்தித்துக் கொள்ளுவோம்.''

கடவுளின் தர்பாரில் மூட்டைப்பூச்சிகள், கொசுக்கள், ஈக்கள் ஆகியவை தமது புகார்களைத் தெரிவித்தன. கடவுள் அவற்றின் புகார்களை பொறுமையாகக் கேட்டார். எதுவும் பேசவில்லை. கடவுள் கூட இதுபோன்ற வழக்குகளில் தீர்ப்பு வழங்க முடியாது. எல்லோருடைய குறைகளையும் முழுமையாகப் போக்கிவிட முடியாது.

அலுவலகங்கள். ஆஸ்ரமங்கள், ஸ்தாபனங்கள் ஆகியவற்றில் உள்ளத்தால் உயர்வு பெருதவர்கள், பொருமை, வெறுப்பு, சிறுமைத்தனம் ஆகியவை காரணமாக தம்முள் சண்டையிட்டுக் கொண்டு தமது குறைகள் அனைத்தையும் உயர் அதிகாரிகளிடம் தெரிவிக்கின்றனர். இத்தகைய நேரங்களில் உயர் அதிகாரிகள் பேசாமல் இருக்க வேண்டும். அப்போதுதான் அமைதி நிலவும்.

சாதகர்கள் அல்லது குமாஸ்தாக்கள் தமது குருநாதர் அல்லது உயர் அதிகாரிகள் தருகின்ற அறிவுரைகளை ஏற்று அதன் மூலம் தன்னை உயர்த்திக் கொள்ள முயற்சிக்கமாட்டார்கள். அவர்கள் மாயையின் தன்மையை அறிந்து கொள்ளவில்லை. அவர்கள் அகந்தை நிறைந்த பழக்க வழக்கங்களை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிருர்கள்; அவர்களது மனம் பழைய தீய வழிகளையே நோக்கிச் செல்ல அனுமதிக்கிருர்கள். மாணவர்கள் அகந்தை, தற்பெருமை, துடுக்குத்தனம், தன்முனைப்பு ஆகியவற்றுடன் இருந்தால் ஆசிரியர்கள் என்ன செய்ய முடியும் ?

இந்த உலகில் அமைதியின் முதல் எதிரி பொருமை. அது சிறுமதியின் வடிவத்தைக் கொள்ளுகிறது. பெருந்தீமையையும் விஷமத்தையும் தோற்றுவிக்கிறது. அது படித்தவர்களையும் துறவிகளையும் கூட விடுவதில்லை. அது மாயையின் பிரதான ஆயுதம்.

ஒரு துறவி புகழ் பெற்றுவிட்டால் மற்றவர்கள் பொருமைப்படுகிருர்கள். செல்வத்தைத் துறப்பது மிகவும் எளிது. மனைவியையும் குழந்தைகளையும்

துறந்துவிடுவதும் எளிது. ஆனால் பெயரையும் புகழையும் துறப்பது மிகமிகக் கடினம்.

தாராளமான இதயம், ஆத்மபாவம் இவற்றை வளர்த்துக்கொண்டு, அனைத்து வடிவங்களிலுமுள்ள பொறாமையினை அழித்து, 'நான் யார்?' என்று சிந்திப்பவன்தான் உலகிலேயே மிகச் சிறந்த மகிழ்ச்சியும் அமைதியும் பெற்ற மனிதன். தன்னிடம் இருப்பதைக்கொண்டு திருப்தி அடையாதவர்கள், அமைதியை இழந்து, மூட்டைப்பூச்சிகள் கொசுக்கள் மற்றும் ஈக்கள் போலக் கஷ்டப்படுகின்றனர். இந்த உலகில் இறைவன் ஒவ்வொரு மனிதனுக்கும் சில சௌகரியங்களையும், சில அசௌகரியங்களையும் தந்திருக்கிறான். நன்மையும் தீமையும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்ட சொற்கள். ஒவ்வொன்றிலும் நன்மையைக் காணுங்கள். எளிய, திருப்திகரமான வாழ்க்கையை நடத்தி, அமைதியும் பேரானந்தமும் பெறுங்கள்.

உலகில் இன்பம் மற்றும் துன்பம், நன்மை மற்றும் தீமை, சௌகரியம் மற்றும் அசௌகரியம், வசதி மற்றும் வசதியின்மை ஆகியவை ஒன்றையொன்று சார்ந்துள்ளன. நீங்கள் உன்னதமான அமைதியை ஆத்மாவில்தான் காணமுடியும். ஆத்ம ஞானம் பெற்று, குறைகள், அசௌகரியங்கள், வசதியின்மை ஆகியவற்றிலிருந்து விடுபட்டிருங்கள்

எல்லா உயிர்களிலும் ஒரே ஆத்மா இருக்கும்போது ஒருவர் எப்படி மற்றவர் மீது பொறாமைப் பட முடியும்? ஒருவர் எப்படி மற்றவரைச் சுரண்ட முடியும்? ஒருவர் எப்படி மற்றவரை வெறுக்க முடியும்? எல்லா உயிர்களிலும் ஒரே ஆத்மா குடிகொண்டிருப்பதை உணருங்கள். என்றும் நீடித்திருக்கும் அமைதியில் நிலைத்திருங்கள்.

# 55. இளவரசி வித்யாவதி

இளவரசி வித்யாதேவி, தனது பதினெட்டாவது வயதிலேயே ஆட்சிக் கட்டிலில் அமர்ந்துவிட்டாள். அவள் மிகவும் பக்தியும் பண்பும் உடையவள். அவள் கீதை, உபநிஷத், பிரம்ம சூத்திரம் ஆகியவற்றையும் அறுவகைத் தத்துவங்களையும் நன்கு கற்றிருந்தாள். அவளது பெற்றோரும் உறவினர்களும் பலமுறை கேட்டுக்கொண்டபோதிலும் அவள் திருமணம் செய்துகொள்ளவில்லை. அவள் பெருமளவில் விவேகம் மற்றும் பற்றின்மையைக் கொண்டிருந்தாள். அவள் தியானத்திலும் உபநிஷத்துக்களைப் படிப்பதிலும் நேரத்தைச் செலவிட்டாள். அவள் ராணி சூடாலைபோல சிறந்த நிர்வாகி; ஆற்றல் மிகு அரசியல்வாதி.

இளவரசி தீவிர தவமும், சாதனையும் புரிந்து வந்தாள். அவள் ஆன்மஞானம் பெற்றவள். அவள் தினமும் பிற்பகல் 2 மணி முதல் 4 மணிவரை வேதாந்த வகுப்புக்களை நடத்திவந்தாள். பல பண்டிதர்களும் அறிஞர்களும் அந்த வகுப்பில் கலந்துகொள்ளுவார்கள். அனைவரின் ஐயங்களையும் அவள் அற்புதமான முறையில் போக்கினுள்.

ஒரு ஏழை பிராமணனும் தொடர்ந்து அவளது வகுப்புக்கு வந்துகொண்டிருந்தான். அவன் வகுப்பு ஆரம்பிப்பதற்கு அரை மணி நேரம் முன்னதாகவே வந்துவிடுவான். எல்லோரும் சென்ற பிறகுதான் செல்வான். அவன் இளவரசிக்கு அருகிலேயே அமர்வான். இந்த ஏழை பிராமணன் வேதாந்தம் கற்பதில் மிகவும் ஆர்வம் கொண்டிருப்பதாக மக்கள் எண்ணினர்.

ஒருநாள் வகுப்பு முடிந்ததும் இளவரசி அரண்மனைக்குச் சென்றுள். அந்த ஏழை பிராமணனும்

ஓசைப்படாமல் பின்தொடர்ந்து சென்றான். இளவரசி அரண்மனையை அடைந்ததும்தான் அந்த ஏழை பிராமணன் தன் பின்னே வருவதை கவனித்தாள். அவள் அவனை அன்புடன் வரவேற்று அமரச் செய்து, ''நான் உங்களுக்கு எந்த வகையில் தொண்டு செய்ய முடியும்?'' என்று வினவினாள்.

''நீ உலகிலேயே மிகச் சிறந்த அழகி. உன் அழகில் நான் மிகவும் மயங்கிவிட்டேன். நான் உன்னைத் திருமணம் செய்துகொள்ள தீவிர ஆர்வம் கொண்டிருக்கிறேன்'' என்று ஏழை பிராமணன் பதிலளித்தான்.

''உங்களது விருப்பத்தை அறிந்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். உங்களது விருப்பத்தை நான் பூர்த்தி செய்கிறேன்'' என்று இளவரசி பதிலளித்தார்கள்.

இளவரசி சம்மதம் தெரிவித்ததும் பிராமணன் மிகவும் மகிழ்ந்தான். ''திருமணத்துக்கு ஒரு தேதியை நிச்சயிக்கிறாயா?'' என்று அவன் இளவரசியைக் கேட்டான்.

''நீங்கள் விரும்புகிற நாளில் திருமணத்தை வைத்துக்கொள்ளலாம்'' என்றாள் இளவரசி.

பிராமணன்: ''நாளையே நல்ல நாள். நான் வரட்டுமா?''

இளவரசி: ''ஓ! தாராளமாக''

பிராமணன்: ''நான் எந்த நேரத்தில் வரவேண்டும்?

இளவரசி: ''நீங்கள் பிற்பகல் 2 மணிக்கு வரலாம்.''

பிராமணன்: ''நான் உனக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன். நான் உலகிலேயே மிகவும் அதிர்ஷ்டசாலி. நான் திருமணத்துக்கு ஆயத்த மாக வந்து விடுகிறேன். நான் கொண்டுவரும் பொருட்களுடன் உள்ளேவர என்னை அனுமதிக்கு மாறு வாயில்காப்போனிடம் கூறிவிடு. திருமணத் துக்கு வேண்டிய எல்லாப் பொருட்களையும் நான் கொண்டுவந்து விடுகிறேன்.''

பிராமணன் முன்பாகவே இளவரசி தனது பணி யாட்களை அழைத்து திருமணம் பற்றி அறிவிக்க உத்திர விட்டாள். பிராமணனை மறுநாள் பிற் பகல் 2 மணிக்கு உள்ளே அனுமதிக்குமாறு வாயில் காப்போனிடம் கூறினாள். அவளது உறவினர்களும் அதிகாரிகளும் மலைத்து நின்றனர். ஒரு ஏழை பிராமண அர்ச்சகரை இளவரசி திருமணம் செய்து கொள்ளப் போவதை அறிந்து அவர்கள் வருத்தம் அடைந்தனர்.

பிராமணன் அரண்மனையிலிருந்து ஒரு பணம் கடன் கொடுக்கும் கடைக்குச் சென்று அதிகமான அளவு வட்டிக்கு பெருந் தொகையை வாங்கினான். பட்டுப்புடவை, ஒரு படுக்கை, தலையணைகள் மற் றும் பிற பொருட்களை வாங்கினான். அன்றிரவு அவனுக்குத் தூக்கமே வரவில்லை.

அடுத்த நாள் அவன் பட்டு ஆடைகளை அணிந் துகொண்டான். தலைப்பாகை அணிந்துகொண் டான். எல்லாப் பொருட்களையும் எடுத்துக் கொண்டு அரண்மனைக்குப் புறப்பட்டான். வாயில் காப்போன் உடனடியாக அரண்மனைக்குள் அவனை அனுமதித்தான். வித்யாவதி வேதாந்தம்பற்றி சொற்பொழிவு செய்து கொண்டிருந்த இடத்துக் குள் நுழைந்தான். அவளை வணங்கிவிட்டு கம்பீர

மாக அமர்ந்தான். வேதாந்தத்தில் முக்கியமான ஒரு கருத்தை இளவரசி விளக்கிக்கொண்டிருக்கும் போது அந்த பிராமணன் குறுக்கிட்டுப் பேசினான். ''நான் எல்லாப் பொருட்களையும் கொண்டு வந்திருக்கிறேன். ஆகவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யட்டுமா ?''

இளவரசி அமைதியாக பதிலளித்தாள். ''ஓ! தாராளமாகச் செய்யுங்கள். நான் இப்பொழுதே தயாராக இருக்கிறேன்''

சிறிது நேரத்தில் பிராமண அர்ச்சகர் கட்டிலை அலங்கரித்தார். மீண்டும் குறுக்கிட்டு, ''நேரம் ஆகிறது. நேரம் பொன்னானது, திருமணச் சடங்கை பிற்பகல் 2 மணிக்கு வைத்துக்கொள்ளலாம் என்று நீ சொல்லியிருந்தாய். இதனை மறந்து விட்டாயா ? நீ வேதாந்தம்பற்றிப் பேசியது போதும். நீ சொன்னபடி செய்'' என்று கூறினான்.

இளவரசி பொறுமையின் உருவகம். அவளுடைய மன அமைதியை எதனாலும் கெடுக்க முடியாது. அவள் தன்னுடைய தெய்வீக இயல்பில் நிலைத்திருந்தபடியால், அவள் எப்போதும், எந்த நிலையிலும் மன அமைதியுடனும், நிதானத்துடனும் இருந்து வந்தாள். அவள் பதிலளித்தாள்: ''நான் உங்களை கவனித்துவிட்டு பிறகு வகுப்பைத் தொடர்ந்து நடத்துகிறேன்.''

அவள் சொற்பொழிவை நிறுத்திவிட்டு கட்டிலில் அமர்ந்தாள். கட்டில் சொற்பொழிவு நிகழும் மேடையிலேயே போடப்பட்டிருந்தது. ''அன்பரே! திருமணச் சடங்கிற்கு நான் இப்போது தயார். வாருங்கள் என் அருகில் வந்து அமருங்கள்'' என்று இளவரசி கூறினாள்.

பிராமணன் பின் வருமாறு பதிலளித்தார்: நீ விபரந்தெரியாத பெண். உலகியல் விஷயங்கள் எதுவும் உனக்குத் தெரியாது. இந்தச் சடங்கை நாம் இருவரும் தனித்து இருந்து செய்ய வேண்டும். பிறர் முன்னிலையில் செய்யக் கூடாது. ஆதலால் இந்தக் கட்டிலைத் தனியறையில் போடுமாறு உனது பணியாட்களிடம் சொல்.''

இளவரசி அதற்கு மறுமொழியாகப் பின்வருமாறு கூறினாள். ''பொதுமக்களைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். நீங்கள் வந்தமருங்கள். வகுப்பைத் தொடர்ந்து நடத்தவேண்டும். அதற்காக மக்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்தப் பணியை நான் நிறைவேற்றியாக வேண்டும்.''

பிராமணனுக்கு நடுக்கம் ஏற்பட்டது. வாய் பேச இயலவில்லை. பிறகு இளவரசி கட்டிலிலிருந்து இறங்கிவந்து பிராமணனைப் பார்த்து பின்வருமாறு பேசினாள்: ''நீ ஒரு பிராமணன். நான் ஒரு க்ஷத்திரியகுலப் பெண். நீ காமவெறியில், புத்தி தடுமாறி அளவுக்கு மீறி ஆசைப்பட்டாய். ஒரு பிராமண அர்ச்சகரின் பண்பான செயலா இது?''

''தீயசெயலை இரகசியமாகச் செய்ய நீ விரும்பினாய். நீ செய்வது சரி என்று உனக்குத் தோன்றினால், மக்களைப்பற்றி நீ கவலைப்படவேண்டாம். நீ ஒன்றை ரகசியமாகச் செய்யவேண்டும் என்று சொல்லும்போது, முறையற்ற, நியாயமற்ற ஒரு செயலை நீ செய்யப்போகிறாய் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. இரகசியமாகச் செய்யும் எதுவும் பாவச் செயல். ஒரு செயலை மக்களுக்குத் தெரியாமல் செய்துவிட்டாலும்கூட, உன் இதயத்தில் குடியிருக்கும் இறைவனிடமிருந்து அதனை நீ மூடி மறைத்துவிட முடியாது. அவர் உன் செயல் அனைத்தையும் கவனித்துக்கொண்டிருக்கிறார். உனது

எண்ணங்களையும் மனப்போக்குகளையும் அவர் அறிவார். மக்களை ஏமாற்றிவிடலாம் என நீ நினைக்கக் கூடும். ஆனால் உன்னால் இறைவனை ஏமாற்ற முடியாது. நீ பிறரை ஏமாற்றுவதன்மூலம் உன்னை நீயே ஏமாற்றிக்கொள்கிறாய். ஆன்மாவைத் தவிர வேறு எதுவும் இல்லை. உண்மையில் அனைத்தும் ஆன்மா அல்லது பிரம்மம். இருப்பது ஒன்றே; அதைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஆத்மாவை உணர்ந்த மகான்களின் திட்டவட்டமான அறிவிப்பு இது. தீய செயல்களைச் செய்ய ஒருபோதும் முயற்சிக்காதே; முயற்சி செய்தால் நீ அழிக்கப்படுவாய்.

''மற்றொரு விஷயம். ஒரு பெண்ணை மணந்து கொள்ள விரும்பும் கணவன் அவளைவிட அறிவிற் சிறந்து விளங்கவேண்டும். ஒவ்வொரு விஷயத்திலும் அவன் அவளைக்காட்டிலும் உயர்ந்தவனாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவன் இல்லற வாழ்க்கையை அமைதியாக நடத்த முடியும். நீ நடுங்குகிறாய். என்முன் நிமிர்ந்து நிற்கும் சக்தி உன்னிடம் இல்லை. எனக்குச் சமமாக உனக்கு நான் இருக்கை தரும்போது நீ என் காலடியில் அமருகிறாய். நீ என்னிடம் மெலிந்த குரலில், கெஞ்சும் குரலில் பேசுகிறாய். என்னைத் திருமணம் செய்து கொள்ளும் தகுதி உனக்கு இருக்கிறதா?''

''நீ ஐம்பது வயதைக் கடந்துவிட்டாய். உனது பற்களிற் பல விழுந்துவிட்டன. உனது தலைமுடி நரைத்துவிட்டது. ஆயினும் ஆசை உன்னை விடவில்லை. மற்றொரு சாதியைச் சார்ந்த ஒரு இளம் பெண்ணை நீ திருமணம் செய்து கொள்ள விரும்புகிறாய். பிராமண அர்ச்சகராக இருக்கும் நீ பற்றற்ற தன்மை, விவேகம், சாந்தம், புலனடக்கம் ஆகிய பண்புகளைப் பெற்றிருக்க வேண்டும். இந்த வயதில் நீ தியானம் செய்ய வேண்டும். நீ இந்த மாதிரி நடந்துகொள்ளுவது முறையா?''

''காமம் உன்னை வென்று விட்டது. உன்னிடம் விவேகம் என்னும் சக்தி இல்லை. கற்புநெறி தவருத வாழ்க்கையின் சிறப்பை நீ உணரவில்லை. உனது புலன்களை திருப்திப்படுத்தி ஒரு கணப்பொழுது மகிழ்ச்சி அடைய, அழுக்கு நிறைந்ததும் அழியக் கூடியதுமான ஒரு பெண்ணின் உடலை நாடி நீ ஓடுகிருய். அழகின் சிகரமாக உன் இதயத்தில் இருப்பதை நீ மறந்துவிட்டாய். நிலையான அமைதி யையும் நீடித்த பேரானந்தத்தையும் உனக்குத் தரவல்ல அமரத்துவம் நிறைந்த மூலப் பொருளை அடைய நீ முயற்சிக்கவில்லை. அறவழியில் நடந்து, சத்தியத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம்தான் நீ உன்னத நிலையினை அடைய முடியும். நீ பல மாதங் களாக எனது வகுப்பில் கலந்து கொண்டாலும், எந்த நற்பலனையும் பெறவில்லை. நீ எந்தவொரு ஆன்ம சாதனையும் செய்யவில்லை. பிரம்மச் சரியத்தை கடைப்பிடிப்பதன் மூலமும், இடையருது தியானம் செய்வதன் மூலமும் காமம் என்னும் அரக்கனைக் கொன்றுவிடு. உனது உண்மைத் தன்மையை உணர்ந்து சுதந்திரமாக இரு. உன்னை நான் உலகியல் துன்பத்திலிருந்து விடுவித்து, உயர்த்துகிறேன்.''

பிராமணன், இதுபற்றி தீவிரமாக சிந்தித் தான். இப்போதுதான் அவனுக்கு புத்தி வந்தது. அவன் இப்போது தனது தவறை உணர்ந்து அதற் காக வருந்திஞன். அவன் வித்யாவதியின் பாதங் களில் வீழ்ந்தான். கைவல்யத்தின் உண்மையை தனக்கு விளக்கியுரைக்க வேண்டிஞன். அவன் இளவரசியிடம் பரிபூரணமாக சரணுகதி அடைந் தான். அவளைத் தனது குருவாகவும் ஏற்றுக் கொண்டான். அவன் அவளது சொற்படி நடந்து, தீவிர தவம் செய்தான். அவன் தனது புலன்களை ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தான்; தெய்

வீகப் பண்புகளை வளர்த்துக்கொண்டான். இறுதியில் அவன் வாழ்க்கையின் லட்சியத்தை அடைந்தான்.

## 56. ராணி கேகயி

கேகயி, கேகய நாட்டு அரசரின் ராணி. அவள் கைகேயியின் தாயார். விலங்குகள், பறவைகள், பூச்சிகள் ஆகியவை பேசும் மொழியினைப் புரிந்து கொள்ளும் ஞானம் கேகய நாட்டு அரசனுக்கு இருந்தது. சாமிகா ரிஷி இந்த ஆற்றலை அரசனுக்குத் தந்து அருளினார். அந்த ரிஷி இந்த வரத்தை மன்னனுக்குக் கொடுத்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்: ''மன்னா! பறவைகளும் விலங்குகளும் தமக்குள் பேசிக்கொள்வதைப் புரிந்துகொள்ளும் வகையில் உனக்கு நான் வரமளித்திருக்கிறேன். பறவைகள் என்ன பேசிக்கொண்டன என்பதை, அறிய விரும்பும் மற்றவர்களுக்கு நீ எடுத்துச் சொன்னால் உனது தலை ஆயிரம் துண்டுகளாக வெடித்துச் சிதறிவிடும் என்பதை நினைவில் வைத்துக் கொள்.''

ஒருநாள், மன்னன் அரசியுடன் தோட்டத்தில் அமர்ந்திருந்தான். ஒரு எறும்பு அரிசி ஒன்றை எடுத்துக்கொண்டு தனது இருப்பிடத்தை நோக்கி விரைந்து செல்வதை அரசன் கண்டான். மற்றொரு எறும்பு வழிமறித்து, ''நண்பா நான் மிகவும் பசியுடன் இருக்கிறேன். எனக்கு அந்த அரிசியைக் கொடு'' என்று கேட்டது.

முதலில் வந்த எறும்பு பதிலளித்தது: ''முடியாது. ஏனெனில் நீ உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த எறும்பு. தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த என்னிடமிருந்து நீ அரிசியைப் பெற முடியாது.''

எறும்புகளிடத்தில்கூட சிறுமைத் தனமான இந்த வேறுபாடுகள் இருப்பதைக் கண்ட மன்னர் வாய்விட்டுச் சிரித்தார்.

அருகில் அமர்ந்திருந்த அரசி, அரசன் சிரித்தது ஏன் என வினவினுள். ரிஷி கொடுத்த எச்சரிக்கை காரணமாக அரசன் உண்மையைச் சொல்ல முடியவில்லை.

ஆனுல் அரசி பிடிவாதமாக இருந்தாள். ''நீங்கள் என்னிடம் எதையோ மறைக்கிறீர்கள். இந்த ரகசியத்தை எனக்கு நீங்கள் வெளிப்படுத்தும் வரை நான் உணவு உட்கொள்ளமாட்டேன்; எதுவும் செய்யமாட்டேன்'' என்று அரசி கூறினுள்.

அரசன் இக்கட்டான நிலையில் அகப்பட்டுக் கொண்டான். என்ன செய்வது என்று அவனுக்குப் புரியவில்லை. கடைசியாக அவன் அரசியிடம் பின்வருமாறு கூறினுன். ''அன்பே, சாமிகாரிஷி விடுத்துள்ள எச்சரிக்கையின் காரணமாக என்னுல் உனக்கு உண்மையைச் சொல்ல முடியவில்லை. அந்த உண்மையை நான் உனக்குச் சொன்னுல் எனது தலை ஆயிரம் துண்டுகளாக வெடித்துச் சிதறிவிடும். நான் என்ன செய்வேன்? உனது பிடிவாதத்தை விட்டு என்னைக் காப்பாற்று.''

உண்மையை நீங்கள் எனக்குச் சொல்வதால் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றி நான் கவலைப்படவில்லை. நீங்கள் சிரித்ததற்கான காரணத்தை நான் அறிய விரும்புகிறேன்'', என்று அரசி கூறினுள்.

இந்நாட்களில் கேகயி, கைகேயி போன்ற பெண்கள் இருக்கத்தான் செய்கிறுர்கள். அவர்கள் பிடிவாதமும் முரட்டுத்தனமும் உடையவர்களாக

இருக்கிறார்கள். இது அவர்களுக்கு அழகல்ல. அவர்கள் நளாயினி, சாவித்திரி போன்ற பெண்களாக வாழவேண்டும்.

மனைவியின் ஆவலைப் பூர்த்தி செய்யும் வழி எதுவும் அறியாத அரசன் ஆழ்ந்த யோசனைக்குப் பின்னர் பின்வருமாறு கூறினான்: ''என் உயிர் போவதைப்பற்றி நீ கவலைப்படவில்லை: உண்மையை நீ அறிய விரும்புகிறாய். காசியில் இறந்தால் நான் முக்தி அடைவேன். ஆதலால் இந்த உண்மையை உனக்குக் காசியில் சொல்லிவிட்டு இறந்துவிடுகிறேன்.''

அடுத்த நாள் அரசனும் அரசியும் காசிக்குப் புறப்பட்டார்கள். அங்கு சென்றதும் உண்மையைச் சொல்லுமாறு அரசி வற்புறுத்தினாள். ''அது என்ன என்பதை உனக்கு மூன்று நாட்களுக்குப் பிறகு சொல்லுகிறேன்'' என்று அரசன் கூறினான்.

அரசன் கவலையில் மூழ்கினான். தன் விதியை நொந்துகொண்டு, அருகில் உள்ள குன்றுகளில் உலாவச் சென்றான். அங்கு ஒரு மரத்தினடியில் அமர்ந்தான். நடந்த களைப்பும், பசியும் அரசனை வாட்டியது. அந்த நேரத்தில் இரு வெள்ளாடுகள் பேசிக்கொள்வதை அவன் கேட்டான். பெண் ஆடு ஆண் ஆட்டிடம் பின்வருமாறு கூறியது: ''கிணற்றில் இருக்கும் புல்லை எனக்கு எடுத்துவந்துகொடு. இல்லையென்றால் நான் உன்னுடன் வாழமாட்டேன். உன்னைவிட்டு நான் பிரிந்துவிடுவேன்''

ஆண் ஆடு பதிலளித்தது: ''என்ன முட்டாள்தனமாகப் பேசுகிறாய்! அங்கே இருக்கும் புல்லை எடுக்கச் செல்வது ஆபத்தானது என்பது உனக்குப் புரியவில்லையா? தண்ணீர் இல்லாத படுகுழியில் விழுந்து நான் இறந்துவிடுவேன்.''

''எனக்கு எதைப்பற்றியும் கவலை இல்லை. எனக்கு அந்தப் புல்தான் வேண்டும்'' என்று பெண் ஆடு கூறியது.

ஆண் ஆடு கோபமுற்று பெண் ஆட்டைத் தன் கொம்புகளால் முட்டித் தள்ளியது. பெண் ஆட்டின் உடம்பிலிருந்து இரத்தம் கொட்டியது. பெண் ஆடு தனது பிடிவாதத்தை விட்டுத் தன்னை மன்னிக்குமாறு வேண்டியது.

அரசனுக்கு ஒரு வழி தோன்றியது. அவன் தனது மாளிகைக்குத் திரும்பிச் சென்றான். அரசி வழக்கம் போல உண்மையைச் சொல்ல வற்புறுத்தினாள். அரசன் நீண்ட பிரம்பு ஒன்றை எடுத்து அவளைக் கடுமையாக அடித்தான். ''இப்படியே நீ சொல்லிக் கொண்டிருந்தால் நான் உன்னைக் கொன்றுவிடுவேன். உனக்கு என்ன வேண்டும்? வெளிப்படையாகச் சொல். இரகசியத்தை அறிய வேண்டும் என்று நீ இன்னும் வற்புதித்துகிறாயா?''

அரசனின் இந்தப் போக்கைக் கண்டு அரசி பயந்துபோனாள். அவள் தன்னை மன்னிக்குமாறு வேண்டினாள். ''இல்லை பிரபு! என்னைக் காப்பாற்றுங்கள். உங்களது இரகசியங்கள் எதையும் நான் அறிய விரும்பவில்லை. என்னைக் கொடுமையாக அடிப்பதை நிறுத்துங்கள். இன்றுமுதல் நாம் மகிழ்ச்சியாக வாழலாம்'' என்று கூறினாள்.

கேகய நாட்டு ராணியைப் போல மனமும் பிடிவாதம் பிடிக்கும். சாதகர்களே! எச்சரிக்கையாக இருங்கள். ஆசைக்கு அடிபணியாதீர்கள். நீங்கள் எச்சரிக்கையாக இல்லையென்றால் கப்பல் கவிழ்ந்துவிடும். படகுக்குள் தண்ணீர் செல்ல அனுமதிக்கக்கூடாது. தண்ணீரின்மீது எச்சரிக்கையாகப்

பயணம் செய்ய வேண்டும். உலகத்தில் வாழுங்கள். உலகத்தின் கறைகள் உங்களைப் பாதித்துவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். மாயையை வெற்றி கொள்ளுங்கள். விவேகம் என்னும் இரும்பு ஆயுதத்தைப் பயன்படுத்துங்கள். அறியாமை என்னும் முடிச்சை வெட்டி எறியுங்கள். அமைதி மற்றும் பேரானந்தம் என்னும் உயர்ந்த நிலையினை அடையுங்கள்.

நீங்கள் அனைவரும் காமம், கோபம், பேராசை ஆகியவற்றிலிருந்து விடுபட்டு இருங்கள்! இந்த வாழ்க்கையிலேயே ஜீவன் முக்தர்களாக வாழுங்கள்!

## 57, மனப் போக்கை கவனியுங்கள்

பீஹாரில் ராஜாசிங் பகதூர் என்ற ஒரு மன்னன் வாழ்ந்து வந்தான். ஆனந்தபுரியில் துறவிகளுக்காக ஒரு பெரிய ஆஸ்ரமம் இருக்கிறது.

ஆஸ்ரமத்தில் உள்ள துறவிகளும் பிரம்மச்சாரிகளும் எப்போதும்இனிப்புப் பண்டங்களைத் தின்பதிலும் பானங்களை அருந்துவதிலும் நேரத்தைச் செலவிட்டு வருகின்றனர் என்று திவான்களும் அமைச்சர்களும் மன்னனிடம் கூறினர். அவர்கள் தமது நேரத்தில் பெரும்பகுதியை உறக்கத்தில் கழிக்கின்றனர் என்றும் அவர்கள் ஆன்மீக சாதனைகள் அல்லது தியானத்தில் ஈடுபடுவதில்லை என்றும் அவர்கள் கூறினர். வாரம் ஒரு முறையாவது ஆஸ்ரமத்தில் விருந்து நடக்கிறது என்றும் கூறினர்.

சுவாமி நிராலம்பானந்தாவை தன்னிடம் அழைத்து வருமாறு கூறி ஒரு ஆளை மன்னன் ஆஸ்ரமத்துக்கு அனுப்பினான். அந்தத் துறவியும் அரசனைக்காண வந்தார்.

''துறவிகளும் பிரம்மச்சாரிகளும் எந்தவித மான ஆன்மீக சாதனைகளிலும் ஈடுபடுவதில்லை யென்றும், இனிப்புப் பண்டங்களைத் தின்றுவிட்டு அவர்கள் உறங்குவதாகவும் திவான்களும் அமைச் சர்களும் என்னிடம் கூறினர்'' என்று அரசன் சுவாமி நிராலம்பானந்தாவிடம் கூறினான்.

சுவாமி பதிலளிக்கையில், ''மன்னா, அதிகாலை யில் தாங்கள் ஆஸ்ரமத்துக்கு வந்தால் உண்மை யைப் புரிந்து கொள்ளுவீர்கள். அதிகாலையில் மூன்று மணிக்கு வந்து நான் தங்களை எழுப்பு கிறேன்'' என்று கூறினார்.

மறுநாள் காலை மூன்று மணிக்கு சுவாமி அரண் மனைக்குச் சென்று அரசனை எழுப்பினார். அரண் மனைச் சேவகன் ஒருவனை ஒரு பானை நிறையத் தண் ணீரை எடுத்துக்கொண்டு தன்னுடன் வருமாறு கூறினார். முதலில் அவர்கள் திவான்கள் மற்றும் அமைச்சர்களின் வீடுகளுக்குச் சென்றனர்.

உறங்கிக்கொண்டிருந்த திவான்கள் மற்றும் அமைச்சர்களின் முகத்தில் தண்ணீரைத் தெளிக்கு மாறு சுவாமி சேவகனிடம் கூறினார். சேவகனும் அப்படியே செய்தான். அவர்கள் அனைவரும் உறக் கம் கலைந்து எழுந்திருக்கும்போது, ''முட்டாள்'', ''கழுதை'', ''அறிவு கெட்ட செயல்'', ''என் உறக்கத்தை கலைத்தது யார்?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தனர்.

அரசனும், துறவியும் அடுத்து குதிரை லாயத் துக்குச் சென்றனர். அங்கு குதிரைகளைப் பராமரிப் பவர்கள் உறங்கிக்கொண்டிருந்தார்கள். துறவி சேவகனைப் பார்த்து அவர்கள் முகத்திலும் தண்ணீர் தெளிக்கும்படி கூறினார். சேவகனும் அவ்வாறே

செய்தான். அவர்களும் எழுந்திருக்கும்போது 'முட்டாள்' 'அறிவு கெட்டவனே' என்று கூறிக் கொண்டுதான் எழுந்தனர்.

அதன் பிறகு அனைவரும் ஆஸ்ரமம் சென்றனர். அங்கு துறவிகள் மற்றும் பிரம்மச்சாரிகளின் முகத்தில் தண்ணீர் தெளிக்கப்பட்டது. அவர்கள் அனைவரும் எழுந்திருக்கும்போது 'சிவோஹம்', 'ஹரி ஓம்', 'ராம் ராம்' என்று சொல்லிக்கொண்டே எழுந்தனர்.

இப்போது சுவாமி நிராலம்பானந்தா மன்னனை நோக்கிப் பின்வருமாறு கூறினார் :

''மன்னா ! இப்போது ஆஸ்ரமவாசிகளுக்கும் மற்றவர்களுக்கும் இடையிலான வேறுபாட்டைக் கண்டீர்களா? பல்வேறு வகைப்பட்ட இந்த மனிதர்களின் போக்குகள், உணர்வுகள், அவர்கள் வாயிலிருந்து வந்த வார்த்தைகள் ஆகியவற்றைக் கவனித்தீர்களா ? ஒவ்வொரு மனிதனின் வாயிலிருந்தும் வந்த வார்த்தை அந்த மனிதனின் இதயமும் மனமும் எப்படிப்பட்டது என்பதையும், அந்த மனிதன் எத்தகைய பண்புள்ளவன் என்பதையும் நமக்கு உணர்த்துகிறது.''

''சாதுக்களும் சந்நியாசிகளும்கூட வேலை செய்கிறார்கள், உணவு உட்கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்களின் மனப்போக்கு தனித்தன்மை உடையது. உலகியல் வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்கள் மக்களை அவர்களின் புறச் செயல்களைக் கொண்டு மதிக்கின்றனர். உடலைக் காப்பாற்றுவதற்காக துறவிகள் உணவு உட்கொள்ளுகின்றனர். ருசித்துத் தின்னும் நாக்கைத் திருப்திப்படுத்தவோ, உடம்பைக் கொழுக்க வைக்கவோ, அல்லது உட்

கொள்ளும் உணவின் மூலம் கிடைக்கும் சக்தியைப் பயன்படுத்தி புலன்வழி இன்பத்தை அனுபவிக்கவோ துறவிகள் தமது வயிற்றை நிரப்பவில்லை. அவர்கள் தமது செயல்களுக்கு சாட்சிகளாக இருக்கின்றனர். உலக நன்மைக்காக அவர்கள் வேலை செய்கின்றனர். பசி என்பது உடல் சம்பந்தப் பட்டது என்பதும், ஆன்மா சம்பந்தப்பட்டது அல்ல என்பதும் அவர்களுக்குத் தெரியும். அவர்கள் தம்மை உடல், மனம், பிராணன், புலன்கள், புத்தி ஆகியவற்றுடன் இணைத்துக் கொள்ளுவதில்லை. அவர்கள் எங்கும் நிறைந்திருக்கும் ஆத்மாவை உணர்ந்தவர்களாக இருக்கிறார்கள். இன்று அவர்கள் இனிப்புப் பண்டங்களைத் தின்னலாம்; நாளை முழுமையாக பட்டினி கிடக்கலாம். அதற்கு மறுநாள் நிலக்கடலையை மட்டும் தின்றுவிட்டு இருக்கலாம். இன்று அவர்கள் பட்டாடை உடுத்தியிருக்கக் கூடும். நாளை அவர்கள் கிழிந்த துணி அல்லது சாக்கை அணிந்து கொள்ளக் கூடும். இன்று அவர்கள் பஞ்சு மெத்தையில் உறங்கலாம்: நாளை அவர்கள் தரையில் உறங்கலாம். அவர்களின் போக்கை நாம் அறிய இயலாது. உலகியலில் உழலுபவர்கள், அவர்களை உணர முடியாது. ஏனெனில் அவர்கள் மகா கர்த்தர்கள், மகா தியாகிகள், மகா யோகிகள்.''

சுவாமி நிராலம்பானந்தா மேலும் தொடர்ந்து கூறினார் : ''அவர்களுக்கு உலகைப் பற்றிய எண்ணம் இல்லை. அவர்கள் நோக்கம் எப்போதும் பரிசுத்தமானது. அடுத்த நாளைப் பற்றி அவர்கள் எண்ணுவதில்லை. அவர்கள் தமது மனங்களில் தூய்மையான உயர்ந்த எண்ணங்களை நிரப்பி வைத்திருக்கிறார்கள். இந்தச் செயலைச் செய்வதன் மூலம் எனக்கு என்ன கிடைக்கும்? இதன் மூலம் நான் எவ்வளவு பணம் சம்பாதிக்கலாம்?' என்று

அவர்கள் சிந்திப்பதில்லை. ''உலகத்துக்கு அதிக பட்சமாக நான் எவ்வாறு தொண்டு செய்யமுடியும்? மக்கள் அறவழி நின்று சமயநெறியில் வாழ்வதற்கு என்னுல் என்ன செய்ய முடியும்? அவர்களை யோகிகளாகவும், ஞானிகளாகவும் மாற்றுவது எப்படி? நான் எவ்வாறு அவர்களை மகிழ்ச்சியும், அறிவும் உடையவர்களாக ஆக்குவது? என்ற எண்ணங்கள் தான் அவர்கள் மனங்களில் நிறைந்திருக்கும்.''

"வெளிப்பார்வைக்கு அவர்கள் சோம்பலுற்று அமர்ந்திருப்பதுபோல உங்களுக்குத் தோன்றலாம். ஆனல் அகத்தே அவர்கள் உயிர்த்துடிப்பும், கதிரொளி பரப்பும் தன்மையும், பரிபூரணத் தூய்மை, உயர்த்தும் எண்ணங்கள் ஆகியவையும் உடையவர்களாகத் திகழுகிருர்கள்.''

''அரசே! மனிதர்களை அவர்களது புறச் செயல்களை மட்டும் வைத்துக்கொண்டு மதிப்பிடக் கூடாது. அவர்களது நோக்குகளையும் போக்குகளையும் கவனித்துப் பார்க்கவேண்டும்.''

''ஒரு துறவி, தனக்கென்று எதையும் வைத்துக் கொள்ளுவதில்லை. அவர் எப்போதும் தன்னிடம் இருப்பதை பிறருடன் பகிர்ந்துகொள்ளுகிருர். நாட்டுக்குச் சோதனை ஏற்படுகின்ற வேளையில், மக்கள் துன்பத்திலிருந்து விடுபடுவதற்கான செயல்களில் ஈடுபடுகிருர். தொண்டு செய்யவே அவர் வாழ்கிருர். உயிரை தியாகம் செய்வதற்கான சோதனை ஏற்படுகிற நேரத்தில் இல்லறவாசிக்கும் சந்நியாசிக்கும் உள்ள வேறுபாட்டை நீங்கள் உணர்ந்துகொள்வீர்கள்.''

''அவர்கள் விருந்தில் விருப்பம் கொள்ளுவதில்லை'' — சுவாமி சிரித்துவிட்டு மேலும் தொடர்ந்

தார் : ''அவர்கள் எப்போதும் எளிய உணவையே உட்கொள்ளுகின்றனர். பருப்பும் ரொட்டியும் அவர்களது உணவு. மக்களுக்கு நற்பேறும் நல்வாழ்வும் கிடைப்பதற்காக அவர்களின் வேண்டுகோளின் படி விருந்துகளுக்கு ஏற்பாடு செய்கின்றனர்.

துறவியின் அருள்வாக்கைக் கேட்ட அரசன், ''வணக்கத்துக்குரிய சுவாமிஜி! என்னை மன்னித்து விடுங்கள். நோக்குகள் மற்றும் மனப் போக்குகளின் தத்துவத்தை நான் இப்போது புரிந்து கொண்டேன். உங்களுடைய அருள்வாக்கு, விஷயத்தைத் தெளிவுபடுத்துவதாகவும், உற்சாகம் தருவதாகவும், குறிப்பால் உணர்த்துவதாகவும் உள்ளது. இது என் கண்களைத் திறந்திருக்கிறது. இதுவரை நான் மக்களின் புறச் செயல்களைக்கொண்டே அவர்களை மதித்து வந்தேன். உற்சாகந்தரும் ஞானத்தைத் தாங்கள் எனக்கு ஊட்டியிருக்கிறீர்கள். போற்றுதலுக்குரிய சுவாமிஜி! நான் எப்போதும் உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். உங்களுக்கு எனது பலகோடி வணக்கங்களும், புகழ் மாலைகளும் உரித்தாகும். நமோ நாராயணா! இப்போது முதல் நீங்கள் எனது குருநாதர்'', என்று கூறிவிட்டு பின்வருமாறு பாடினான்.

குருமகராஜ் குருமகராஜ் குருமகராஜ் பாஹிமாம்
பரப்ரம்ம சத்குரு மகராஜ் ரக்ஷமாம்.

---

# 58. ஞானமுள்ள கிழவி

மதப்பற்றும் தரும சிந்தனையும் படைத்த மஹாராஜா ஒருவர் ஒரு பெரிய காட்சிச்சாலையைத் திறந்து வைத்தார். அதில் எல்லாவித பொருள்களும் இனும் கொடுப்பதற்காக வைக்கப்பட்டிருந்தன. ஆணோ, பெண்ணோ, எவரும் அவரவர் பிரியப்படி எதையும் எடுத்துக்கொண்டு போகலாம். இந்தச் சாலைக்கு நகர மக்கள் அனைவரும் திரண்டு வந்தனர். சிலர் நேர்த்தியான வேஷ்டிகளையும் சிலர் நகைகளையும், விலையுயர்ந்த புத்தகங்களையும் எடுத்துக் கொண்டார்கள். இரும்புப் பெட்டிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. காஷ்மீரிலிருந்து வந்த புதுப்பழங்களைச் சிலர் எடுத்துக் கொண்டார்கள். எல்லோருக்கும் பரம திருப்தி. ஆனால் ஞானமுள்ள கிழவி ஒருத்தி அங்கே வந்தாள். எதையும் தொடக்கூடவில்லை. அவளுக்கு அதிருப்தி.

''நகர மக்களுக்கு எல்லாம் திருப்தியாயிற்று. ஒரு கிழவி அதிருப்திப்படுகிறாள். 'இங்குள்ள எந்தச் சாமானும் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. நான் மகாராஜாவைப் பார்க்க வேண்டும்' என்று அக்கிழவி சொன்னாள்'' என்று திவான், மகாராஜாவிடம் முறையிட்டான். உடனே யானையின் மேலேறிக்கொண்டு மகாராஜா கிழவியைப்பார்க்க வந்துவிட்டார். கிழவி மன்னரைப் பார்த்து, ''மகாராஜா! கீழே இறங்கி வாரும். வெகு முக்கியமான ஓர் விஷயத்தைப் பற்றித் தங்களிடம் பேச விரும்புகிறேன்'' என்றாள். அரசர் யானையிலிருந்து இறங்கினார். கிழவி மன்னனின் வலது கையைப் பிடித்துக்கொண்டு, ''மகாராஜா! தாங்கள் எனக்குச் சொந்தமாகிவிட்டீர்கள். காட்சிச் சாலையிலுள்ள சின்னஞ்சிறிய பொருள்களையும் விளையாட்டுப் பொம்மைகளையும் நான் விரும்ப

வில்லை. தங்களைப் பெறவே நான் விரும்புகிறேன். தாங்கள் எனக்குச் சொந்தமானபடியால் இந்த ராஜ்யத்தின் செல்வம் அனைத்தும் இப்போது எனக்குச் சேர்ந்ததாகி விட்டது'' என்றாள். மகாராஜாவுக்கு அந்த வார்த்தைகள் ஆச்சரியத்தை விளைவித்தன. அந்தக் கிழவியை அவர் அரண்மனையிலே வைத்துக்கொண்டு சாகும் பரியந்தம் தாய்போலப் பாதுகாத்து வந்தார்.

பலவித ஆசைகளைக் கொள்வதால் அந்தந்த ஆசைக்குரிய பொருள்களைத் தேடிச் செல்லுகிறீர்கள். இங்ஙனம் செய்வதால் திருப்தியே உண்டாவதில்லை. ஆசைக்கு நீங்கள் அடிமையாவதால், பிச்சைக்காரர்களுக்கும் பிச்சைக்காரனாக ஆகிவிடுகிறீர்கள். உலக இச்சைகளையும், பொருள்களையும் துறந்து, இப்பரந்த பிரபஞ்சத்தின் மூலம் பரம்பொருளைப் பெற்றுவிட்டால், உங்களுடைய எல்லா ஆசைகளும் பூர்த்தியாகிவிடும். ஞானமுள்ள கிழவி எப்படி மகாராஜாவைத் தன்னுடைய சொந்தமாகப் பாராட்டி அவரது செல்வத்திற்கெல்லாம் அதிபதியானாளோ, அப்படியே சகல திவ்விய ஐஸ்வரியங்களும் உங்களைத் தேடிவரும் — நீங்கள் பக்தியாலும் தியானத்தாலும் பகவானை அடைந்துவிட்டால் !

ஸ்ரீகிருஷ்ண பகவான் பிரகலாதாழ்வார் முன் தோன்றி, ''பிரியமுள்ள பிரகலாதா ! உன் தவத்திற்குப் பெரிதும் மகிழ்ந்தேன். வேண்டிய வரத்தைக்கேள். தருகிறேன்'' என்றார். பிரகலாதர், ''ஹே பகவானே! பரம்பொருளே! எனக்கு எதுவுமே வேண்டாம். தங்கள் தரிசனத்தினால் எல்லா ஆசைகளும் பூர்த்தியாகி விட்டன, தங்களை அடைந்த எனக்கு வேறு என்ன வேண்டும்? என் மனம் ஸாந்தி பெறுகிறது. இப்பிரபஞ்சத்திய செல்

வம் முழுதும் இப்போது எனக்குச் சொந்தம். என் மனதிலே எந்தவித ஆசையும் முளைக்காதபடி செய்தீர்கள். எவ்வித பற்றும் அற்றவனுகச் செய்யுங்கள். இதுவே எனது மனப்பூர்வமான பிரார்த்தனை. இந்த வரம் தந்து ஆதரியுங்கள்'' என்று பிரார்த்தித்தார்.

## 59. ஓர் சக்கிலிய மஹான்

பாடலிபுத்திரா எனும் க்ஷேத்திரத்தில் முன்னொரு காலத்தில் ஓர் சக்கிலிய மஹான் வசித்து வந்தார். மிதியடிகளை தைத்து கொடுப்பதில் ஒரு சில அணுக்களைச் சம்பாதிப்பார். வருமானத்தில் முக்கால் பாகத்தை ஏழைகளுக்குத் தானம் வழங்கி, எஞ்சியதைத் தமக்கென வைத்துக் கொள்வார். அவர் ஓர் ராம பக்தர். ராம நாமத்தை தினந்தோறும் 4 லக்ஷம் ஜபம் பண்ணுவார். மூன்று மணி நேரம் தூங்குவார். அவர் மஹான் என்று யாருக்கும் தெரியாது,

ஓர் நாள் ஒரு யாத்திரீகர் தமது மிதியடிகளைக் கொடுத்தார். சக்கிலிய மஹான் அவற்றைச் சீர் திருத்திக் கொடுத்தார். யாத்திரீகர், ''சக்கிலியா! நான் காசிக்குச் சென்று கங்கா ஸ்நானம் பண்ணப் போகிறேன்'' என்ருர். உடனே சக்கிலிய மஹான், ''மரியாதைக்குகந்த மஹாப் பிரபுவே! நான் காலணு தருகிறேன். கங்காதேவி ஜல மட்டத்திற்கு மேல் கையைத் தூக்கினுல், வலது கையில் காலணுவைத் தயவு செய்து கொடுங்கள்'' என்ருர். இதைக்கேட்ட யாத்திரிகருக்கு ஒரே வியப்பாகத் தோன்றியது. எனினும் இதற்குச் சம்மதித்துக் காலணுவைப் பெற்றுக்கொண்டு காசிக்கு நேராகச் சென்ருர்.

யாத்திரீகர் காசிக்குச் சென்று கங்கையில் ஸ்நானஞ் செய்தான பிறகு, சக்கிலியனைப்பற்றி நினைத்தார். நினைத்தவுடனே வலது கை ஒன்று கங்கா தீர்த்தத்திற்கு மேலே தோன்றியது. யாத்திரீகர் காலணவை அக்கையில் கொடுத்துவிட்டு நடக்கலானார். அப்போது "இவ்வளவு சீக்கிரத்தில் ஏன் ஓடிப்போகிறீர்? வைரக்கற்களால் பதிக்கப் பட்ட விலையுயர்ந்த தங்க வளையல் இதோ பெற்றுக் கொள்ளும்–சக்கிலியனிடம் போய் எனது பிரசாத மாகக் கொடும்" என்று ஓர் அசரீரியின் குரல் கேட்டது. யாத்திரீகர் அப்பொன் வளையலைப் பெற்றுக்கொண்டு, கயை என்ற புண்ணிய க்ஷேத் திரத்திற்குச் செல்லலானார். பேராசை பிடித்தது அவரை. "இதைச் சக்கிலியனிடம் ஏன் கொடுக்க வேண்டும்? யாரிடமாவது விற்றுப் பணத்தை எடுத்துக் கொள்ளுகிறேன் நானே" என்று எண்ண மிட்டவாறே, கடைக்குப்போய் அதை விற்க முயன் றார். "இது மிகவும் விலையுயர்ந்த வளையல். போது மான பணம் என்னிடம் இல்லை. இதை விலைக்கு வாங்க என்றால் இயலாது. வேறு ஒருவரிடம் போங்கள்" என்றான் ஒரு வியாபாரி. யாத்திரீகர் பலபேரிடம் வளையலைக் காட்டினார். விற்க முடிய வில்லை. கடைசியில், ஒரு மஹாராஜாவின் திவா னிடம் அதைக் கொண்டுபோய்க் காட்டினார். வளை யலைக் கண்டவுடனே, "மகாராணிக்காக வாங்கு வார் மகாராஜா" என்று கருதியவண்ணம், அதைக் கொண்டுபோய் மகாராஜாவிடம் கொடுத் தார் திவான். மகாராஜாவோ அதை நேராக மகா ராணியிடம் கொடுத்தார். பேரெழில் வாய்ந்த அப்பொன் வளையலை மகாராணி பெரிதும் விரும்பி னாள். யாத்ரீகருக்கு நான்கு லக்ஷம் ரூபாய் கொடுக் கப்பட்டது. அவருக்கோ ஆனந்தம் அபாரமாய்ப் பொங்கிவிட்டது. அழகான பங்களா ஒன்றை வாங்கினார்; யௌவனம் தவழும் மங்கையை மணந்

தார். பல ஆட்களை வைத்துக் கொண்டார். இங்ஙனம் அந்த யாத்திரீகர் ஓர் இளவரசனைப் போன்று சுக வாழ்க்கையில் மூழ்கி மகிழ்ந்து கொண்டிருந்தார்.

வலது கைக்கு அலங்காரம் அளித்தது போல, இடது கைக்கும் அலங்காரம் வேண்டுமல்லவா? மகாராணி மகாராஜாவிடம் விண்ணப்பித்தாள். மகாராஜா யாத்திரீகரைத் தேடினார். யாத்திரீகர் வந்ததும், மகாராஜா, ''ஐயா! தாங்கள் கொடுத்த வளையல் ரொம்பவும் உயர்ந்தது. நேர்த்தியானது. மகாராணியின் இடது கைக்கும் ஒரு வளையலைக் கொடுங்கள்'' என்று கேட்டார். அந்த யாத்திரீகர், ''என்னிடம் அது ஒன்றுதானிருந்தது. மற்றொன்றுக்கு நான் எங்கே போவது?'' என்றார். மகாராஜாவுக்குக் கோபம் வந்து விட்டது. ''ஒருமாத கெடுவுக்குள், நீர் மற்றொரு வளையலைக் கொடுக்காவிட்டால், உம்மைச் சிரசாக்கினை செய்வேன்'' என்று உத்தரவிட்டார்.

யாத்திரீகருக்குத் திகிலும் கவலையும் சூழ்ந்து கொண்டன. துக்கமயமாய்த் தமக்குள், ''அந்தச் சக்கிலியனை நான் எப்படிப் பார்ப்பேன்? அவனை வஞ்சித்து விட்டேன். அவன் ஓர் பெரிய பக்தன் போலல்லவா தோன்றுகிறான். எப்படியானாலும் அவனிடம் உண்மையைக் கக்கிவிடுகிறேன். என்னை மன்னிப்பான். கங்காதேவியின் திருவருளினால் எனக்கு மற்றொரு வளையலைக் கொடுப்பான்'' என்று எண்ணமிட்டார். நேராக பாடலிபுத்திரா க்ஷேத்திரத்தை நாடி; சக்கிலிய மஹானைத் தேடிக் கண்டு பிடித்தார்.

உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி உரைத்தார்; சக்கிலிய மஹான் புன்முறுவல் கொண்டார்.

''கங்கா தேவியின் வலது கையில் காலணேவைத் தந்தீர்களா?'' என்ருர். யாத்திரீகர் நடந்த விப ரங்களை நவின்ருர். யாத்திரீகர் கண்ணீர் விட்டுக் கதறியழுது, சக்கிலிய மஹானின் கால்களைப் பிடித்து வேரற்ற மரம்போல விழுந்து சரணுகதி யடைந்தார். ''மஹானுபாவரே! என்னை மன்னி யுங்கள். தாங்கள் ஒரு பெரிய மஹான். சிரசாக் கினைக்கு உட்பட்டவனுய்த் தவிக்கிறேன். மற்ருெரு வளையலைக் கொடுங்கள்'' என்று கெஞ்சினுன். அதற்கு அச்சக்கிலிய மஹான், ''தோலும் நீரும் உள்ள இந்த தகரப் பாத்திரத்தில் கையை நுழைத்து உங்களுக்கு வேண்டிய வளையல்களை எடுத்துக்கொள்ளுங்கள்'' என்ருர். யாத்திரீகர் எனக்கு ஒன்றே போதும்'' என்று கூறி ஒரு வளை யலை மட்டும் எடுத்துக்கொண்டார். மஹானிடம் விடை பெற்றுக்கொண்டு, மகாராஜாவிடம் போய் வளையலைக் கொடுத்தார்.

மகாராஜாவுக்கு மட்டற்ற வியப்பாகப் போயிற்று. அதை மகாராணியிடம் கொடுத்தார். யாத்திரீகரை, ''உமக்கு இந்த வளையல் எங்கே கிடைத்தது?'' என்று கேட்கவே உண்மையைச் சொல்லிவிட்டார் யாத்திரீகர். பிறகு மகாராஜா வும் யாத்திரீகரும் பாடலிபுத்திரா என்னும் க்ஷேத் திரத்திற்குப் போய், மஹானைத் தரிசித்தார்கள். மகாராஜா அந்தச் சக்கிலிய மஹானைப் பார்த்து, ''தங்களிடம் இன்னும் வளையல்கள் இருக்கிறதா?'' என்று வினவ, அதற்கு மஹான் ''எவ்வளவோ இருக்கிறது. தகரப் பாத்திரத்தில் கையை விட் டால், வேண்டிய வளையல்களை எடுத்துக்கொள்ள லாம்'' என்ருர். உடனே மகாராஜா தகரப்பாத் திரத்தில் கையை விட்டு 50 வளையல்களை எடுத்துக் கொண்டார். ஒரு க்ஷண நேரத்தில் அப் பாத்திரத் தில் மீண்டும் 50 வளையல்கள் நிறைந்து விட்டன.

மீண்டும் மகாராஜா 50 வளையல்களை எடுத்துக் கொண்டார். மறுபடியும் பாத்திரம் நிரம்பியது 50 வளையல்களால். மகாராஜாவுக்கும் யாத்திரீக ருக்கும் ஒரே வியப்பாகிவிட்டது. மகாராஜா தமக் குள், ''சக்கிலியன் ஒரு பெரிய மஹான். தினசரி அணுக் கணக்கில் சம்பாதித்தாலும் மிகுந்த சந்தோ ஷத்துடன் இருக்கிறான். உலகத்திலுள்ள செல்வம் அனைத்திற்கும் இவர் அதிபதியாய் இருக்கிறார். இந்தப் பெரிய ராஜ்யத்தை ஆளுவதில் என்ன பிர யோஜனம்? கவலைகளும் ஆத்திரங்களும் என்னைப் பிடுங்கித் தின்கின்றன. இந்தப் பெரிய மஹா னுக்கு நான் சிஷ்யனாகி விடுகிறேன். ஈசுவர தரிச னத்தைப் பெறுவேன்'' என்றெல்லாம் எண்ண மிட்டார்.

மகாராஜாவின் உள்ளத்தில் மகத்தான வைராக்கியம் உதித்தது. உடனே ராஜ்யத்தைத் துறந்து விட்டு அந்தச் சக்கிலிய மகானுக்குச் சிஷ்யர் ஆனார். அம்மஹான் அரசர்க்கு ராமதாரக மஹா மந்திரத்தின் மர்மங்களை உபதேசித்தார். புதிய ராஜாவோ உண்மைச் சிஷ்யனுக்கு உரிய பயபக்தி விசுவாசத்துடன் இடைவிடாமல் ராம மந்திர ஜபம் பண்ணினார். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியைத் தியானித்தார். இறுதியில், ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி தரிசனத்தையே பெற்றார். யாத்திரீகரும் தமது செல்வத்தைத் துறந்து மஹானுக்குச் சிஷ்யர் ஆனார்.

பக்தி சிரத்தையுள்ளவன் எவனும் பகவானைச் சாக்ஷாத்கரிக்கக்கூடும். ஒருவன் பக்தி செலுத்தி னால், அதிலே ஆண்டவனுக்கு அலாதி விருப்பம். அந்த மனிதனுடைய ஜாதி, மதம், குலம், பதவி முதலியவற்றைக் கடவுள் பார்க்க மாட்டார். எந்த வேலை செய்து கொண்டிருந்தாலும் சரி, ஈசுவர ஞானத்தை யாருமே பெறலாம்.

## 60. கலியின் கதை

கலி, பரீக்ஷித் மன்னர் முன்னால் தோன்றினான். மன்னன், கலியைப் பார்த்து, ''கலி ! எனது ராஜ்யத்தில் உனக்கு இடமில்லை. நீ உடனே எனது ராஜ்யத்தை விட்டுச் செல்'' என்று கூறினான்.

மன்னரின் சொற்களைக் கேட்ட கலி மிகவும் வருந்தினான். அவன் அரசனைப் பார்த்து, ''அரசே! என்னிடம் கடுமையாக நடந்து கொள்ளாதீர்கள். நீங்கள் கருணை மற்றும் நேர்மையின் உருவகம். என்னிடம் கருணை காட்டுங்கள். நான் எங்கு செல்வேன்? உமது ராஜ்யத்தில் எனக்கு ஏதேனும் ஒரு வகையில் புகலிடம் தாருங்கள்'' என்று கேட்டான்.

பிறகு அரசன், நான்கு இடங்களில் கலி தங்கக் கட்டளையிட்டான். சூதாடும் இடம், மிருகங்களை கொலை செய்யும் இடம், புகழ் இழந்த சகோதரிகள் வாழும் இடம், கள்ளுக்கடை ஆகியவையே அந்த நான்கு இடங்கள்.

கலி அரசனைப் பார்த்து ''அரசே! ஒரே நேரத்தில் இந்த நான்கு இடங்களிலும் வாழ்வது கடினம். ஆதலால் இந்த நான்கும் ஒன்றாக இருக்கும் ஓரிடத்தில் வாழ வழி சொல்லுங்கள்'' என்றான்.

அரசன் மூன்று நான்கு நாட்கள் யோசித்துவிட்டு கலியை அழைத்து, ''உனக்குப் பொருத்தமான இடத்தை நான் நிச்சயித்துவிட்டேன். அந்த இடத்தில் அமர நீ மிகவும் மகிழ்ச்சி அடைவாய்'' என்று கூறினான்.

அரசன் ஒரு தங்கக் கட்டியை கலியின் கையில் கொடுத்து ''நீ பணத்தில் தங்கி இரு. பணத்தில்

நான் சொன்ன நான்கும் இருக்கும். அத்துடன் பகையும் சேர்ந்து இருக்கும்'' என்று கூறினன்.

'' நன்ருகச் சொன்னீர்கள் மன்னு! கருணைமிகு அரசே! நான் உண்மையில் மகிழ்ச்சி அடைகிறேன். பணத்தில் இருந்து நான் அற்புதங்களை நிகழ்த்து வேன். தங்களின் அன்பு உள்ளத்தை எப்படிப் புகழ்வேன்! ஆயிரக்கணக்கான மக்களை எனது பிடியில் கொண்டுவருவேன். அவர்களை அமைதி இழக்கச் செய்வேன். அவர்களிடையே கலகத்தை உண்டுபண்ணுவேன். உலகியல் வாழ்வில் உழலும் மக்களை மயக்குவேன். அவர்களை மது அருந்தச் செய்வேன். அவர்கள் தமது பணத்தை சூதாட் டத்தில் இழக்குமாறு செய்வேன்; அவர்களை பிச்சை எடுக்க வைப்பேன். அவர்களை மாமிசம் உண்ணச் செய்வேன்; அவர்களிடத்தில் மிருக இச்சையைத் தூண்டுவேன்'' என்று கலி கூறினன்.

செல்வம் தீயது. அனைத்துத் தீமைகளின் அடித் தளத்திலும் செல்வம் இருக்கிறது. அது மனத்தில் போதையை உண்டுபண்ணுகிறது. அது கர்வத்தை வளர்க்கிறது. மனிதன் கடவுளை மறக்க அது காரணமாக இருக்கிறது. செல்வந்தர்கள் கல்மனம் படைத்தவர்கள். ''ஊசியின் துவாரத்தில் ஒட்ட கத்தைக் கூட நுழைத்துவிடலாம். ஆனால் பணக் காரனை ஸ்வர்க்கத்துக்குள் நுழைப்பது அரிது'' என்று ஏசுநாதர் கூறினர்.

பிறரைத் துன்புறுத்தாமல் செல்வத்தைக் குவிக்க முடியாது. அது பல்வேறு தீய குணங் களைத் தோற்றுவிக்கிறது. கடவுளை வணங்கும் ஒரு ஏழை, கந்தல் துணியை அணிந்திருந்தாலும், உண்ண உணவின்றி வாடினலும் உண்மையில் உலகிற் சிறந்த பணக்காரன் அவன்தான். அவன்

ஆண்டவன் அன்பிற்குப் பாத்திரமானவன். ஆன்மீகச் செல்வமே உண்மையான செல்வம். அதுவே நிலேயான செல்வம். அந்த செல்வத்தை திருடர்கள் திருடமுடியாது. ஆகவே அழியாத இந்த ஆன்மீகச் செல்வத்தைப் பெற்று மகிழ்ச்சி யாக இருங்கள். இப்போது கலி உங்களைத் தொட மாட்டான். யமன் உங்களை நெருங்க அஞ்சுவான்.

## 61. காந்தாரியின் கதை

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்குமிடை யில் நடைபெற்ற மகாபாரதப் போரில் கௌரவர் கள் அனைவரும் கொல்லப்பட்டனர். கௌரவர் கள் காந்தாரியின் புதல்வர்கள். காந்தாரி துக்கத் தில் மூழ்கினுள். துரியோதனனின் பிணத்தை தன் மடியில் போட்டுக்கொண்டு அழுது புலம்பினுள். அவள் அதே இடத்தில் சூரிய அஸ்தமனம் வரை இருந்தாள். எல்லோரும் போர்க்களத்தை விட்டுத் தத்தம் இடத்துக்குச் சென்றுவிட்டனர். காந்தாரி மட்டும் செல்லவில்லே. இறந்த தனது புதல்வர்களை விட்டுப்பிரிய அவளுக்கு மனம் இல்லே. அவள் தனது புதல்வர்களிடம் கொண்டிருந்த அன்பு மகத்தானது.

கிருஷ்ண பரமாத்மா அவள் முன் தோன்றி பின்வருமாறு கூறினுர்: ''அன்னேயே! இப்படி வீணுகக் கவலேப்படுவதை நிறுத்து. நீ உனது புதல்வர்களைப் பிரிய வேண்டியது தவிர்க்க முடியா தது. அதற்காக ஏன் அழுகிருய்? புதல்வர்களும், உறவினர்களும் சுய நலத்துக்காகவே ஒன்றுபட் டிருக்கின்றனர். யாத்திரையில் ஒன்ருக பயணம் செய்தவர்கள் பயணம் முடிந்ததும் பிரிந்து செல்வது போல, அவர்கள் இந்த உலகிலிருந்து பிரிந்து செல் லுகின்றனர். அவர்கள் மீண்டும் உயிர்பெற்று வரப் போவதில்லே. மரணம் என்பது என்ன? உடம்பின்

மேலே இருக்கும் உடையை மாற்றுவது போன்றது மரணம். உள்ளே இருக்கும் ஆத்மா ஒருபோதும் இறப்பதில்லை, அது பிறக்கவுமில்லை. வா, அரண்மனைக்குப் போகலாம். உன்னால் பசியைப் பொறுத்துக்கொள்ள முடியாது. பசி, உயிர்கள் அனைத்தையும் துன்புறுத்துகிறது. இப்போது இருள் சூழ்ந்து விட்டது'' என்றார்.

''கிருஷ்ணா! இந்தத் துன்பத்துக்கு நீயே காரணம். அரண்மனைக்குத் திரும்பிச் செல்லுமாறு என்னை வற்புறுத்தாதே. நான் ஒருபோதும் அரண்மனைக்குச் செல்ல மாட்டேன். என் புதல்வர்களுடனேயே நானும் இறந்துவிடுவேன். என் குழந்தைகள் இறந்து விட்டார்கள். இனி எதிலும் எனக்கு நாட்டம் இல்லை. நான் சாகும்வரை உணவு உட்கொள்ளப்போவதில்லை. நான் எதையும் உண்ண மாட்டேன்'' என்றாள் காந்தாரி.

காந்தாரி பிடிவாதமாக இருப்பதைக் கண்ட கிருஷ்ணர், எதுவும் பேசாமல் அந்த இடத்தை விட்டு அகன்றார்.

இரண்டு நாட்கள் கடந்தன. காந்தாரி உண்பதற்கு எதுவும் கிடைக்கவில்லை. அவள் பசியால் துடித்தாள். உண்பதற்கு ஏதாவது கிடைக்குமா என்று அவள் தேடிப்பார்த்தாள். அருகில் உள்ள மரத்தின் கிளையில் தொங்கிக் கொண்டிருந்த நாயின் மாமிசத் துண்டை அவள் கண்டாள். சுற்றிலும் பார்வையைச் செலுத்தினாள். எவரும் அவள் கண்களில் படவில்லை. பசியைத் தணித்துக்கொள்ளுவதற்காக அந்த நாய் மாமிசத்தை உண்ண அவள் தீர்மானித்தாள். ஆனால் மரம் மிகவும் உயரமாக இருந்தது. தரையிலிருந்து அந்த மாமிசத் துண்டை எட்டிப் பிடிக்க முடியவில்லை. ஆதலால்

இறந்த தனது புதல்வர்களின் உடல்களை ஒன்றன் மீது ஒன்ருக அடுக்கி அதன் மீது ஏறி நின்று அந்த மாமிசத் துண்டை எடுத்தாள். அதை உண்ணப் போகும் சமயத்தில் கிருஷ்ணர் அங்கு தோன்றினுர். ''தாயே! நாயின் மாமிசத்தைத் தின்னுதீர்கள். ருசிமிக்க உணவை நான் கொண்டு வந்திருக்கிறேன். மனம் திருப்தி அடையும் அளவில் அதனை உட் கொள்ளுங்கள். உங்களுக்குத் தொண்டு செய்ய நான் இருக்கும்போது நீங்கள் ஏன் இப்படி கஷ்டப் படவேண்டும்? பசி, உயிர்களை மிகக் கடுமையாக வாட்டக் கூடியது என்று நான் சொல்லவில்லையா? அதனை யாரும் வெல்ல முடியாது.''

காந்தாரி வெட்கித் தலை குனிந்தாள். அவள் கிருஷ்ணன் திருவடிகளில் வீழ்ந்து, ''கிருஷ்ணு! நீ எல்லா உயிர்களுக்குள்ளும் அந்தர்யாமியாக நிறைந்திருக்கிருய். நீயே இந்த உலகின் பிரபு, தயவு செய்து என் அறியாமையை அகற்று. நான் ஒளியும் ஞானமும்பெற வழிகாட்டு. நான் எனது புதல்வர்களிடத்தில் பற்றுக் கொண்டிருக்கிறேன். இதனைக் களைவது அரிது. இந்த நிலையிலிருந்து விடு பட்டு நான் உயர்நிலை அடைய எனக்கு வழிகாட்டு'' என்ருள்.

பிறகு கிருஷ்ணரும், காந்தாரியும் யுதிஷ்டிர ரின் அரண்மனைக்கு வந்தனர். பண்பிற்சிறந்த தருமபுத்திரர் அவர்களை கௌரவித்தார்.

பசியின் கொடுமை பயங்கரமானது. பந்தத்தின் வேதனை பயங்கரமானது. நண்பர்களது உறவு இன் னும் பயங்கரமானது. வினையின் தொடர்பு எல்லா வற்றையும்விட பயங்கரமானது உடல் மீதானபற்று. இந்த உடல் எண்ணத்தை விட்டு விடுங்கள். அகந் தையை அகற்றுங்கள். அறியாமையை அகற்றுங்

கள். சுயநலத்தை விட்டுவிடுங்கள். மனைவி, குழந்தைகள், செல்வம், வீடு இவற்றின் மீதான பற்றை விட்டுவிடுங்கள். பந்தங்களையும், பற்றுக்களையும் அறுத்தவராக ஆகுங்கள். பேரானந்தம், மகிழ்ச்சி, அமரத்துவம் நிறைந்த ஸ்வர்க்கத்தின் திறவுகோல் இதுதான்.

## 62. பொறுமை, துறவு நிலைக்குச் சோதனை

ஒரு சமயம் ஆன்மீக சாதகர் ஒருவர் ஒரு துறவியிடம் சென்று, ''சுவாமிஜி, நான் இறைவனைக் காண எனக்கு வழி காட்டுங்கள்'' என்று கூறினார்.

''தனிமையில் இருந்து ஓராண்டுக் காலம் இடையறுது இறைவனை எண்ணி, பிரார்த்தனை செய்துகொண்டிரு'' என்று துறவி கூறினார்.

''ஓராண்டு முடிந்ததும் உன்னுடைய அகந்தை முற்றிலும் அகன்ற பின்னர் குளித்து விட்டு என்னைக்காணவா'' என்று துறவி மேலும் கூறினார்.

துறவி தங்கியிருக்கும் ஆஸ்ரமத்தைச் சுற்றிப் பெருக்கி சுத்தப்படுத்த தினமும் ஒருவர் வருவார். ஆன்மீக சாதகர் ஓராண்டுக் காலத்தைப் பூர்த்தி செய்யும் நாளன்று துறவி, பெருக்குபவரை அழைத்து ''அதோ அந்த இடத்தில் ஒருவர் இறைவனை தியானித்து இருக்கிறார். இன்று காலை அவர் குளித்துவிட்டு வரும்போது உனது பெருக்குமாறில் குப்பையை அள்ளி அவர் தலையில் போடு'' என்றார்.

பெருக்குபவரும் துறவி சொல்லியபடியே செய்தார். இது சாதகன் மனநிலையைப் பெரிதும் பாதித்து விட்டது. கடுங்கோபம் அடைந்த அவர், அந்தப் பெருக்குபவரை அடிக்க விரட்டிக் கொண்டு ஓடினார்.

''அயோக்யன் ! என்னை முழுமையாக அசுத் தப்படுத்திவிட்டானே!'' என்று சொல்லிக்கொண் டேபோய் இரண்டாவது முறையாகக் குளித்து விட்டு துறவியின் ஆஸ்ரமத்துக்கு வந்தான்.

''ஐயா, தாங்கள் கூறியபடி, ஓராண்டுக் காலம் வாழ்ந்து விட்டேன். நான் இப்போது கடவுளைக் காண முடியுமா?''

''குழந்தாய், உனது மனத்தில் இன்னும் பணிவு ஏற்படவில்லை. இப்போதும் கூட ஒரு விஷப் பாம்புபோல கடிக்க கோபத்துடன் ஓடுகிறாய். திரும்பிப்போய் இன்னும் ஓராண்டுக் காலம் வழி பாடு செய்து மனத்தை அடக்கு'' என்று துறவி கூறினார்.

சாதகர் மீண்டும் தனித்திருக்கப் புறப்பட் டார். மேலும் ஓராண்டுக்காலம் வழிபாட்டில் ஈடு பட்டார்.

இரண்டாம் ஆண்டு பூர்த்தியானதும் துறவி, பெருக்குபவரை அழைத்து, ''சாதகர் குளித்துவிட்டு வரும்போது அவர்மீது பெருக்குமாறைப் போடு'' என்று துறவி கூறினார். பெருக்குபவரும் அப்படியே செய்தார். இந்த முறை பெருக்குபவரை அடிக்க சாதகர் ஓடவில்லை. ஆனால் இருந்த இடத்தில் இருந்துகொண்டே கடுமையான வார்த்தைகளை அள்ளி வீசினார். பிறகு மீண்டும் குளித்துவிட்டு வந்து, கடவுளைக் காண வழிகாட்டுமாறு பிரார்த் தனை செய்தார்.

துறவி பதிலளித்தார்: ''உனது மனம் என்னும் பாம்பு இன்னும் பயங்கரமாக சீறிப் பாய்கிறது. அதனைக் கொல்லாமல் எப்படி நீ இறைவனைக் காண முடியும்? விழிப்புடன் இரு. அடுத்த முறையும்

இந்த சோதனையில் நீ தோற்றால் இறைவன் உனக்குக் காட்சியளிக்க மாட்டார்.''

இம்முறை சாதகர் மகத்தான உறுதிப்பாட்டுடன் ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபட்டார். மூன்றாம் ஆண்டு சாதனையை அவர் பூர்த்தி செய்யும் நாளில், துறவி, பெருக்குபவரை அழைத்து, அன்று பெருக்கிச் சேர்ந்த குப்பை முழுவதும் சாதகர் தலையில் போடுமாறு கூறினார். பெருக்குபவர் இப்படியும் செய்தார், ஆனால் இப்போது சாதகர் கோபத்தை வென்றுவிட்டார். சாதகர் இப்போது பெருக்குபவரை வணங்கி, பணிவுடன் பின்வருமாறு சொன்னார்: ''சகோதரரே! நீங்கள் எனக்குப் பெரும் துணை புரிந்திருக்கிறீர்கள். நீங்கள் இப்படிச் செய்யாவிட்டால் நான் கோபத்தின் பிடியிலிருந்து என்னை விடுவித்துக் கொண்டிருக்க முடியுமா? இதயபூர்வமாக நான் உங்களுக்கு நன்றி தெரிவிக்கிறேன்'' என்றார்.

பிறகு, மீண்டும் ஒருமுறை சாதகர், துறவியை அணுகினார். துறவி, அவரை ஆசீர்வதித்து அவருக்கு உபதேசம் செய்தார். குருநாதரின் சொற்படி சாதகர், கடுமையான ஆன்மீக சாதனைகளில் ஈடுபட்டு விரைவில் இறைவனை தரிசனம் செய்தார்.

## 63. சுகேசனின் தீவிர பக்தி வைராக்யம்

மகத தேசத்தில் முற்காலத்தில் சுகேசன் எனும் பிராஹ்மணன் வசித்து வந்தான். தீவிர பக்தியும் சிரத்தையும் கொண்டவன். சகல சாஸ்திரங்களையும் ஆராய்ந்தவன். நான்கு வேதங்களையும் கற்றுத் தெளிந்தவன். பெரும்பாலும் தன் பொழுதைப் பிரார்த்தனையிலும் தியானத்திலும் போக்குவான்.

உஞ்ச வ்ருத்தியினல் அவன் தன் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தான். யாசகம் எடுத்துப் பிழைத்தல் அல்லது வயல்களிலும் சாலை ஓரங்களிலும் சிந்திக் கிடக்கும் தானியங்களைப் பொருக்கிக் கொண்டு போய் வேகவைத்துப் புசித்தல் — இந்த ஜீவனத் திற்கு உஞ்ச வ்ருத்தி என்று பெயர்.

வருடங்கள் கழிந்தன. அவனுடைய மனைவி கருவுற்ருள். பிராஹ்மணன் தனது அனுஷ்டானங் களை கவனித்து வந்தானேயன்றி வீட்டுக் காரியங் களைப்பற்றிய சிந்தனையே கொள்ளவில்லை. அவனு டைய ஆத்மீக முன்னேற்றத்திற்கு உற்ற துணை யாய் இருந்தாள் அவனுடைய மனைவி. அவள்கூட தூய உள்ளத்தோடு இறைவனை வழிபடுவாள். பிரசவ காலம் நெருங்கும்போது, தன் கணவனைப் பார்த்து, ''நாதா! சில நாட்களில் பிரசவம் ஆகும். பிள்ளைப்பேற்றுக்கு வேண்டிய பொருள்களைத் தாங் கள் சேகரித்துவைக்கவில்லை. இதைப்பற்றி எத் தனையோ தடவை தங்களிடம்சொல்லிஇருக்கிறேன். வீட்டில் தனித்து இருக்கிறேன். பிரசவத்திற்குத் துணை யாரும் இல்லை. பகவத் தியானத்திலே தாங்கள் சதா மூழ்கிக் கிடக்கிறீர்கள். எனக்குச் சிசுருஷை செய்யுமாறு தங்களைக் கட்டாயப்படுத்துவதோ மகா கஷ்டம். ஆகையால் என்னை என் தாயார் வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போய் விட்டுவிட்டால் அங்கே தாயும், சகோதரியும் பக்குவமாய் தொண்டு புரிவார்கள். இரண்டு மூன்று மாதங்களில் திரும்பு கிறேன்'' என்று கூறினள்.

மனைவியின் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண் டான் சுகேசன். அவளை அழைத்துக் கொண்டு மாமனர் வீட்டுக்குப் பிரயாணமானன். நெடுந் தூரம் நடக்க வேண்டும். அநேக மலைகளையும் பள் ளத்தாக்குகளையும், துஷ்ட மிருகங்கள் நிறைந்த

காடுகளையும் கடக்கவேண்டும். பாதிவழி போயிருப்பார்கள். சுகேசனின் மனைவி களைத்துப்போனாள். ஓர் ஆலமரத்தினடியில் தம்பதிகள் தங்கி இளைப்பாறினார்கள்.

ஒரு மணி நேரத்தில், அழகான ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தாள். பிரசவ வேதனை பொறுக்க முடியாமல் அவள் இயற்கை எய்தினாள். ஏழைபிராஹ்மணன் குழந்தையை மடிமேல் வைத்துக் கொண்டு அழுதான். இன்னது செய்வதென்று தோன்றாமல் திகைத்தான். அவன் தன் மனைவியின் சடலத்தைத் தகனம் பண்ண வேண்டும். குழந்தையை பாலூட்டி வளர்க்கவேண்டும். ஒரே காலத்தில்இரண்டையும் செய்வது சிரமம். பச்சிளங் குழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டிருந்தால், சுள்ளிகளைப் பொறுக்கிக்கொண்டு வர முடியாது. ஆகையால் கருணைக் கடலாகிய கடவுளின் பாதுகாப்பிற்கே அக்குழந்தையை அந்த அத்துவானக் காட்டில் விட்டுவிட்டுப் போகத் தீர்மானித்தான். தன் தொடையை நகத்தால் கீறி, பீறிட்டுவரும் ரத்தத்தால் ஓர் இலையில் ஓர் ஸ்லோகத்தை ஸம்ஸ்கிருதத்தில் எழுதினான். அந்த ஸ்லோகத்தின் கருத்து:- "தூய புனிதமான வெண்மை நிறத்தை அன்னப் பட்சிகளுக்குக் கொடுத்தவரும், கிளிகளை ஆழ்ந்த பச்சை வர்ணத்தால் அலங்கரித்தவரும், மயிலை கவர்ச்சி பொருந்திய வர்ணத்தால் அழகு படுத்தியவரும் எவரோ அவர், குழந்தையே! உன்னைப் பாதுகாத்துவருவார்" என்பது.

சுகேசன் அந்த இலையைக் குழந்தையின் தலைக் கடியில் வைத்துவிட்டு, விறகுகளைச் சேகரிக்கப் புறப்பட்டான். அடர்ந்த காட்டில் அலைந்தான். தகனத்திற்குத் தேவையான காய்ந்த சுள்ளிகள் கிடைக்கவில்லை. நெடுந்தூரம் சுற்றினான். ஓர்

ஏரி தென்பட்டது. மத்தியான வேளை, ஏரியின் குளிர்ந்த நீரில்மூழ்கி, அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டபிறகு மத்தியான தியானத்திற்கு அமர்ந் தான். தான் எதற்காக அங்கே வந்தது என்பதை முற்றிலும் மறந்தவனாய், நெடுநேரம் தியானத்தி லேயே இருந்துவிட்டான்.

குழந்தை இருந்த இடத்தில் மான் கூட்டம் ஒன்று வந்தது. தாய்மை உணர்ச்சியால் தாக்குண்ட பெண்மான் ஒன்று குழந்தைக்குப் பாலூட்டியது. மற்ற மான்கள் யாவும் குழந்தையின் அழகை அள் ளிப் பருகி, கோட்டைப் போலச் சுற்றி வளைத்துக் கொண்டன.

அகஸ்மாத்தாக, அந்த வழியில் வேட்டைக்கு வந்த மன்னன் மான்கள் கூட்டமாக நிற்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டு நெருங்கினான். மான்கள் மருளவில்லை. மன்னனுக்கு இடம் அளித்தன. பச்சிளங் குழந்தையும், ஓர் மாதின் பிணமும் அங்கே காணவே வியப்பும் திகைப்பும் அடைந்தான் அரசன். சிசுவை அநாதரவாக விட்டு மாதைக் கொலைசெய்த வனைக் கண்டுபிடிக்க நாலா பக்கங்களிலும் தூதர் களை ஏவினான். யாரோ ஒரு கள்வன் பெண்ணைக் கொன்றுவிட்டு நகைகளை அபகரித்துக் கொண்டு போயிருக்கவேண்டுமென்று அரசன் ஐயமுற்றான்.

தூதர்கள் ஏரியை அடைந்து, ஆசனத்திலமர்ந்து தியானிக்கும் பிராம்மணனைக் கையும் மெய்யுமாகப் பிடித்துக்கொண்டார்கள். விலங்கிட்டுக்கொண்டு அவனை அரசனிடம் சேர்த்தார்கள். ஏழைப் பிராம் மணன் கொலைக்குற்றம்சாட்டப்பட்டான். அப்பால் சுகேசன் தன் வரலாற்றை ஆதியோடந்தமாய்ச் சாற்றினான். தான்சொன்னதுமெய்யென்று நிரூபிக்க குழந்தையின் தலைக்கடியில் வைக்கப்பட்ட இலையை

அத்தாட்சியாகக் காண்பித்தான். அதில் எழுதப் பட்ட ஸ்லோகமும் அவன் கூறிய ஸ்லோகமும் ஒன்ருய் இருக்கக் கண்டான் அரசன். பிராம்மண னுடைய அடிகளில் வீழ்ந்து, ஆராயாமல் அளித்த மரண தண்டனையை ரத்து செய்து மன்னிப்பு கோரி ஞன் அரசன்.

அப்பால், அரசன் புத்திரன் இல்லாததால், அக் குழந்தையை தனக்கு கொடுக்குமாறு சுகேசனிடம் வேண்டிஞன். அதற்கு உடன்பட்டான் சுகேசன். சுகேசனின் மனைவியின் சடலம் தகனம் செய்யப்பட் டது அரசனுடைய ஏற்பாட்டின் பிரகாரம். அரசன் சுகேசனுக்கு நிறைய சன்மானங்கள் அளித்து, குழந்தையுடன் அரண்மனைக்குத் திரும்பலாஞன்.

இங்ஙனம், சுகேசன் சகலவிதமான பொறுப்புக் களினின்றும் விடுதலை பெற்ருன். அவன் சுதந்திர மாய் இருக்கின்ருன். நிவிர்த்தி மார்க்கத்தைத் தழுவிஞன். கடுமையான தவம் புரிந்தான். ஆத்மா வைப் பற்றியே இடைவிடாமல் தியானிப்பதன் வாயிலாக, அவன் நிர்விகல்ப சமாதி நிலையைப் பெற்ருன்.

சுகேசப் பிராஹ்மணனின் தீவிர பக்தி வைராக் கியத்தைக் கவனியுங்கள். அகிலாண்டகோடி பிரம் மாண்ட நாயகனை ஆண்டவன் தன் பக்தர்களைக் கவனித்து, அவர்களுடைய தேவைகளை மர்மமான முறையில் நிறைவேற்றி வைக்கிருர்.

கடவுளிடத்தில் தயக்கமில்லாத பக்தியையும், ஆத்ம சரணுகதியையும் செலுத்தி வருக. லோகா யத விவகாரங்களில் ஈடுபட்டிருந்தாலுங்கூட, மகத தேசத்துப் பிராஹ்மணனின் கீர்த்திவாய்ந்த ஸ்லோ கத்தை இடையருது உச்சரிக்கவும். பற்றற்ற

வாழ்க்கையை நடத்துக. நீங்கள் இறைவனைச் சாக்ஷாத்கரிப்பது மட்டுமின்றி அமரத்வ நிலையை யும் அடைவீர்கள். இதை பக்தி சிரத்தையுடன் சொல்கிறவனும் ஞாபகத்தோடு கேட்கிறவர்களும் முக்தி நிலையைப் பெறுவார்கள்.

## 64. துரதிர்ஷ்டத்தைத் தடுக்கும் ரஹஸ்யம்

ராம்லால் சேட் கடைக்கு முன்னால் ஓர் நாள் மத்தியானம், ஒரு சந்நியாசி நின்றுகொண்டிருந் தார். சேட் தம் வேலையில் கவனமாய் இருந்தார். ராம்லால் சேட் பெருத்த வியாபாரி. உலகத்தில் சந்தோஷமாயிருப்பதற்கு வேண்டிய சகலமும் அவ ரிடம் உண்டு. சம்ஸார ஸாகரத்தில் மிதமிஞ்சிய அளவில் ஆழ்ந்திருந்தாராதலால், கடவுள் இருக்கி றார் என்பதை ஞாபகத்தில்வைத்துக்கொண்டதே கிடையாது. கடவுள் அவரைத் திருத்தவேண்டுமென விரும்பியே அவர் முன்னால் சாதுவின் வடிவத்தில் தோன்றினார். மிக்க அலட்சியமான பார்வையுடன், ராம்லால் அச்சாதுவுக்கு ஒரு அணாவைக் கொடுக்கு மாறு தம் சேவகனை ஏவினார். ஆனால், சாது அதை ஏற் றுக்கொள்ள மறுத்தார். "சீதாராம்—ராதே சியாம்" என்று ஒரு தடவை ராம்லால் உச்சரிக்க வேண்டு மெனத் தாம் விரும்புவதாகக் கூறினார். ராம்லா லுக்குக் கோபம் மூண்டது. "எனக்கு உன்னுடன் —சோம்பேரிகளுடன் பேச நேரம் இல்லை. எனக்கு வேலை இருக்கிறது. வெளியே போ" என்று கடிந்து பேசினார், கர்ஜித்தார். "ஆண்டவன் நாமத்தை ஜபிக்க நேரம் கிடையாதென்றால், அவனை சிந்திப் பதற்குப் போதுமான அவகாசம் தருமாறு ஆண்ட வனிடம் பிரார்த்திக்கிறேன்" என்று சாது கூறிக் கொண்டே சாவகாசமாய் நடந்தார். ராம்லால் சிரித்தார்.

மாலை 6 மணிக்கு உலாவப் புறப்பட்டுப்போய், இரவு 8 மணிக்கு ராம்லால் வீட்டுக்குத் திரும்புவது வழக்கம். அன்று ராம்லால் வெளியே போனபோது சாது ராம்லால் போன்று வடிவந்தாங்கி வீட்டிற்குள் நுழைந்தார். ராம்லாலுக்குப் பாடம் புகட்டுவதற்கென்றே சாதுவின்வடிவத்தைத்தாங்கிய கடவுளால் என்னதான் செய்யமுடியாது? அவர் நேரே வீட்டிற்குள் போனுர். குடும்பத்தினர் வியப்படைந்தனர். அன்று அவ்வளவு விரைவில் வீட்டுக்குத் திரும்பி வந்ததன் காரணத்தை குடும்பத்தார் எல்லோரும் கேட்டார்கள். எத்தனையோ வடிவங்களை மேற்கொள்ளும் சக்தி படைத்த ஓர் மனிதன் அந்த ஊரில் உலாவுவதாகவும், அன்று அவன் தம்மைப் போலவே உருவத்தைத் தாங்கிக்கொண்டிருப்பதாகவும் பதில் கூறினுர். எனவே, அவன் மாறுவேஷத்தில் ஏதாவது விஷமம் பண்ணிஞல், அதைத் தடுப்பதற்கு அவர்களை எச்சரிக்கைப் பண்ணவே அதி விரைவில் திரும்பியதாகக் கூறினுர். இதைக்கேட்டு சேட்டின் மனைவியும் குழந்தைகளும் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார்கள். அப்பால் போலி சேட் கதவை தட்டிஞல் அவனை உள்ளே அனுமதிக்கலாகாதென்று, அவர்களை எச்சரித்துவிட்டுத் தமது அறைக்குள் போலி சேட் நுழைந்தார்.

உலாவப்போன உண்மை சேட் வீட்டுக்குத் திரும்பினுர். கதவு தாளிடப்பட்டிருப்பதைக் கண்டார். கதவைத் தட்டினுர். ''யாரது?'' என்று உள்ளிருந்து யாரோ கேட்க, அதற்கு சேட் ''நான்தான் ராம்லால்'' என்ருர். ''ஏ, படுபோக்கிரி! எங்களை தொந்தரவுபடுத்தவா வந்திருக்கிருய்! கடவுளுக்கு எங்கள் நன்றி! என் கணவஞர் ஏற்கனவே உள்ளே வந்துவிட்டார். உனக்கு கதவைத் திறக்கலாகாதென்று எங்களை எச்சரித்திருக்கிருர். போ வெளியே'' என்று சேட் மனைவி கடிந்து பேசினுள்.

சேட் வற்புறுத்தித் தட்டவே, அவர்கள் கதவைத் திறந்து பார்த்தார்கள். உள்ளே இருந்தவரைப் போலவே அவரும் இருப்பதைக்கண்டு அவரைப் போலி சேட் என்று தவருகக்கொண்டு அவரை அடித்து வாசலில் கட்டிப்போட்டார்கள். போலீஸ் காரர்களை அழைத்தார்கள். அவர்கள் வந்து சேட் டைக் கைவிலங்கிட்டும் சாது சேட்டையும் நீதி மன்றத்திற்கு இட்டுச் சென்ருர்கள். யார் உண்மை சேட், யார் போலி சேட் என்று நீதிபதியால் நிர்ணயிக்கக்கூட முடியவில்லை.

சாது சேட் அதற்கு ஓர் உபாயத்தை நீதிபதி யிடம் உரைத்தார். புதிய வீட்டைக் கட்டியதிலோ, அவரது பெண்ணைக் கலியாணம் செய்து கொடுத்த திலோ என்ன செலவாயிற்று என்பதைச்சட்டென்று கூறிவிட்டால், அவரையே உண்மையான சேட் என்று நிச்சயிக்கலாம் என்று கூறிஞர். ஐயோ, பாவம்! உண்மையான சேட் அவற்றை ஞாபகப் படுத்திக்கொள்ள முடியவில்லை. பின், நீதிபதி சாது சேட்டைப் பார்த்தார். கடவுளே அவராதலால், தமது சர்வஞ்ஞத்துவத்திஞல் செலவான தொகை களை அறிந்து சட்டென்று கூறிஞர். நீதிபதி ருஜுப் படுத்தி அவற்றைச் சரியெனக் கண்டுபிடித்தார். சாது சேட்டையே உண்மையானவரென்று தீர்ப்புக் கூறி, உண்மை சேட்டை உடனே நகரத்தைவிட்டு வெளியேற வேண்டுமென்றும் ஆக்ஞாபித்தார்.

நிகழ்ச்சிகளின் அசாதாரண திருப்பத்திஞல் சோர்வடைந்தசேட் பிருந்தாவனம் என்ற புண்ணிய ஸ்தலத்தை நோக்கிச்சென்ருர். அங்கே, இறைவன் நாமாவளியையே சதாகாலமும்ஜெபித்துக்கொண்டு காலங்கழிக்கலாஞர். மாதம் செல்லச் செல்ல, ராம் லால்சேட்டுக்கு மனைவி, குழந்தைகள், வர்த்தக ஸ்தாபனம் பற்றிய விவரங்கள் யாவும் மறந்துவர லாயின. ஒரு நாள், சாது அவருக்கு முன்ஞல்

தோன்றி, ''என்னைத் தெரிகிறதா? இறைவனது நாமாவளியை இப்போது ஜெபிப்பீரா? அதற்குப் போதுமான அவகாசம் கிடைத்திருக்கிறதா?'' என்று வினவினார். அவரது பாதாரவிந்தங்களில் அடியற்ற மரம்போலச் சேட் விழுந்து விம்மி விம்மி அழுதவண்ணம், ''ஹே! இரக்ஷக மூர்த்தியே! பரிதாபகரமான என் கதையைக்கேளுங்கள். பயங்கரமான துரதிர்ஷ்டத்தின் காரணமாகவே. ஆண்டவரின் நாமத்தை உச்சரிப்பதற்கு என் வாழ்க்கைமுழுதும் அர்ப்பணிக்க இப்போது முடிகிறது'' என்று ஆரம்பித்துத் தமது கதையைச்சொன்னார். அப்பால் சாது ''அதெல்லாம் என்னுடைய வேலை. உம்முடைய உருவத்தைப்போல், என்னை மாற்றிக்கொண்டு இதுவரை நிகழ்ந்தனவெல்லாம் உமக்காக நடத்திவைத்தேன். இப்போது எனது வடிவத்தை உமது வீட்டிலிருந்து திரும்பப் பெற்றுக் கொண்டேன். ஆகையால், நீர் இப்போது திரும்பிப் போகலாம்'' என்று கூறினார். சேட் அச் சாதுவை பெரிதும் பாராட்டி நன்றி செலுத்தி, ''மஹா தேவரே! இறைவன் நாமத்தில் ஏற்பட்ட பக்தி பரவசத்திலேயே நான் ஆழ்ந்து தவழ்கின்றேன். திரும்பிப் போகவே மாட்டேன்'' என்று சிறந்த பக்தி சிரத்தையோடு செப்பினார். ''சுபிட்சமான அதிர்ஷ்ட காலத்தில், மனிதன் ஒரு தடவையேனும் இறைவனை நினைப்பானுனல், அப்பால் அவனுக்குத் துரதிர்ஷ்டம் ஏன் வரப்போகிறது''? என்று கூறிக்கொண்டே சாது வழிநடந்தார்.

## 65. உலகியல் வாழ்க்கையின் இயல்பு

ஒரு சமயம், வேட்டையாடச் சென்ற மன்னன் ஒருவனை கோபங்கொண்ட ஒரு புலியும் மூன்று புலிக் குட்டிகளும் விரட்டிக்கொண்டு வந்தன. உயிரைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பி

ஓடிய மன்னன், ஆழமான, இருள் நிறைந்த பாழுங் கிணற்றுக்குள் விழுந்து விட்டான். அப்படி விழுந்தாலும் கிணற்றுச் சுவரில் வளர்ந்திருந்த ஒரு செடியைப் பிடித்துக் கொண்டு தொங்கினுன். மேலே அவன் மீது பாய புலி காத்துக்கொண்டிருந் தது. செடி கொஞ்சம் கொஞ்சமாக முறிய ஆரம் பித்தது. கீழே ஒரு முதலே இருந்தது. மன்னன் விழுந்தால் விழுங்குவதற்காக வாயைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தது. செடியின் வழியாக வந்த விஷப் பாம்பு அவனைக் கடிக்க வந்தது. ஏற் கனவே முறிந்துகொண்டிருந்த செடியின் அடிபா கத்தை இரண்டு எலிகள் கடித்துக்கொண்டிருந்தன.

இந்த நேரத்தில் கிணற்றுக்கு மேலே இருந்த மரத்தின் கிளையில் உள்ள தேன் கூட்டிலிருந்து ஒரு சொட்டு தேன் கீழே விழுந்தது. தேன் கூட்டுக் குள் புகுந்த விஷப் பூச்சிகள் இந்தத் தேனை விஷ மாக மாற்றியிருந்தன.

மன்னனின் நிலே, பரிதாபகரமானதாகவும், இக்கட்டானதாகவும், பயங்கரமானதாக வும், மரணத்தை எதிர்நோக்கியதாகவும் இருந் தது. அந்த நிலேயிலும் மன்னன், மரக்கிளேயி லிருந்து விழுந்த தேனே ருசிபார்க்கத் தன் நாக்கை நீட்டினுன்,

இதுதான் உலகியல் வாழ்க்கை. மனிதன் கவலே கள், எச்சரிக்கைகள், வேதனேகள், துன்பங்கள் ஆகியவற்றுடன் வாழ்கிருன். இந்த நிலேயிலும் விஷம்போன்ற புலன்வழி இன்பங்களே அனுபவிக்கத் துடிக்கிருன்.

மரத்தை உலக வாழ்க்கைக்கு ஒப்பிடலாம். புலி மற்றும் மூன்று புலிக்குட்டிகளேயும் காமம், கோபம், பேராசை, சித்தப்பிரமை ஆகியவற்றுக்கு

ஒப்பிடலாம். இரு எலிகளையும் மனிதனின் ஆயுளைக் குறைக்கும் இரவுக்கும் பகலுக்கும் ஒப்பிடலாம். பாம்பையும், முதலையையும் மேலும் கீழும் காத்திருக்கும் மரணத்துக்கு ஒப்பிடலாம். இந்தப் பரிதாப நிலையில், மன்னன் தேனை ருசி பார்த்தது போல, உலகியல் வாழ்வில் உழலும் மனிதன் இன்பம் நுகர விழைகிறான். உலகியல் புலன்வழி இன்பங்கள், மனிதனின் உயிரைப்பறிக்கும் கொடிய விஷம்.

மன்னன், தனது சூழ்நிலையில் தன்னைக் காப்பாற்றுமாறு இறைவனிடம் பிரார்த்தனை செய்திருக்கவேண்டும். அதுபோல மனிதன் உலகின் எண்ணற்ற கவர்ச்சிகள் மற்றும் கஷ்டங்களுக்கு மத்தியிலும் இறையனுபவம் பெற முயற்சிக்க வேண்டும்.

## 66. இளைஞனும் பண்டிதரும்

ஒருநாள் மாலையில் ஆற்றங்கரை ஓரமாக ஒரு இளைஞனும் ஒரு பெண்ணும் நடந்து சென்றுகொண்டிருந்தனர். இளைஞன் கையில் ஒரு பாட்டில் இருந்தது. சில சமயங்களில் அந்த இளைஞன், அந்தப் பெண்ணை முதுகில் சுமந்துகொண்டு சென்றான். சிறிது தூரம் நடந்ததும் அந்தப் பெண் தரையில் அமர்ந்துகொண்டாள். இளைஞனும் அவள் அருகில் அமர்ந்து அவளது காலைத் தடவிவிட்டான். பாட்டிலில் இருந்ததைக் குடித்தான்.

அந்த கிராமத்தின் பிராமண பண்டிதரும் ஆற்றங்கரை ஓரமாக நடந்து வந்து கொண்டிருந்தார். அவர், இளைஞனின் செயல்களை கூர்ந்து கவனித்து வந்தார். அவர் வேகமாக கிராமத்துக்குள் சென்றார். கிராம அதிகாரியைப் பார்த்து,

''ஒழுக்கங்கெட்ட ஒரு இளைஞன் பொது இடத்தில் குடிக்கிறான். ஒரு இளம் பெண்ணையும் உடன் அழைத்துச் செல்கிறான். ஒழுங்கீனமான செயல்களில் அவன் பகிரங்கமாக ஈடுபடுகிறான். அவன் தவறான உதாரணத்தை மக்கள் மத்தியில் வைக்கிறான். அவனை உடனடியாக இந்த இடத்திலிருந்து விரட்டவேண்டும்.''

கிராம அதிகாரி சிலரை அழைத்துக்கொண்டு அந்தத் தம்பதிகளை விரட்டியடிக்கப் புறப்பட்டார். திடீரென மழைவந்தது. ஒரு கூடாரத்தில் கிராம அதிகாரியும் மற்றவர்களும் நின்றுகொண்டு, அந்த இளைஞன் செய்வதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அந்த இளைஞன் மீண்டும் பாட்டிலில் இருந்ததைக் குடித்தான். அந்தப் பெண்ணின் காலைத் தடவிவிட்டான். கிராம அதிகாரியும் இந்த இளைஞன் ஒழுக்கங்கெட்டவன், குடிகாரன் என்று எண்ணினார்.

ஆற்றில் படகு ஒன்று புயலில் சிக்கிக் கவிழ்ந்தது. அதிலிருந்தவர்கள் ஆற்றில் மூழ்கப்பார்த்தார்கள். இளைஞன் தயங்காமல் ஆற்றில் குதித்து அனைவரையும் கரைசேர்த்தான். கிராம அதிகாரியும், பண்டிதரும் கூடாரத்தைவிட்டு வெளியே வரவில்லை. அவர்கள் வேடிக்கையாகப் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் இருந்தனர்.

மழை நின்றது. கிராம அதிகாரி, இளைஞன் அருகில் வந்தார். ''பொது இடத்தில் நீ குடிக்கலாமா? பொது இடத்தில் ஒழுங்கீனமாக நடந்து கொள்ளலாமா? இந்தப் பெண் யார்?'' என்று கேட்டார்.

இளைஞன் பதிலளித்தான் : ''நான் இன்று ஏற்கனவே முப்பது மைல் தூரம் நடந்து வந்திருக்கிறேன். நான் எனது கிராமத்தை அடையுமுன் இன்னும் 10 மைல்கள் நடக்க வேண்டும். நான் மிகவும் களைப்புற்று தாகமும் அடைந்தேன். இன்று வெயில் மிகவும் கடுமையாக இருக்கிறது. இந்த பாட்டிலில் தூய்மையான கங்கை நீர் இருக்கிறது. இந்தப் பெண் எனது தாயார். அவர்கள் இதய நோய் மற்றும் வாதத்தால் கஷ்டப்படுகிறார்கள். அவர்களால் நடக்க முடியாது. நான் அவர்களைத் தோளில் சுமந்து செல்கிறேன். தாங்க முடியாத வலியால் அவதிப்படும் என் அன்னையின் கால்களை நான் தடவிக்கொடுக்கிறேன்.

பிராமண பண்டிதர் வெட்கித் தலை குனிந்தார். கிராம அதிகாரி மலைத்து நின்றார். அவர் தனக்குள் பின்வருமாறு எண்ணினார் : ''இந்த இளைஞனைப் பற்றி அவசரப்பட்டு முடிவு செய்துவிட்டேன். நான் பகுத்தறிவைப் பயன்படுத்தத் தவறிவிட்டேன். எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டேன்! இந்த இளைஞனின் இரக்கம் கலந்த இதயத்தைப் பாருங்கள்! அவன் தைரியத்தைப் பாருங்கள்! அவன் உடனே ஆற்றில் குதித்து படகில் பிரயாணம் செய்தவர்களைக் காப்பாற்றிவிட்டான். நாங்கள் பேசிக்கொண்டும், தமாஷ் பண்ணிக்கொண்டும் இருந்தோம். அவன் எவ்வளவு பணிவாகப் பேசுகிறான் பார்த்தீர்களா? இந்தப் பெண் மிகவும் வேதனை அடைந்திருக்கிறாள்.''

அவர், பிராமண பண்டிதரைக் கடுமையாகச் சாடினார். உடனே ஒரு மாட்டு வண்டிக்கு ஏற்பாடு செய்து தாயாரையும் மகனையும் அவர்களது கிராமத்துக்கு அனுப்பி வைத்தார். அவர்கள் அருந்துவதற்கு நிறையப் பால் கொடுத்தார்.

ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்பாக நீங்கள் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். புறத்தோற்றத்தை எப்போதும் நம்பக்கூடாது. கூர்மையான புத்தி, சமநோக்கு, பகுத்தறிவு ஆகியவை உங்களுக்குத் தேவை. ஒரு விஷயத்தைப்பற்றி நீங்கள் முடிவு செய்வதற்கு முன்னதாக சரியான விரிவான தகவல் களை சேகரித்துக்கொள்ள வேண்டும். விஷமிகள் தரும் தவருன செய்திகளையும், பரப்புகிற வதந்தி களையும் நீங்கள் நம்பக்கூடாது. புத்தகப் படிப்பு மட்டும் போதாது. அது உங்களைப் பிடிவாதம் மற்றும் கர்வம் கொண்டவராக மாற்றும்.

## 67. புகழ்ச்சி தந்த பரிசு

இந்தியாவின் கிராமம் ஒன்றில் ஒரு கிழவி வசித்து வந்தாள். அவள் தன் மகன்களுடனும் மருமகள்களுடனும் வசித்துவந்தாள். அவளிடம் பணம் இல்லை. ஆதலால் அவளை யாரும் மதிக்க வில்லை. ஒவ்வொரு மருமகளும் அவளுடன் சண்டையிட்டாள்.

ஒருநாள் மகிழ்ச்சியில்லாத தனது வாழ்க்கை யில் வெறுப்புற்ற அந்தக் கிழவி வீட்டைவிட்டு வெளியேறினுள். அவள் கால்போன போக்கில் நடந்து சென்ருள். அடர்ந்த காட்டை அடைந் தாள். அங்கு கோடைப் பருவத்தை அழகிய பெண் உருவில் கண்டாள். கோடைப் பருவம் அந்தக் கிழவியைப் பார்த்து, ''தாயே! என்னைப் பற்றி நீ என்ன நினைக்கிருய்?'' என்று கேட்டது.

கிழவி சிரித்துக் கொண்டே, ''உன்னைப் பற்றியா? ஓ! அது இனிய நினைவு. காலங்களில் சிறந்த காலம் கோடைக்காலம். நடுங்கும் குளிருக் குப் பின் கோடைக் காலத்தை இரு கரங்களையும்

நீட்டி வரவேற்கிறோம். கோடையில் நிலவொளியையும், காலை நேரங்களில் குளிர்ந்த, புதிய, மணம் பரப்பும் காற்றையும் நாங்கள் அனுபவிக்கிறோம். நீ வரும்போது மகிழ்ச்சியும் உடன் வருகிறது. ஐஸ், ஐஸ்கிரீம், புத்துணர்ச்சி தரும் குளிர் பானங்கள் அனைத்தும் நீ தரும் பரிசு. நீ காலங்களின் அரசி. உன்னை நான் மிகவும் நேசிக்கிறேன்'' என்று கூறினாள்.

கோடைப் பருவம் இது கேட்டு பெரிதும் மகிழ்ச்சி அடைந்தது. அது கிழவிக்கு நன்றி சொல்லிவிட்டு ஆயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள தங்கத்தைக் கிழவிக்குக் கொடுத்துவிட்டுச் சென்றது.

கிழவி சிறிது தூரம் சென்றதும் மழைக் காலத்தையும் பச்சை சேலை உடுத்திய அழகிய பெண்ணைக் கண்டாள். மழைக்காலப் பெண் கிழவியை வணங்கி, ''நீ என்னைப்பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டாள். கிழவி மழைக் காலத்தைப் போற்றினாள்: ''வாழ்வுக்கு நீயே அழகு தருகிறாய். மழைக் காலத்தில் இயற்கை புது வாழ்வு பெறுகிறது. நீ இல்லை என்றால் வாழ்க்கை வறட்சியும் சோகமும் நிறைந்ததாகிவிடுகிறது. நீ வந்தால் நீரோடை சலசலக்கிறது; பூந்தோட்டங்கள் புன்முறுவல் பூக்கின்றன. குழந்தைகள் மகிழ்ச்சியால் ஆடிப் பாடுகின்றனர். கிழவன்கூட கண் அடிக்கிறான்; விசில் அடிக்கிறான். கவிஞர்கள் உன்னிடமிருந்தே உற்சாகம் பெறுகின்றனர். சுற்றுலா, விருந்துகள் எல்லாம் அரசியே நீ தந்த பரிசு! உலகம் உன்னை அன்புடனும் நன்றியுடனும் வரவேற்கிறது.''

மழைக் காலம் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது. அது மதிப்புமிக்க நவரத்தினங்கள் நிறைந்த ஒரு பையை பரிசாகக் கொடுத்துவிட்டுச் சென்றது.

தனக்கு வாய்த்த அதிர்ஷ்டத்தை எண்ணி கிழவி மகிழ்ந்தாள். அவள் இன்னும் சிறிது தூரம் சென்றதும் குளிர் காலம், வெண்ணிற ஆடை உடுத்தி மயக்கும் பெண்ணாக வந்து நின்றது. அது, கிழவியைப் பார்த்து, ''என்னைப்பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டது. கிழவி அவளையும் புகழ்ந்தாள். ஆக, குளிர் காலமும் அவளுக்கு நிறையப் பரிசுத் தொகையைத் தந்துவிட்டு மகிழ்வுடன் சென்றது. கிழவி மகிழ்ந்தாள். வீட்டுக்குத் திரும்பினாள். குழந்தைகளிடம் நிகழ்ந்ததைக் கூறினாள். அவளிடம் இப்போது பணம் இருந்ததால் அவளை எல்லோரும் மதித்தனர்; அன்பு செலுத்தினர்.

அந்த கிராமத்தில் மற்றொரு கிழவி இருந்தாள். அவளும் தனது குழந்தைகளால் துன்புறுத்தப்பட்டாள். பக்கத்து வீட்டுக் கிழவிக்கு அடித்த அதிர்ஷ்டத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட அவள், பக்கத்து வீட்டுக் கிழவி செய்ததுபோலவே செய்தாள். அவளும் வீட்டைவிட்டு வெளியேறினாள். அவளும் பருவ காலங்களை ஒன்றன் பின் ஒன்றாகச் சந்தித்தாள். ஆனால் அந்தக் கிழவி மூவரையும் கடுமையாகக் குறைகூறிப் பேசினாள். ஆகவே அந்த மூன்று பருவ காலப் பெண்களும் அவளை அடித்து விரட்டினார்கள். மகிழ்ச்சி இழந்த கிழவி கவலையுடன், பசியுடன் வீடு திரும்பினாள். முன்பு அனுபவித்ததை விடக் கடுமையான துன்பத்தை அனுபவித்தாள்.

## 68. அக்பரும் பிச்சைக்காரனும்

பாதுஷா அக்பர் ஒரு பெரும் விருந்து நடத்தினார். இதில் பல்லாயிரக்கணக்கான பேர்கள் கலந்து கொண்டனர். ஆயிரமாயிரம் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் உணவளிக்கப்பட்டது.

அரண்மனையில் உணவருந்த ஒரு குழுவினர் அமர்ந்தனர். அவர்களில் ஒருவனைத்தவிர மற்ற அனைவரும் உரத்த குரலில் 'அக்பர் பாதுஷா வாழ்க' என்று கோஷமிட்டனர். இதை மாடியின் முன் பகுதியிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த அக்பர், கோஷமிடாத நபரை இழுத்துவரச் சொன்னார்.

''அவனுக்கு உணவு இல்லை என்று சொல். என் புகழ் பாடுபவர்களுடன் சேர்ந்து 'அக்பர் பாதுஷா வாழ்க' என்று சொல்லாவிட்டால், அவன் அரண் மனைக்குள் நுழையவும் முடியாது. அவனை வெளியே இழுத்துச் சென்று வாயிலுக்குப் புறத்தே'' தள்ளுங்கள் என்றார்.

பாதுஷாவின் உத்திரவு உடனே ஈவிரக்கமின்றி நிறைவேற்றப்பட்டது.

அன்றிரவு பாதுஷா உறக்கம் வராமல் படுக்கை யில் புரண்டு புரண்டு படுத்தார். அப்போது எங்கிருந்தோ ஒரு குரல் வந்தது. ''அக்பர்! நான் கடவுள். கோடிக்கணக்கான பேர்கள் என் புகழ் பாடுகின்றனர். மிகத் தாழ்ந்த நிலையிலிருக்கிறவர் கள், பரம ஏழை, மிகவும் தீயவன், என்னை ஏசுகிற வன், நான் இருப்பதையே நம்ப மறுப்பவன் ஆகியோருக்கும்கூட நான் ஆசி வழங்க மறுப்ப தில்லை. அப்படியிருக்க உனது புகழ் பாடாத ஒரு மனிதனுக்கு உணவில்லை என்று நீ எப்படிச் சொன் ணாய்? அந்த மனிதன் ஒரு மாபெரும் ஞானி. எனது பக்தன். அவர் உன் புகழ் பாடத் தேவையில்லை. அவருக்கு நீ உணவளித்தால், நீ ஆசீர்வதிக்கப் படுவாய்.''

அக்பருக்குத் தன் காதுகளை நம்ப முடியவில்லை. பிறகு அந்தக் குரலின் ஒலி அதிகரித்துக்கொண்டே

சென்று அந்த அறை முழுவதும் பரவியது. இறுதியில், அது இறைவனின் குரல் என்பதை அக்பர் புரிந்துகொண்டார்.

காலையில், அந்த ஏழை மனிதனைத் தேடிப் பிடித்துவர ஆள் அனுப்பினார், அக்பர். அந்த மனிதர் வந்தபோது, அக்பர் அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கி தன்னை மன்னிக்குமாறு வேண்டினார்.

அந்த ஞானி, புன்முறுவல் செய்துவிட்டு, ''பாதுஷா! நீ மன்னிப்புக் கோர அவசியமில்லை. கடவுளுக்கு ஒருபோதும் தீமை செய்ய முடியாது. அப்படித்தான் அவரது சீடர்களும். அவர்கள் அச்சுறுத்தலிலிருந்து விடுபட்டவர்கள். நீ அருள் பெற்றவன். உனது செயல்மூலம் நீ இறைவனின் குரலைச் செவிமடுக்கவும், இறைவனிடத்திலிருந்து ஒரு போதனையைப் பெறவும் உனக்கு வாய்ப்புக் கிடைத்தது'' என்று கூறினார்.

## 69. தலையணைக்கு அடியில் பணம்

ஒருவன் பல ஆயிரக்கணக்கான ரூபாய் பணத்துடன் தனியாக பயணம் செய்தான். அவன் ஒரு ஊருக்கு வந்து ஒரு வீட்டில் தங்கினான். அங்கு சில நாட்கள் தங்க திட்டமிட்டிருந்தான். என்றேனும் ஒரு நாள் அவன் பணத்தைத் திருடி விடலாம் என்று அந்த வீட்டுக்காரன் எண்ணினான்.

ஒவ்வொரு நாளும் அந்த யாத்திரீகன் வீட்டுக்காரனுக்கு முன்பாக தன்னுடைய பணத்தை எண்ணி வைப்பான். பகல் முழுவதும் அந்தப் பணம் அவன் பையிலே இருக்கும். இரவில் அவன் உறங்கும்போது அந்தப் பணம் எங்கே இருக்கிறது என்று வீட்டுக்காரன் தேடிப் பார்த்தான். அவனால்

கண்டு பிடிக்க முடியவில்லை. பல இரவுகள் அவன் இவ்வாறு தேடினான். யாத்திரீகனின் மூட்டை முடிச்சுகளிலும் அவனது தலையணைக்கு அடியிலும், படுக்கைக்கு அடியிலும் தேடிப் பார்த்தான். ஆயினும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் ஒவ்வொரு நாள் காலையிலும் அந்தப் பணம் யாத்திரீகனுடைய கையில் இருக்கும்.

இந்த மாய விளையாட்டு ஒரு வாரத்திற்கு மேலாக நிகழ்ந்து கொண்டிருந்தது. வீட்டுக்காரன் பயந்து போனான். வந்திருக்கும் யாத்திரீகன் ஒரு மந்திரவாதியாக இருக்குமோ? அல்லது சக்திமிக்க யோகியாக இருக்குமோ? என்று அவன் எண்ணினான். ஒரு நாள் அவன் யாத்திரீகனிடம் தன்னுடைய தவறை ஒப்புக்கொண்டான். ''இரவெல்லாம் அந்தப் பணத்தை எங்கே வைத்திருந்தீர்கள். நான் தேடித்தேடிப் பார்த்தேனே! எப்படி என்றால் கண்டுபிடிக்க முடியாமல் போயிற்று.''

அந்த யாத்திரீகன் வாய்விட்டுச் சிரித்தான். ''நண்பரே! உனது எண்ணத்தை நான் அறிவேன். ஆதலால்தான் இரவில் பணத்தை உமது தலையணைக்கு கீழே வைத்திருந்தேன். உமது தலையணிக்குக் கீழே ஒருநாளும் நீர் பணத்தைத் தேடவில்லை!''

வீட்டுக்காரன், ஆசைகள் நிறைந்து அலைபாயும் மனம்; யாத்ரீகன், கடவுள்; பணம், ஆன்மீகப் பேரானந்தம், தீயமனம் மகிழ்ச்சியை விரும்பி அதைப் புலன் வழிப் பொருள்களில் தேடுகிறது. அதன் முயற்சி வீண் முயற்சியாகப் போகிறது. இறுதியில் அது தனது தீய நோக்கங்களை விடுத்து இறைவனை அணுகி சரணாகதி பண்ணுகிறது. பேரானந்தம் உள்ளே இருக்கும் ஆத்மாவிலேயே இருக்கிறது என்றும், புறத்தே இல்லை என்றும் இறைவன் உணர்த்துகிறார்.

## 70. நகைச்சுவையுடன் பேசும் பழக்காரர்

ஒருசமயம் ஒரு மன்னன் மாபெரும் விருந்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தான். பல்வேறு மன்னர்கள், நிலப் பிரபுக்கள், அதிகாரிகள் ஆகியோரை அவன் அழைத்திருந்தான். அவன் திராட்சை, ஆரஞ்சு, ஆப்பிள் முதலிய பழங்களையும், இனிப்புப் பண்டங்களையும் விருந்துக்காக சேகரித்து வைத்திருந்தான். ஆனால் நல்ல மாம் பழங்கள் அவனுக்குக் கிடைக்கவில்லை.

அந்த நேரத்தில் அரண்மனை வழியாக ஒரு பழ வியாபாரி சென்றான். அவன் நல்ல மாம்பழங்களை விற்றுக்கொண்டு சென்றான். வாயில் காப்போன் அந்த வியாபாரியை அழைத்து, ''இன்று அரண்மனையில் விருந்து. அரசர் உனது மாம்பழங்கள் அனைத்தையும் வாங்கிக்கொள்ளுவார். ஆனால் நீ உனது லாபத்தில் பாதியை எனக்குத் தரவேண்டும். அப்போதுதான் நான் உன்னை உள்ளே செல்ல அனுமதிப்பேன்'' என்றான்.

பழவியாபாரி முதலில் தயங்கினான். இறுதியில் சம்மதித்தான். அவன் புத்திசாலி. நகைச்சுவையுடன் பேசும் ஆற்றல் உடையவன். அவன் அரண்மனைக்குள் நுழைந்தான். அரசன் எல்லாப் பழங்களையும் வாங்கிக்கொண்டான். ''எவ்வளவு பணம் வேண்டும்?'' என்று கேட்டான்.

''அரசே! எனக்கு பணம் வேண்டாம். பிரம்பு கொண்டு நூறு தடவை அடியுங்கள்'' என்று பழ வியாபாரி கூறினான்.

அரசன் ஆச்சரியத்தில் ஆழ்ந்தான். ''நல்லதொரு தொகையைப் பெற்றுக்கொள். நீ கொடுத்த

மாம்பழங்கள் சுவையானவை. எனக்கு அவசரமாகத் தேவைப்பட்ட மாம்பழங்களைத் தந்த உன்னை எப்படி நான் அடிக்கமுடியும்? உனக்கு நான் சிறப்பாக நன்றி சொல்ல வேண்டும்'' என்று கூறினான். ஆனால் பழ வியாபாரி, ''இல்லை அரசே, என்னை நீங்கள் அவசியம் நூறு தடவை அடிக்க வேண்டும். அப்போதுதான் நான் பெரிதும் மகிழ்ச்சி அடைவேன்'' என்று கூறினான்.

அரசன் தனது பணியாளை அழைத்து, பழ வியாபாரிக்கு மெதுவாக நூறு அடிகள் கொடுக்க உத்திரவிட்டான். பணியாள் ஐம்பது அடிகள் அடித்தான். ஐம்பத்தொன்றாவது அடியைத் தருவதற்கு பிரம்பை உயர்த்தியபோது பழ வியாபாரி, ''அடிக்காதீர்கள்! அடிக்காதீர்கள். எனக்கு ஒரு பங்குதாரர் இருக்கிறார். அவரை நீங்கள் ஐம்பது தடவை அடிக்கவேண்டும்'' என்றான்.

அரசன் ஆச்சரியத்தில் ஆழ்ந்தான். என்ன வேடிக்கை மனிதன் இவன் என்று அரசன் எண்ணினான். ''உனது பங்குதாரர் யார்?'' என்று கேட்டான்.

''நான் உங்கள் அரண்மனைக்குள் நுழைந்தபோது எனக்குக் கிடைக்கும் லாபத்தில் பாதியை தனக்குத் தருமாறு உங்கள் அரண்மனைக் காவலாளி கூறினார். ஆதலால் ஐம்பது அடிகளை அவர் பெற்றுக் கொள்ளவேண்டும்'' என்று பழவியாபாரி கூறினான்.

அரசன் உடனே கவலாளியை அழைத்தான். அவனை ஐம்பது முறை கடுமையாக அடிக்க ஆணையிட்டான். அவனை வேலையிலிருந்தும் நீக்கினான். வியாபாரியின் நேர்மையைப் பாராட்டி அரசன் நிறையப் பரிசுகள் வழங்கினான்.

நேர்மையான மனிதன் எப்போதும் மதிக்கப் படுகிறான். நேர்மைக்குத் தகுந்த பலன் கிடைக்கும். நேர்மை சிறந்த நோக்கம் மட்டுமல்ல; உயர்ந்த பண்பும் ஆகும். நேர்மையான மனிதன் எந்த விதமான பணியிலும் வெற்றி பெறுகிறான். அவனிடம் மக்கள் மகத்தான நம்பிக்கை கொள்ளுகிறார்கள்.

பேராசைக்கார மனிதனை அவனது உற்றார் உறவினரே வெறுப்பர். அவன் எப்போதும் அமைதியற்ற, திருப்தியில்லாத, துன்பமயமான வாழ்க்கையை நடத்துகிறான். பிறரைப் பறித்து வாழ்கிறான். அவன் மற்றவர்களின் ரத்தத்தை உறிஞ்சுகிறான்; பிறரைச் சுரண்டுகிறான். பணம் சம்பாதிக்க அவன் எத்தகைய தந்திரமும் ஊழலும் செய்கிறான். பணம் தான் அவனது குறிக்கோள். பணமே அவனது கடவுள். பணத்துக்காக அவன் கொலை செய்யவும் தயங்கமாட்டான். ஆசை மனிதனின் பகுத்தறிவை மங்கச் செய்கிறது. அவனைக் குருடனாக ஆக்குகிறது. சுயநலம், ஏமாற்றுத்தனம், இரட்டை நாக்கு, தந்திரம், போலித்தனம் ஆகியவை பேராசையின் நிரந்தர நண்பர்கள். போருக்கு அடிப்படை ஆசை. அது மாயையின் செல்லக் குழந்தை. அது பச்சோந்தி போன்றது. அது பல்வேறு வடிவங்களையும் நிறங்களையும் கொள்கிறது. மனிதன் பணத்துக்கு ஆசைப்படுகிறான்; மனோபலம் பெற ஆசைப்படுகிறான்; குரு பீடத்துக்கு ஆசைப்படுகிறான்; சீடனாக ஆசைப்படுகிறான்; ஆசிரமத்தில் சேர ஆசைப்படுகிறான்.

தர்மம், சத்சங்கம், நேர்மை இவற்றின் மூலம் பேராசையை அழியுங்கள். அப்போது உன்னத அமைதி மற்றும் பேரானந்தத்தை நீங்கள் அனுபவிப்பீர்கள்.

# 71. நிழல்

ஒரு மனிதன் தனது நிழலை விரும்பவில்லை. அது, தன்னை, எப்போதும் தொடர்ந்து வருவதை அவன் கண்டான். அது அவனை ஒவ்வொரு வினாடி யும் பயமுறுத்தியது. "இந்த நிழலைக் குழி தோண்டி புதைத்து விடுகிறேன். இதன் தொல்லை யிலிருந்து நான் என்னை விடுவித்துக் கொள்ள வேண்டும்" என்று அவன் எண்ணினான்.

அவன் ஆழமான ஒரு குழி தோண்டினான். அவன் அதற்குள் பார்த்தான். அக்குழியின் அடியில் நிழல் தெரிந்தது. அவன் மிகவும் மகிழ்ச்சி அடைந் தான். அவன் அவசர அவசரமாக மண்ணைத் தள்ளி குழியை மூடினான். ஆனால் நிழல் மேலே வந்து விட்டது. அவன் மிகவும் வருந்தினான்.

இப்போது நிழலை விட்டு ஓடிவிட எண்ணினான். ஓடத்துவங்கினான். சூரியன் இருக்கும் திசைக்கு எதிர் திசையை நோக்கி ஓடினான். இப்போது நிழல் தனக்கு முன்னே ஓடுவதை அவன் கண்டான். அதைத் தாண்டி ஓட அவனால் முடியவில்லை. அவன் எவ்வளவு வேகமாக ஓடினாலும் நிழலைத் தாண்டி ஓட முடியவில்லை.

பிறகு அவன் திரும்பி சூரியனை நோக்கி ஓடி னான். நிழலைத் தாண்டி வந்துவிட்டதாக எண்ணி மகிழ்ந்தான். ஆனால் உண்மையில் அவன் நிழலி லிருந்து விடுபடவில்லை.

இறுதியாக, அவன் தரையில் ஆகாயத்தைப் பார்த்தவாறு படுத்துக் கொண்டான். அவன் இடப் பக்கமும் வலப் பக்கமும் திரும்பி நிழல் இருக்கிறதா என்று பார்த்தான். இல்லை. அவன் இப்போது அதை இழந்துவிட்டான். இப்போது அவன் அமைதியாக உறங்கினான்.

அதுபோல் 'நான்' 'எனது' என்பவை மனிதனுடன் எங்கும் செல்லுகின்றன. அவனைத் தடுமாற வைக்கின்றன. சாதகனிடம் அகந்தை தலைதூக்குகிறது. அவன் அதைப் புதைத்து அழித்துவிட எண்ணுகிறான். ஆனால் அவன் ஓடத்தொடங்கும் போது அது அவனுக்கு முன்னால் ஓடுகிறது. கல்வி, எளிமை, தொண்டு, பணிவு ஆகியவை குறித்து கர்வம் தோன்றலாம். அது எந்த வடிவமும் கொள்ளும். அவன் கடவுளை நோக்கி ஓடினால், அகந்தை பின்னுக்குத் தள்ளப்படுகிறது. அவன் விடுகிறபோது, அது முழுமையாக மறைந்து கடவுளிடம் முழுமையாக சரணாகதி அடைந்து விடுகிறது. இப்போது அவன் அமைதியாக இருக்கிறான். அவன் கவலையின்றி இருக்கிறான். பதட்ட நிலையிலிருந்து விடுபட்டிருக்கிறான். இடையறாத பேரானந்தத்தையும் மகிழ்ச்சியையும் அவன் அனுபவிக்கிறான்.

## 72. மறைந்திருக்கும் செல்வம்

ஒரு சமயம் ஒரு ஏழைக் குடும்பம் வாழ்ந்து வந்தது. கணவனும் மனைவியும் சில குழந்தைகளுடன் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தமது உணவுக்காக கஷ்டப்பட்டு பணம் சம்பாதிக்க வேண்டியிருந்தது சில காசுகளுக்காகவும், சில ரொட்டித் துண்டுகளுக்காகவும் கடைவீதிகளில் கையேந்தி நிற்க வேண்டியிருந்தது. செல்வந்தர்களின் கையிலுள்ள பணத்தைப் பார்க்கும்போது அவர்கள் மனதில் உற்சாகம் பிறக்கும். கருணை உள்ளம் கொண்ட சிலர் கொடுக்கும் பணத்தில் அத்தியாவசியப் பண்டங்களை வாங்கிக்கொள்ளுவர். வீட்டில் போய் நன்கு ஓய்வெடுத்துக்கொள்ளுவர். அடிக்கடி அவர்களுக்கு உணவும் இருக்காது; ஓய்வும் கிடைக்காது. தம் நிலைக்காக அவர்கள் வருந்தினர். அவர்கள்

கண்ணீருக்கும் புன்சிரிப்புக்கும் இடையிலும், மகிழ்ச்சிக்கும் வருத்தத்துக்கும் இடையிலும் லாபத்துக்கும் நஷ்டத்துக்கும் இடையிலும் இன்பத்துக்கும் வேதனைக்கும் இடையிலும் வாழ்ந்துவந்தனர்.

ஆனால் பரம்பரைச் சொத்து அவர்களுக்கு ஏராளமாக இருக்கிறது. ஆனால் இதுபற்றி அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் வாழ்ந்து வந்த குடிசைக்கு அடியில் அந்தச் சொத்து புதைத்து வைக்கப்பட்டிருந்தது. அந்தப் புதையலுக்கு மேல் அமர்ந்து அவர்கள் ஓய்வு எடுத்தனர்; உறங்கினர்; கிடைத்ததை உண்டு துன்பமயமான வாழ்க்கை வாழ்ந்தனர். ஆனால் பரம்பரைச் சொத்துபற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது. பூமியைத் தோண்டினால் புதையலாக இருக்கும் சொத்து கிடைக்கும். அவர்கள் கவலையெல்லாம் மறைந்துவிடும்.

தனிப்பட்ட ஆத்மாவின் நிலையும் இதுதான். ஆத்மாவின் உன்னதமான செல்வம் அவனது இயல்பான திரை என்றும் படுக்கைக்குக் கீழே இருப்பதை அவன் உணருவதில்லை. உலகியல் வாழ்க்கை, புலன்வழிப் பொருட்களை அனுபவித்தல் இவற்றின் மீது நாட்டம் கொண்டு அவன் அலைகிறான். ப்ரிய, மோத, ப்ரமோத என்னும் மூன்று மனநிலைகளை உடையதாக பேரானந்தத்துக்குக் குறுக்கே நிற்கும் திரை அமைந்திருக்கிறது.

'ப்ரிய' என்பது ஆசைப்பட்ட பொருளைப் பார்ப்பதன்மூலம் மகிழ்ச்சி அடைதல், 'மோத' என்பது ஆசைப்பட்ட பொருள் தன் கையில் கிடைத்ததும் அடைகிற பெருமகிழ்ச்சி, 'ப்ரமோத' என்பது ஆசைப்பட்ட பொருளையே அனுபவிப்பதன் மூலம் அடைகிற அதிகமான மகிழ்ச்சி. ஆசைகள் படிப்படியாக நிறைவேற்றப்பட்டு மனம் அமைதி

அடைகிறபோது, மனிதன் ஆத்மாவின் பேரானந்த நிலையைக்காண அறியாமை என்னும் திரையின் மூலம் முயற்சிக்கிறான். இந்தத் திரையை அவன் கிழித்துவிட்டால், அவன் ஏழ்மைக் குடும்பத்தைச் சார்ந்தவனாக இருக்கமாட்டான்; அவமானம் வேதனை, எரிச்சல் நிறைந்த புலன் வழிப்பட்ட சிற்றின்பத்துக்காக 'சம்ஸாரம்' என்னும் சந்தையில் அலைந்து திரியமாட்டான். ஒவ்வொரு நாளும் ஜீவாத்மா ஆழ்ந்த உறக்க நிலையில் புதையலுக்கு அருகில் செல்லுகிறது. ஆனால் அறியாமையின் காரணமாக அதை அடையமுடியவில்லை.

விவேகம், பற்றற்ற தன்மை இவற்றின் துணையுடன் ஆத்மாவின் உண்மைத் தன்மைபற்றி சிந்தனை செய்வதன்மூலம் ஜீவாத்மா அறியாமையை அகற்றுகிறபோது அவன் மறைந்திருக்கும் ஆத்மாவின் செல்வத்தைக் கண்டுபிடிக்கிறான். இவ்வாறு அவன் ஆத்ம சாம்ராட் அல்லது ஆன்மீகப் பேரரசனாக ஆகிறான்.

## 73. கிருஷ்ணரும் சுதாமாவும்

சுதாமா கிருஷ்ணரைப் பார்க்க வந்தபோது, கிருஷ்ணர் அரண்மனையில் இருந்தார். சுதாமா மிக எளிய உடை உடுத்தியிருந்த காரணத்தால் அரண்மனைக்குள் நுழையத் தயங்கினார். அப்போது கிருஷ்ணர் ராதையுடன் இருந்தார். ஒரு காவலாளி அங்கு வந்து ''பிரபு! சுதாமா என்ற பெயருடைய ஏழை பிராமணர் எளிய உடையுடன் வந்திருக்கிறார். அவர் தங்களைத் தனது நண்பன் என்று கூறிக் கொள்கிறார்'' என்றான்.

காவலாளி சொல்லி முடிப்பதற்கு முன் கிருஷ்ணர் உணர்ச்சிப் பெருக்குடன் எழுந்தார்.

'சுதாமா' என்ற ஒரு சொல்போதுமானதாக இருந்தது. காவலாளியைத் தள்ளிவிட்டு, தன் இருக் கையிலிருந்து எழுந்து ''சுதாமா! என் அன்பு சுதாமா'' என்று உரக்கச் சொல்லிக் கொண்டு ஓடினர்.

கிருஷ்ணர் திடீரென்று புறப்பட்டுப் போவதற் கான காரணம் ராதைக்குத் தெரிவிக்கப்படவில்லை. அவள் மிகவும் வருந்தினள். இப்போது கிருஷ்ணர் சுதாமாவுடன் வந்தார். ராதை வருத்தத்துடன் இருப்பது கண்டு ''ராதா! என்னை மன்னித்துவிடு. எனது பக்தர்களிடம் நான் கொண்டிருக்கும் தீவிர அன்பு என்னிலும் உயர்ந்தது. நான் அவர்களின் அடிமை'' என்று கிருஷ்ணர் கூறினர்.

பிறகு ஸ்ரீ கிருஷ்ணர், சுதாமாவை தனது ஆசனத்தில் அமரச் செய்தார். அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது சுதாமாவின் கையில் ஒரு சிறு பார்சல் இருப்பதை கிருஷ்ணர் கண்டார். அதில் அவல் இருந்தது. சுதாமா கிருஷ்ணருக்கு அதை அன்புப் பரிசாகக் கொண்டு வந்திருந்தார். இந்தச் சிறிய பரிசை கிருஷ்ணருக்குத் தர சுதாமா வெட்கப்பட்டார்.

கிருஷ்ணர் அந்தப் பார்சலை வாங்கிப் பிரித்து அவலைத் தின்றர். ''ராதா! நான் ஒருபோதும் இவ்வளவு ருசியான அவலைத் தின்றதில்லை'' என்று கூறினர்.

இறைவன் பக்தர்களிடம் கொண்டிருக்கும் அன்பு இத்தகையது.

## 74. கடவுளின் கருணை

கடவுள் பக்தர்களுக்கு எப்போதும் கருணை புரிந்து வருகிறர் எல்லா இடங்களிலும் உள்ள

பக்தர்களுக்கு எல்லா நேரங்களிலும் அவர் அருள் புரிகிறார். நீ சிரத்தையுடன், இதயத்தின் அடித் தளத்திலிருந்து எழும் அன்புடன் இறைவனை வழி பட்டால், ஆபத்து நேரத்தில் உங்களை ஆபத்தி லிருந்து காக்க இறைவன் ஓடிவருகிறான். இறைவன் பக்தர்களுக்குத் தொண்டு செய்கிறான். இறை வனுக்கு தனது வாக்குறுதியைவிட பக்தர்களின் வாக்குறுதி பெரிது. இறைவன் தனது பக்தர்களிடம் எந்த அளவுக்கு அன்பு செலுத்துகிறார் என்பதை மகாபாரதத்தில் உள்ள பின்வரும் கதை உணர்த்து கிறது.

மகாபாரதப்போர் குருக்ஷேத்ரத்தில் தீவிரமாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. கர்ணன் நாகாஸ்த் ரத்தை விடுத்திருந்தான். இந்த அஸ்த்ரம் அனைத் தையும் கபளீகரம் செய்துவிடும். இந்த அஸ்த்ரத்தை அர்ஜுனனுக்கு குறிவைத்து கர்ணன் செலுத்தி யிருந்தான். அர்ஜுனன் கண்ணனையே பார்த்துக் கொண்டிருந்தான். அஸ்த்ரம் அவன் கழுத்தை நோக்கி வந்தது.

பகவான் கிருஷ்ணர் இதனை அறிந்தார். பக்த னைக் காக்கும் பொறுப்பு அவருக்கு ஏற்பட்டது. போரில் சண்டையிடுவதில்லை; போர்புரிவோருக்கு உதவுவதில்லை என்று அவர் உறுதி மேற்கொண்டிருந் தார். அர்ஜுனனின் தேரோட்டி என்ற அளவில் இருந்துவிட்டார். ஸ்ரீ கிருஷ்ணர், பண்டவர்களுக்கு உதவுவதற்காக தனது உறுதியைத் தளர்த்திக் கொண்டார். ஸ்ரீ கிருஷ்ணர் காலால் தேரை அழுத் தினார். இதன் காரணமாக குறிவைக்கப்பட்ட அர்ஜுனனின் தலை கீழே இறங்கியது. நாகாஸ்த்ரம் அர்ஜுனனின் கிரீடத்தைத் தட்டிச்சென்றது. ஸ்ரீ கிருஷ்ணரின் அழகைக் காண்பதில் மூழ்கி இருந்த அர்ஜுனனுக்கு அப்போதுதான் நிகழ்ந்தது என்ன

வென்று புரிந்தது. அதன் பிறகுதான் பகவான் தன்னை எவ்வாறு காப்பாற்றினார் என்பதையும் அர்ஜுனன் உணர்ந்தான்.

நாராயண அஸ்த்ரம் விடுக்கப்பட்டபோது, கிருஷ்ணர் கூறியபடி தர்மபுத்ரர், அர்ஜுனன் உட்பட பாண்டவர் படை முழுவதும் அதனை வணங்கியது. ஆகவே அவர்கள் அனைவரும் காப்பாற்றப்பட்டனர்.

ஆனால் மாவீரனான பீமன், எதிரி விடும் அஸ்த்ரதுக்குப் பணிவது, வெட்கப்படத்தக்க செயல் என்று கருதினான். ஆகவே அந்த அஸ்த்ரத்துக்குப் பணியுமாறு ஸ்ரீ கிருஷ்ணர் கூறிய யோசனையை அவன் ஏற்க மறுத்துவிட்டான். வீரனைப்போல் அந்த அஸ்த்ரத்தை எதிர்நோக்க அவன் ஆயத்தமானான். அதனால், தான் இறக்கவும் தயங்கவில்லை. நாராயண அஸ்த்ரத்தின் சக்தியும், பீமன் எதிர்நோக்கியுள்ள ஆபத்தும் பகவானுக்கே தெரியும். இனி வார்த்தைகளால் பீமனைப் பணிய வைக்க முடியாது. ஆகவே பகவானுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. பகவானும் அர்ஜுனனும் பீமனை பலவந்தமாக பூமியில் தள்ளி அஸ்த்ரத்தை வணங்குமாறு செய்தனர். அஸ்த்ரம் பீமனைத் தாக்கவில்லை.

பீமன் தானாக வணங்கவில்லை. நீங்கள் அரை மனதுடன் வணங்கினாலும் இறைவன் திருப்தி அடைகிறான். ஏனெனில் நீங்கள் அவனது பக்தர் என்பது இறைவனுக்குத் தெரியும். உங்களுக்கு இன்னும் புரியாத விஷயங்கள் இருக்கின்றன என்பதும் இறைவனுக்குத் தெரியும். நீங்கள் இயந்திரம் போல இறைவனை இன்று வணங்கினாலும், நாளை அவனுடைய உண்மை பக்தனாக ஆகிவிடுவீர்கள். நீங்கள் அவன் பக்கம் திரும்பிவிட்டால், அவன்

உங்கள் அடிமையாக ஆகிவிடுகிறான். காலமெல்லாம் உங்களை ஆபத்திலிருந்து காப்பாற்றுகிறான். பீமன், அர்ஜுனன் மற்றும் பாண்டவர் படை முழுவதையும் காப்பாற்றியதுபோல உங்களையும் காப்பாற்றுகிறான்.

இறைவனின் பாத கமலங்களில் இடையறாது பக்தி செலுத்தும் பண்பை வளர்த்துக்கொள்ளுங்கள். எப்போதும் அவன் நினைவாகவே வாழ வேண்டும். இறைவனின் பெயரையும், புகழையும் பாடுங்கள். எப்போதும் இறை சிந்தனையுடன் வாழ்க்கையை நடத்துங்கள். நீங்கள் இறைவனை ஒதுக்கித் தள்ளினாலும், அவன் உங்களை ஒதுக்கித் தள்ளுவதில்லை. அவன், உங்கள் நண்பன்; உங்கள் நலம் நாடுபவன்; உங்களுக்கு நன்மை செய்பவன்.

இறைவன் உங்களுக்கு அருள்புரியட்டும்.

## 75. திருவள்ளுவரின் மனைவி

தென்னிந்தியாவின் ஒரு தமிழ் ஞானி திருவள்ளுவர். அவர் தனது மனைவியின் தலையில் தண்ணீர் நிறைந்த ஒரு தட்டை வைத்து, நடனம், இசை முதலிய பல்வேறு வேடிக்கைகள் நிறைந்த ஊர்வலத்துடன் சென்றுவருமாறு கூறினார். அப்படி வரும்போது தரையில் ஒரு சொட்டு தண்ணீர் விழுந்தாலும் அவளது தலை துண்டிக்கப்படும் என்று கூறினார்.

ஊர்வலம் திருச்சிராப்பள்ளி, ஸ்ரீ ரங்கம் பெரிய கோயிலின் பிரதான வாசலிலிருந்து துவங்கியது. திருவள்ளுவரின் மனைவியும் தண்ணீர் நிறைந்திருக்கும் தட்டைத் தலையில் வைத்துக்கொண்டு ஊர்வலத்துடன் சென்றாள். அவளது உயிர் முழுமையாக அந்தத் தட்டின்மீது இருந்தது. ஊர்வலம்,

நான்கு வீதிகளையும் மூன்றுமுறை சுற்றி வந்து புறப் பட்ட இடத்தில் நின்றது. திருவள்ளுவரின் மனைவி தலையிலிருந்த தட்டிலிருந்து ஒரு சொட்டு தண்ணீர் கூட கீழே விழாமல் வந்து சேர்ந்தாள்.

திருவள்ளுவர் தன் மனைவியைப் பார்த்து, ''சரஸ்வதி தேவி! ஊர்வலத்தில் வந்த மேளதாளங் கள், இசை, குழலோசை இவற்றை நீ கேட்டாயா?'' என்று கேட்டார்.

''இல்லை'' என்று அவள் பதிலளித்தாள்.

''வாணவேடிக்கையைக் கண்டாயா?''

''இல்லை''

''அப்போது உன் மனம் எங்கே இருந்தது?''

''பிரபு என் மனம் முழுமையாக தட்டில் இருந்தது. வேறு எதுவும் எனக்குத் தெரியவில்லை. நான் எதையும் கேட்கவில்லை. எதையும் பார்க்க வில்லை. எதையும் நினைக்கவில்லை. மனம் ஒருநிலைப் பட்டு, தண்ணீர் நிறைந்த தட்டில் மட்டுமே கவனம் செலுத்திவந்தேன்.''

''இங்கே பார் சரஸ்வதி! தியானத்தின் போதும் உன் மனத்தின் நிலை இதுவாகத்தான் இருக்க வேண்டும். இதைத்தான் 'மனதை ஒரு நிலைப்படுத்தல்' என்று சொல்லுகிறோம்.''

## 76. மனத்தால் ஒன்றுபட்ட ஞானிகள்

தென்னிந்தியாவில் வாழ்ந்த சமகால ஞானியர் களான ராகவையா, நாகூர் ஆண்டவன் ஆகியோ ரின் ஒளிமயமான வாழ்க்கையைப்பற்றிய உற்சாகந் தரும் கதைகள் நூற்றுக்கணக்கில் உள்ளன.

ஒருவர் ஹிந்து, மற்ருெருவர் முஸ்லீம். அவர்களது இதயங்களில் ஒரே சத்யம் நிலேத்திருந்தது. அவர்களது மனங்களில் பிறர் நலம் பேணுதல் என்னும் ஒரே குறிக்கோள் நிறைந்திருந்தது. அவர்கள் உடலால் வேறுபட்டிருந்தார்கள். ஆனுல் இறை பக்தியில் ஒன்றுபட்டிருந்தார்கள்.

பெருமாள் நாயுடு என்று ஒருவர் இருந்தார். அவரது மாந்தோப்பில் மூன்று வருடங்களாக ஒரு மாங்காய்கூட காய்க்கவில்லே. பெருமாள், நாகூர் ஆண்டவனின் அற்புத சக்தியைப்பற்றி கேள்விப் பட்டிருக்கிருர்.

''அடுத்த பருவத்தில் தோட்டத்தில் நிறைய பழங்கள் கிடைத்தால், முதலில் கிடைக்கும் பழங் கஃள ஆண்டவனுக்கு சமர்ப்பணம் செய்துவிடு கிறேன்'' என்று பெருமாள் உறுதி எடுத்துக் கொண்டார்.

நாகூர் ஆண்டவன் அருள் அவருக்கு உடனே கிடைத்தது. அவர் உறுதி மேற்கொண்ட சில நாட் களில் மாமரங்கள் பூத்துக் குலுங்கின. ஒரு மாதத் திற்குப் பிறகு யாரும் எதிர்ப்பார்த்திராத நேரத்தில் மரங்களில் நிறையப் பழங்கள் பழுத்துத் தொங்கின. பெருமாள் எந்த அளவுக்கு மகிழ்ச்சியும் ஆச்சரிய மும் அடைந்திருப்பார் என்பதை எண்ணிப் பாருங்கள்!

அவருக்கு நாகூர் ஆண்டவன் அருளால்தானே அற்புதமான முறையில் பழங்கள் கிடைத்தன! ஆதலால் பெருமாள் தான் உறுதி எடுத்துக் கொண்டபடி முதலில் கிடைத்த ஒரு டஜன் பழங் கஃள நாகூர் ஆண்டவனிடம் கொடுக்கப் புறப்பட் டார். ஆண்டவனிடம் அவர் கொண்டிருந்த பக்தி

மேலும் அதிகரித்திருந்தது. ஆண்டவன் இருக்குமிடத்தை 40 மைல் கடந்து சென்று அடைய வேண்டும். இந்த 40 மைல் தூரத்தையும் நடந்தே கடக்க பெருமாள் நிச்சயித்தார். அவ்வாறே செய்தார்.

ஆண்டவனை அடைய ஏழு மைல் இருக்கும் போது ஒரு பிச்சைக்காரர் மரத்தடியில் அமைதியாக அமர்ந்திருந்தார். அவர் பெருமாளை வரவேற்றார்.

''என்ன கொண்டு செல்கிறாய்? மாம்பழமா! எனக்கு ஒன்றுகொடு.''

தான் பழத்தை எடுத்துச் செல்வதை இந்தச் சாது கண்டுபிடித்துவிட்டது கண்டு பெருமாள் ஆச்சரியப்பட்டார். ஆயினும் அந்தப் பழங்கள் அனைத்தையும் நாகூர் ஆண்டவனுக்கே கொடுக்க விரும்பினார். இந்தச் சாதுவுக்கு ஒரு பழத்தைக்கூட கொடுக்க விரும்பவில்லை. சாதுவின் வேண்டுகோளுக்குப் பெருமாள் செவிசாய்க்கவில்லை.

நாகூர் ஆண்டவனை அன்று கண்டுபிடிப்பது மிகவும் கடினமாகப் போயிற்று. அவரைத் தேடிப் பிடிக்க ஒரு மணி நேரம் ஆயிற்று. அவர் ஒரு மரத்தின் அடியில் அமர்ந்திருந்தார். பெருமாள் அந்த அரிய மாம்பழங்களை ஆண்டவனின் திருவடிகளில் வைத்தார்.

''பிரபு! அருள்புரிய வேண்டும்.'' பெருமாள் தனது உறுதிமொழியையும், பழங்கள் கிடைத்த விதத்தையும் எடுத்துரைத்தார்.

ஆண்டவன் முகத்தைத் திருப்பிக்கொண்டார்.

''ஹூம். பழங்களைத் தரச் சொன்னபோது நீ கொடுக்கவில்லை. இப்போது இந்தப் பழங்களை

ஏற்றுக்கொள்ளச் சொல்லுகிறாய். இவற்றை நீயே எடுத்துக் கொள். யாருக்கு வேண்டும் இந்தப் பழங்கள் ?''

பெருமாளுக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு சிறிது நேரத்தில் உண்மை பளிச்சென்று புரிந்தது. மறுவார்த்தை பேசாமல் அவர் வந்த திசையில் திரும்பி ஏழு மைல் தூரம் ஓடினார். அங்கே உட்கார்ந்திருந்த சாது வேறுயாருமல்ல; ராகவையா தான். அவர் இன்னும் அங்கே உட்கார்ந்திருந்தார். பெருமாள் அவரது பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்.

''மகராஜ்! என்னை மன்னித்துவிடுங்கள். எனக்கு எதுவும் தெரியாது.''

''கவலைப்படாதே. எல்லாப் பழங்களையும் என்னிடத்தில் கொடு.''

நிகழ்ந்ததற்கு வருத்தப்பட வேண்டாம் என்று பெருமாளிடம் அந்த ஜீவன் முக்தர் கூறினார். அவர் தனக்கு அவமதிப்பு செய்யப்பட்டதாக கருதவில்லை. அமரத்துவமயமான பேரானந்த நிலையினை அடைந்திருக்கும் அந்த தெய்வீக மனிதர் எந்த வகையிலும் பாதிக்கப்படவில்லை. நிகழ்ந்தது குறித்து அவர் மகிழ்ச்சியே அடைந்தார்.

ஞானியரின் ஒன்றுபட்ட தன்மையினை அறிந்த பெருமாள் பெருமகிழ்ச்சியுடன் வீடு திரும்பினார்.

## 77. பண்புக் கதைகள்

ஒரு தந்தையும் மகனும் கண்காட்சிக்குச் சென்றார்கள். கூட்டத்தில் மகன் காணமற்போய் விட்டான். ஒவ்வொருவரும் பேசிக் கொண்டிருந்தார்

கள். எங்கும் பெரும் இரைச்சல். எங்காவது தனது மகனின் குரல் கேட்கிறதா என தந்தை காதைக் கூர்மைப்படுத்திக் கொண்டு கேட்டார். மகன் கூட்டத்தில் இருப்பதை அறிந்து கொண் டார். கூட்டத்தின் பேரிரைச்சலில் மகனின் குரல் தெளிவாகக் கேட்கவில்லை. இருந்தாலும் தந்தை, மகனின் குரலை அடையாளம் கண்டு கொண்டார். குரல் வந்த திசை நோக்கிச் சென்றார். மகனைக் கண்டு பிடித்துவிட்டார்.

தந்தை ஜீவாத்மா, மகன் பரமாத்மா. உலகின் பல்வேறு பொருள்களில் ஆத்மா மறைந்திருக்கிறது. சிறிது நேர தியானத்தின் மூலம், ஜீவாத்மா இதனை உணர்ந்து கொள்ளுகிறது. ஆத்மா இல்லை என்றால் அதனை அனுபவிக்க வேண்டும் என்பதற்காக மேற் கொள்ளப்படும் முயற்சிகள் அனைத்தும் வீணாகி விடும். ஆத்மாவை மறைக்கும் திரைகள் இன்றி ஆத்மா தனித்திருக்கிறதென்றால் அதனை அடைவ தற்காக சாதனை புரிய அவசியமில்லை. திரைகள் மூலம், உலகப் பொருள்கள் மூலம் ஆன்மீக ஒளி, ஆன்மீகப் பேரானந்தம், நிலையான அமைதி அவ்வப் போது பிரகாசிக்கிறது. ஆனால் குறையுடைய மாயை அதனை மங்கச் செய்கிறது. அறிவுக் கூர்மையுள்ள தனிமனிதன் இதனை உணர்ந்து கொண்டு, மனதை ஒருநிலைப்படுத்தி, இறுதியில், ஒளிக்கு மூலஸ்தானமாக விளங்கும் இடத்தை அமைதி மற்றும் பேரானந்தத்தை, எல்லையற்ற, அமரத்துவம் வாய்ந்த பரமாத்மாவை அடைகிறான்.

## 78. சிறந்ததைத் தெரிந்தெடுத்தல்

ஒரு கோடீஸ்வரன் ஒரு உயில் எழுதி வைத்து விட்டு இறந்துவிட்டார். அவருக்குப் பல புதல்வர் கள் இருந்தனர். அந்த பணக்காரர் உயிலில் பின்

வருமாறு எழுதியிருந்தார்: ''எனது புதல்வர்களில் ஒவ்வொருவரும் என் சொத்திலிருந்து தான் விரும்பியதை எடுத்துக்கொள்ளட்டும். எனது சொத்தில் மீதம் இருப்பது முழுவதும் எனது அடிமைகளில் சிறந்தவனுக்குச் சேரும்.''

நீதிமன்றத்தில், நீதிபதி, மகன்களை நோக்கி, ஒவ்வொருவரும் தான் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு கூறினர். ஒருவன் அரண்மனையை எடுத்துக்கொண்டான். மற்றொருவன் விலையுயர்ந்த ஆபரணங்களை எடுத்துக்கொண்டான். மூன்றாவது மகன் ஒரு தோட்டத்தை எடுத்துக்கொண்டான்.

கடைசி மகனின் முறை வரும்போது, அவன் எழுந்து, ''ஐயா, நான் எனது தந்தையின் அடிமையைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுகிறேன்'' என்று கூறினான்.

அவன் ஏன் அப்படிக் கேட்டான் என்று ஒருவருக்கும் புரியவில்லை. என்ன அற்பமான ஒரு தேர்வு!

இல்லை! மற்ற சகோதரர்கள் தாம் விரும்பித் தேர்ந்தெடுத்த பொருட்களுடன் திருப்தி அடைந்து விட்டனர். மீதம் உள்ள சொத்துக்கள் முழுமையாக தந்தையின் அடிமைக்குச் சேரப்போகிறது. அந்த அடிமையைத் தான் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதன் மூலம், இயல்பாகவே மீதமுள்ள சொத்துக்களை முழுமையாக அவன் பெற்றுக்கொள்ளுகிறான். சட்டப்படி, அடிமையின் சொத்து எஜமானனைச் சேரும். இதன்மூலம் விசுவாசமுள்ள அடிமையையும், மீதமுள்ள சொத்து முழுவதையும் கடைசி மகன் பெறுகிறான்.

அறிவுசால் சாதகனின் நிலையும் இதுதான். மிகத் தாழ்ந்த ஒன்றையே அவன் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிருன். பணிவான, எளிய தவ வாழ்வை மேற்கொள்ளுகிருன். ஏழைகளுக்கும் நோயாளி களுக்கும் தொண்டு செய்வதன் மூலம் அவன் பேரா னந்தம் அடைகிருன். ஏழைகளிடத்தில் அவன் இறை வனைக் காணுகிருன். அவனுக்குக் கிடைப்பது என்ன? லோக நாயகனுடன் அவன் ஒன்ருகிவிடு கிருன். ஆன்மீகச் செல்வம் அனைத்துக்கும் அவன் எஜமானன் ஆகிவிடுகிருன். இதைவிடச் சிறந்தது எது? இந்த உலகில் அற்பமான புலன்வழிப் பொருட்களைத் தேர்ந்தெடுப்பவர்கள் தமது வாழ்க் கையை வீணுக்கிக்கொள்ளுகிருர்கள். உருப்படியாக எதையும் பெறுவதில்லை.

இறை ஞானம் பெற விருப்பப்படு. பிறகு மிகச்சிறந்த பிரபஞ்ச உணர்வு உனக்கு ஏற்படும். இந்தநிலை அடைந்தால் பிறகு எதனையும் அடை யலாம்.

## 79. துறவிகளுக்குத் தொண்டு செய்யுங்கள்

பகவான் கிருஷ்ணன் விளையாடிக் கொண்டே இடையர் குலத்தைச் சார்ந்த ஒருவரின் வீட்டுக்குள் நுழைந்தார். அங்கிருந்த கோபன் கதவைத் தாளிட்டு விட்டு, கண்ணனைப் பார்த்து, ''பிரபு! இப்போது நீங்கள் அகப்பட்டுக் கொண்டீர்கள். தயவு செய்து எனக்கு அருளாசி வழங்குங்கள். உங்களின் தெய்வீகத் திருக்கரத்தை என் தலை மீது வையுங்கள். நான் மோக்ஷம் அடைந்துவிடுவேன். அப்போதுதான் உங்களை நான் விடுவேன்'' என்று கூறினுன்.

கண்ணன் எவ்வளவோ முயற்சித்துப் பார்த் தார். கண்ணன், இடைக்குலத்தைச் சார்ந்த ஒருவன் என்று எண்ண அந்த கோபன் மறுத்தான்.

கண்ணன் மகிழ்ந்தார். கோபனை வாழ்த்தினார். கோபன் உடனே கண்ணனைப் பார்த்து, ''பகவானே, தயவு செய்து தங்கள் திருக்கரத்தை அந்தப்பானையின் மீதும் வையுங்கள்.''

கண்ணபெருமான் புன்முறுவலுடன் அப்படியே செய்தார். உடனே ஒரு மான் அதற்குள்ளிருந்து துள்ளிக்குதித்து கண்ணன் திருவடியில் வீழ்ந்தது. மானும் முக்தி அடைந்தது.

முற்பிறவியில் கோபன் ஒரு மகரிஷி. தான் உண்டு, மீதப்பட்டதை அவர் ஒரு மானுக்குக் கொடுத்துவந்தார். அந்த மான் அவருடனேயே இருந்தது. அவர் இறக்குந் தருணத்தில் மான் ஒரு வேண்டுகோள் விடுத்தது.

''மகரிஷி, எனக்கும் இந்த சம்ஸாரத்திலிருந்து விடுதலை கிடைக்கச் செய்யுங்கள். உங்களுக்கு நினைவிருந்தால் நீங்கள் இதனைச் செய்ய முடியும். நீங்கள் உங்களது அடுத்த பிறவியில் இறைவனோடு தோழனாக இருந்து வாழப் போகிறீர்கள். நான் உங்கள் வீட்டுப் பானையாகப் பிறக்கிறேன். இறைவனின் அருளை அடியேனுக்கும் பெற்றுத் தாருங்கள்.''

மகரிஷி இதற்குச் சம்மதித்தார். அடுத்த பிறவி அவர்களின் இறுதிப் பிறவி.

துறவிகளுக்குத் தொண்டு செய்யுங்கள். அவர்களிடம் பக்தி செலுத்துங்கள். உங்களிடம் பிற தகுதிகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இதன் மூலம் மட்டுமே நீங்கள் முக்தி அடைவீர்கள்.

## 80. நம்மைக் காப்பது இறைவன் பொறுப்பு

பம்பாய் துறைமுகத்துக்கு அருகில் ஆறு பேர் கொண்ட குழு ஒன்று விசைப்படகு ஒன்றில் உல்லாசப் பயணம் செய்தது. திடீரென காற்று பலமாக வீசியது. படகிலிருந்த பலர் பீதி அடைந்தனர். ஒரே ஒரு சீக்கியர் மட்டும் கவலைப்படாமல் இருந்தார்.

மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்த ஒரு ஆங்கிலோ இந்தியப் பெண், இந்த சீக்கியர் கவலைப் படாமல் உட்கார்ந்துகொண்டிருப்பதையும், அமைதியாகச் சிரித்துக் கொண்டிருப்பதையும் பார்த்து எரிச்சலடைந்தாள்.

''உமக்குப் பைத்தியமா பிடித்துவிட்டது? படகு மூழ்கப் போகிறது. எதுவும் நடக்காதது போல அமர்ந்து கொண்டிருக்கிறீரே!''

''தாயே! நம்மை நாமே படைத்துக் கொண்டோமா? இல்லை—யாரோ ஒருவன்— இறைவன்— நம்மைப் படைத்தான். நம்மைக் காக்கும் சக்தி அவனுக்கு இல்லையா? அவன் நம்மைக் காக்கவில்லை? நமது உயிர்களுக்கு யார் பொறுப்பு? இறைவன். நமக்கு தினமும் உணவளிப்பது யார்? இறைவன். நமது மூக்குத் துவாரங்களில் சுவாசம் நடைபெறச் செய்வது யார்? இறைவன். நமக்கு ஜீரண சக்தியைத் தருவது யார்? இறைவன். நமது இதயத்தில் இரத்த ஓட்டத்தை நிகழ்த்துபவர் யார்? இறைவன். நம்மைக் காக்கும் பொறுப்பு இறைவனைச் சாரும். எல்லாம் இறைவன் விருப்பப்படியே நடக்கும். தாயே! அச்சப்படாதீர்கள். இறைவன் நம்மைக் காப்பார்.''

அந்தப் பெண் இதைக்கேட்டதும் "முட்டாளே உனது முட்டாள்தனம், உன்னைக் கடலின் அடித் தளத்துக்கே அழைத்துச் செல்லப் போகிறது. வா. புத்திசாலியாக இரு. உயிர் காக்கும் பெல்ட்டை இடுப்பில் கட்டிக்கொள். எங்களுடன் குதித்துவிடு. யாரேனும் நம்மைக் காக்கும்வரை நாம் ஒன்றாக மிதந்துகொண்டிருப்போம்'' என்று கூறினாள்.

சீக்கியர் அப்படியே அசையாமல் அமர்ந்து கொண்டிருந்தார். ஆழ்ந்த சிந்தனையில் அவர் ஈடு பட்டிருந்தார். அந்த ஆங்கிலோ இந்தியப் பெண் ஒரு சிலருடன் படகிலிருந்து குதித்து விட்டாள். கடலில் மிதந்துகொண்டிருந்த கடல் மீன் அவர்களை பிடித்துத் தின்றுவிட்டது. அலைகளில் அசைந்து மிதந்து சென்ற படகு அந்தச் சீக்கியருடனும் மற் றும் சிலருடனும் பத்திரமாகக் கரை சேர்ந்தது. அவருடன் பயணம் செய்தவர்கள் அவரது கடவுள் நம்பிக்கையைக் கண்டு போற்றினர்; அவரது சீடர் களாகவும் ஆயினர்.

## 81. தெய்வ சக்தி

லோபேஸ்வரன், செல்வத்தில் புரண்டான். அவன் நிறைய செல்வத்தைக் குவித்தான். அவன் செல்வத்தைச் சேர்ப்பதற்காகவே வாழ்ந்தான். பணம் சேர்ப்பதற்காக அவன் செய்யாத இழி செயல் எதுவும் இல்லை. அவன் பணத்தைக் கொள்ளை அடித்தான். பணத்துக்காக பலரைப் புண்படுத்தினான்.

லோபேஸ்வரனின் புதல்வர்கள் ஒருவர் பின் ஒருவராக இறந்தனர். லோபேஸ்வரனை கவனிக்க யாருமில்லை. அவன் முதுமை அடைந்தான். கிராம மக்கள் அவனை ஏமாற்றினர், அவன் செல்வத்தைக்

கொள்ளை அடித்தனர். அவனை இகழ்ந்தனர். இதனால் வெறுப்பும் வேதனையும் அடைந்த லோபேஸ்வரன் அந்த கிராமத்துக்குப் புறத்தே இருந்த ஒரு தெய்வத்தை வழிபட்டான். அதுவே பரப்ரம்மம் என எண்ணினான்.

லோபேஸ்வரன் கடுமையாக உடல் நலக் குறைவு அடைந்தான். கிராம மக்கள் அவனைப் பார்த்து கைகொட்டி நகைத்தனர். ஆனால் தான் வணங்கும் தெய்வம் தன்னைக் காக்கும் என அவன் உறுதியாக நம்பினான். அவன் இறப்பதற்குச் சில நிமிடங்களுக்கு முன்னதாக அவன் வணங்கிய தெய்வம் அவன் முன் தோன்றியது. அவனை தனது மாயா சக்தியால் காசிக்கு தூக்கிச் சென்றது. அவன் காசியில் ராம நாமத்தை உச்சரித்துக் கொண்டே உயிர்துறந்து முக்தி அடைந்தான். அவன் வணங்கிய தெய்வம் அற்புதமான வகையில் அவனைக் காத்தது.

நீங்கள் எந்த தெய்வத்தை வழிபட்டாலும் அதுவே பரப்ரம்மம் என்று எண்ணுங்கள். நீங்கள் நிச்சயமாக முக்தி அடைவீர்கள்.

## 82 சங்கின் கதை

பொறாமை, மாயையின் அத்யாவசிய இயல்பு. இந்த விசேஷ குணம் எங்கும் இருக்கிறது. ஒரு பொறாமைக்காரன் இறுதியில் அனைத்தையும் இழக்கிறான் என்றும், ஒரு வரத்தை பொறாமையால் தவறாகப் பயன்படுத்துவதன்மூலம் அதன் பலனையே இழக்கிறான் என்றும் உணர்த்தும் கதை ஒன்று உண்டு.

ஒரு குறிப்பிட்ட தெய்வத்தை வணங்கிய ஒருவன், ஒரு சங்கைப் பெற்றான். அந்த சங்கை

ஊதியதும், கேட்டது கிடைக்கும். ஆனால் அடுத்த வீட்டுக்காரருக்கு அதைப்போல் இரு மடங்கு கிடைக்கும்.

அந்த மனிதன் சங்கை ஊதினான். ஒரு மாளிகை வேண்டும் என்று விரும்பினான். இவனுக்கு ஒரு அழகிய மாளிகை கிடைத்தது. ஆனால் பக்கத்து வீட்டுக்காரருக்கு இரு மாளிகைகள் கிடைத்தன. மீண்டும் அவன் சங்கை ஊதினான். ஒரு யானை வேண்டுமென்று கேட்டான். கிடைத்தது. ஆனால் பக்கத்து வீட்டுக்காரருக்கு இரண்டு யானைகள் கிடைத்தன.

சங்குக்கு உரியவன் பக்கத்து வீட்டுக்காரன்மீது பொறாமை அடைந்தான். அவன் பலன் அடைவது இவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, அவன் மீண்டும் சங்கை ஊதினான். தனக்கு ஒரு கண் பார்வை போக வேண்டும் என்று விரும்பினான். பக்கத்து வீட்டுக் காரரும் அவரது குடும்பத்தினரும் இரண்டு கண் பார்வையும் இழந்தனர். அவர்கள் வீட்டை விட்டு வெளியில் வந்தபோது, கண் பார்வை இல்லாத தால், ஒரு கிணற்றுக்குள் விழுந்தனர். இந்த மனிதனின் பொறாமையின் காரணமாக அவர்கள் உயிர் இழந்தனர்.

நிகழ்ந்ததை அறிந்த தெய்வம், பொறாமை கொண்ட அந்த மனிதனிடமிருந்த சங்கைப் பறித்துக் கொண்டு அவனைக் கடுமையாகத் தண்டித்தது.

நாம் பொறாமை கொள்ளக் கூடாது என்ற நீதியை இக்கதை நமக்கு உணர்த்துகிறது. இதையே சாஸ்திரங்களும் வலியுறுத்துகின்றன. எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும். ஒவ்வொருவரும் விரும்ப

வேண்டும். பொறாமை என்பது கொடிய நோய். அது மனிதனை முழுமையாக அழித்து விடும், அமைதி, புனிதத்துவம், மதிப்பு எல்லாவற்றையும் அது அழித்துவிடும். அது மனிதனை மயங்கச் செய்கிறது; அவனைக் குருடனாக ஆக்குகிறது.

## 83. கவலையின் கதை

ஒரு நிலச் சுவான்தார் ரூ. 4000 செலவில் ஒரு பங்களாவைக் கட்டினார். பல ஆண்டுகளாகச் சேர்த்த பணத்தைக்கொண்டு இந்த பங்களாவைக் கட்டினார். இந்த வீட்டை அவர் தானே திட்டமிட்டு, தன் மேற்பார்வையில் கட்டினார். அந்த வீடு திடீரென இடிந்து விழுவதாக அவர் கனவு காண்கிறார். சோதிடர்களிடம் இதுபற்றிக் கேட்டால் அவர்களும் வீடு இடிந்து விழுந்துவிடும் என்கின்றனர். நிலச்சுவான்தார் அடைந்த கவலைக்கு அளவே இல்லை.

அறிவுக் கூர்மையுள்ள அவரது மனைவி ஒரு யோசனை கூறினாள். அந்த வீட்டை ரூ. 4000க்கு விற்றுவிட்டார்கள். நூறு ரூபாய் நோட்டுக் கட்டுகளுடன் அவர்கள் ஒரு வாடகை வீட்டில் குடியேறினர். அன்று இரவு அவர் நிம்மதியாக உறங்கினார். அடுத்த நாள் காலை விழித்து எழும்போது அவருக்கு அதிர்ச்சி தரும் செய்தி கிடைத்தது. அவரது பழைய வீட்டுக்கு விஷமிகள் தீ வைத்துவிட்டார்கள். வீடு எரிந்து சாம்பலாகிவிட்டது. அவரே நேரில் சென்று கவலையின்றி பார்த்தார். சரியான நேரத்தில் வீட்டை விற்றுவிட்டோம் என மனதுக்குள் அவர் மகிழ்ச்சி அடைந்தார். இனி அந்த வீடு அவருடையது அல்ல. தன்னுடைய பணப் பெட்டியில் நாற்பது நூறு ரூபாய் நோட்டுக்கள் பத்திரமாக இருப்பது அவர் நினைவில் வந்தது. அவர் வீட்டுக்கு ஓடினார்.

அச்சம் அவரை மீண்டும் பற்றிக் கொண்டது. திருடர்களைப்பற்றிய பயம் அவரைப் பிடித்துக் கொண்டது. உறங்காமல் விழித்துக்கொண்டிருந் தார். தனது சொந்த சகோதரர்களையும், புதல்வர் களையும்கூட அவர் சந்தேகித்தார். அவரது மனைவி அவரை மீண்டும் கவலையிலிருந்து விடுவித்தாள். அவளது யோசனையின் பேரில் அவர் அந்தப் பணத்தை வங்கியில் டெபாசிட் செய்தார். அதற் கான ரசீதும் பெற்றுக்கொண்டார். அடுத்த நாள் ஒரு செய்தி வந்தது. அந்த வங்கியில் பயங்கரமான கொள்ளை நடந்திருக்கிறது. பணம் அத்தனையும் கொள்ளையடிக்கப்பட்டுவிட்டது. ஆனால் நமது நிலச் சுவான்தார் கவலைப்படவில்லை. அவரிடம்தான் பணம் டெபாசிட் செய்ததற்கான ரசீது இருக் கிறதே!

பிறகு, மீண்டும் அச்சம் அவரைப் பற்றிக் கொண்டது. தனது புதல்வர்கள் தன்னைச் சிறைப் படுத்திவிட்டு அந்த ரசீதுடன் வங்கிக்குச் சென்று பணத்தைத் தருமாறு கேட்கக் கூடும் என அவர் அஞ்சினார்.

ஒருநாள் கிராமத்திலிருந்து ஒரு நல்ல மனிதர் வந்தார். கிராமத்தில் நிறுவப்பட்டுள்ள அனாதை இல்லத்தை நடத்த உதவுமாறு கேட்டார். இறைவ னின் ஆணையின்படி நிலச்சுவான்தார் வீட்டுக்குள் சென்றார். வங்கி இரசீதை எடுத்து வந்தார். அதனை அந்த சாதுவிடம் நன்கொடையாகக் கொடுத்தார். அனாதை இல்லத்தில் நிலச் சுவான்தாரின் பெயரில் ஒரு கட்டடம் கட்டப்பட்டது. அவர் பண்பாளர், கருணை மிக்கவர் என்ற செய்தி ஊர் முழுவதும் பரவிற்று. மக்கள் அவரை உயர்வாக மதித்தனர். அவருக்கு இப்போது அச்சம் இல்லை. தான் வாழும்வரை தன்னைச் சுற்றி இருக்கும் மக்கள்

தன்னை மகிழ்ச்சியாக வைத்திருப்பார்கள் என்றும், தன்னைச் சுற்றி அமைதியான சூழ்நிலை இருக்கும் என்றும் அவர் அறிந்து கொண்டார். அவர் இறந்தபின் செல்லும் உலகில் இங்கு செய்த தர்மமும், அனாதைக் குழந்தைகளின் பிரார்த்தனையும் உடன் இருக்கும்.

பந்தம், கவலையைத் தருகிறது. 'எனது' என்று நீங்கள் கருதுவது உங்களுக்கு எதிரானதாக ஆகிறது. அங்கிருந்து கவலை ஊற்றெடுத்துப் பெருகுகிறது. பொருள்களிலிருந்து நீங்கள் உங்களை விடுவித்துக் கொள்ளுகிறபோது நீங்கள் கவலை இல்லாமல் இருக்கிறீர்கள். ஆசையின் வேரை அகற்றுங்கள். அனைத்தும் ஆண்டவனுடையது என்று எண்ணுங்கள். நீங்கள் அமைதியும் ஆனந்தமும் அடைவீர்கள்.

---

